# தமிழர் பண்பாட்டு வரலாறு - 2000

தொகுப்பாசிரியர்கள்
முனைவர் குருசாமி சித்தர்
முனைவர் தே. ஞானசேகரன்

2000

வெளியீடு
தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்
10/2, நால்வர் நகர், பாரதியார் பல்கலைக்கழகம் அஞ்சல்
கோவை

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | தமிழர் பண்பாட்டு வரலாறு - 2000 |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் குருசாமி சித்தர்<br>முனைவர் தே. ஞானசேகரன் |
| வெளியீடு | : | தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்<br>10/2, நால்வர் நகர்<br>பாரதியார் பல்கலைகழக அஞ்சல்<br>கோயமுத்தூர் - 641 046. |
| உரிமை | : | தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம் |
| வெளியீடு எண் | : | ஆறு |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| படிகள் | : | 1000 |
| வெளியீடு | : | ஆகஸ்டு 2000 |
| அச்சு அளவு | : | 11 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 180 |
| விலை | : | ரூ. 90/- |
| அச்சகம் | : | மாமன்னர் அச்சகம்,<br>10/2 A, நால்வர் நகர்,<br>மருதமலை ரோடு,<br>பாரதியார் பல்கலைக்கழகம் அஞ்சல்,<br>கோயமுத்தூர் - 641 046. |

தேனி மாவட்டம் தேவாரம்

# தெய்வத்திரு திருமதி ரெங்கம்மாள் அய்யாவு சேர்வை

## நினைவு அறக்கட்டளை



அறக்கட்டளை நாயகி

**தெய்வத்திரு திருமதி ரெங்கம்மாள் அய்யாவு சேர்வை**

அய்யாவு சேர்வை
அம்மை ரெங்கம்மாள்
ஞாலம் போற்றும் ஞாயாதிபர்
மூவேந்தர் தம்குடிக்கு மூப்பர்
தேவாரம் தந்த செல்வ மள்ளர்
செந்நெல்லும் வெண்ணெல்லும்
செம்மையுடன் தாம் விளைத்து
நல்லாண்மை நாட்டாண்மை செய்து
சிலம்பம் கற்பித்து
செந்நெறி போற்றி
வீர தீரராய் வாழ்ந்திட்டார்
வெற்றிக் கழல் அடி போற்றி

- குருசாமி சித்தர்

தேனி மாவட்டம் தேவாரத்தில் சேர்வைகாரர் என்ற பட்டத்துடன் சமூக அமைப்பான குடும்பனார், காலாடி, சேர்வை என்ற குழுவிற்குத் தலைவராக விளங்கியவர் தெய்வத்திரு அய்யாவு சேர்வை அவர்கள் ஆவார். இவர் சிலம்பப் பயிற்சியில் தேர்ச்சி பெற்று இவ்வட்டாரம் அறியும் வேளாண் கிழாராகவும் சிலம்பப் பயிற்சியாளராகவும் விளங்கியவர். இவரிடம் சிலம்பப் பயிற்சி பெற்ற சிலம்ப வீரர்கள் ஆயிரத்திற்கு மேலானவர்கள் ஆவர். இந்த வீர மள்ளரின் வாழ்க்கைத் துணைநலம் திருமதி ரெங்கம்மாள் ஆவார். அவர் அருளே வடிவான அன்பின் திருவுருவம் ஆவார். தம் மக்களை தம் இனத்திற்கேயுரிய ஆயுதக் கலாச்சாரம் கொஞ்சமும் அண்டாமல் வளர்த்து கல்வி மற்றும் வேளாண்மையில் ஈடுபாடு கொண்டு வளர்த்தவர்கள். அய்யாவு சேர்வை - ரெங்கம்மாள் மள்ளத்தியார் தம்பதியர் பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாத காலத்திலேயே தங்கள் பெண்களுக்குச் சொத்துக்களைச் சமமாகப் பிரித்துக் கொடுத்தவர்கள் ஆவார். இந்த அருந்தவத் தம்பதிகளின் மக்கள்

**மகன்கள்**

திரு அ. ஆண்டவர்
(சேர்வைகாரர், வேளாண் கிழார்)

திரு அ. பழனிச்சாமி I.R.S.
(துணை ஆணையர், வருமான வரித்துறை)

திரு அ. ஈஸ்வரன் தேவேந்திரர்
(வேளாண் கிழார்)

திரு அ. பாண்டியன்
(வேளாண் கிழார், வணிகர்)

**மகள்கள் & மருமகன்கள்**

திரு & திருமதி காளியம்மாள் ராஜப்பன் தேவேந்திரர்
(வேளாண்மை)

திரு & திருமதி பழனியம்மாள் கிருஷ்ணன் தேவேந்திரர்
(வேளாண்மை)

இப்பெரிய வேளாண் குடும்பத்தார் தமது பெற்றோருக்குக் காணிக்கையாக நிதி உதவி செய்து வெளியிடப்பட்டுள்ளது இந்நூலாகும்.

# முன்னுரை

தமிழர் பண்பாட்டு வரலாறு-2000 என்னும் இக்கட்டுரைத் தொகுப்பு இந்த வரிசையில் மூன்றாவது ஆகும். இந்நூல் மூத்த தமிழ்க்குடியும் தமிழ் மூவேந்தர் வம்சத்தவருமான மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்களின் பல சிறப்புமிக்க பண்பாடுகளையும் பழம் பெருமைகளையும் வெளிக்கொண்டு வருகிறது. நாட்டு மக்களுக்குத் தனது வாழ்க்கையை அர்பணித்துச் சேவை செய்யும் பெருமக்களின் வரலாறுகளையும், ஆன்மீக நெறிகளையும், வாழ்வியல் முறைகளை சிறப்பாகப் பதிவு செய்கிறது.

நெல் நாகரிகத்தின் தலைவர் வேந்தன் என்றும் மருதநில மள்ளர் குல முதல்வன் என்றும் சான்று கூறி விளக்குகிறது முதல் கட்டுரை. நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்த மள்ளர்களின் மேலாண்மையை அடையாளப்படுத்துகிறது. தமிழ் இலக்கியங்களிலிருந்து மள்ளர்களின் மாண்புகளை பல பரிமாணங்களிலும் ஊடுருவி ஆராய்ந்து மூன்று கட்டுரைகள் வெளிக்கொண்டு வருகின்றன. மள்ளர்களின் ஆன்மீக வழிபாட்டு முறைகள் பற்றி நான்கு கட்டுரைகள் ஆராய்கின்றன. தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு, நிலாப்பிள்ளை வழிபாடு, திருவிளையாடற் புராணம் நரி பரியான கதை மற்றும் பிட்டுக்கு மண் சுமந்த கதைகள், மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் அனுப்பானடி மள்ளர்களைக் கொண்டு செய்யும் திருவிழா நிகழ்வுகள், வாதிரியார்களின் சாத்தன் வழிபாடுகள், மதுரை அழகர் கோயில் கருப்பணசாமி மற்றும் அவரது 21 பந்திகளின் வரலாறு ஆகியவைகள் ஆராய்ந்து சொல்லப்படுகின்றன.

நஞ்சை நில உற்பத்தி உறவு முறைகள், நீர்நிலைகளில் மள்ளர்களின் பரம்பரை யான செயல்பாடுகள், சுற்றுப்புறச் சூழல் பற்றிய மரபுவழி அறிவியல் ஆகியவைகள் பற்றி மூன்றுக் கட்டுரைகள் பேசுகின்றன. தேவேந்திர குல வேளாளர்களின் இன்றைய சமூகப் பழக்க வழக்கங்கள், உணவு முறைகள், பஞ்சாயத்து மன்றங்கள் ஆகியவைகள் பற்றி மூன்று கட்டுரைகள் தரவுகளைக் கொடுக்கின்றன.

தமிழகம் முழுவதும் தேவேந்திர குல வேளாளர்கள் பல்லாயிரக்கணக்கில் இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்று உயிர்த் தியாகம் செய்திருக்கின்றனர், சிறைவாசம் மற்றும் பல சுய இழப்புகளுக்கும் ஆளாகி இருக்கிறார்கள். இந்நூலில் ஒரு கட்டுரை கோயமுத்தூர் மாநகர தேவேந்திரர்கள் ஒரு சிலரின் இந்திய விடுதலைப் போராட்ட பங்கேற்பு பற்றிக் கூறுகிறது.

திருச்சிராப்பள்ளி ஸ்ரீஇராஜயோக மடத்தின் 10-ஆவது குருவான தேவேந்திரர் தவத்திரு சற்குரு இராமலிங்க அடிகளார் 100 வயதைக் கடந்த மகான். சென்ற 50 ஆண்டுகளாக நீலகிரி மாவட்டம் குன்னூரில் தங்கி தமது சற்குரு ஸ்ரீஇராஜயோக ஆசிரமத்தில் தங்கி அருட்பணியும் ஏழை எளிய மக்களுக்கும் பழங்குடியினருக்கும் தங்கும் வசதி, உணவு, கல்வி கொடுத்தும் சேவை செய்து வருகிறார். அவருடைய சேவைகளைச் சுருக்கமாக ஒரு கட்டுரை பதிவு செய்கிறது.

திருச்சிராப்பள்ளியில் அன்னை ஆசிரமும், பெண்கள் நலச் சங்கமும் ஏற்படுத்தி இல்லறத் துறவியாக தமது 76 வயதில் 50 ஆண்டுகள் தமது உழைப்பையும் வருமானத்தையும் ஏழை எளிய அநாதைக் குழந்தைகள் மற்றும் பெண்கள் நலனுக்காக அர்பணித்து வரும் தென்னாட்டு தெரசா அன்னை வீரம்மாள் மள்ளத்தியார் பற்றி ஒரு கட்டுரை பேசுகிறது.

திண்டுக்கல் மாவட்டம் பழனி ஆயக்குடியில் தமிழரசர் போல் சிறந்து விளங்கி நாடாளுமன்ற உறுப்பினராகி நாட்டு மக்களுக்குச் சேவை செய்த வணங்காமுடி சலியாப்புலி சின்னக் கருப்பக் குடும்பன் பாலகிருஷ்ணன் தேவேந்திரர், மக்கள் தலைவராக வாழ்ந்து நலி வுற்றோருக்கு பாதுகாப்பு நல்கி வாழ்ந்த மள்ளர் குல மாணிக்கம் பிச்சைமுத்துத் தேவேந்திரர் மற்றும் அருள்வாக்குச் சித்தர் ஸ்ரீமான் கீதாரி கருப்பண்ண பூசாரித் தேவேந்திரர் பற்றிய கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

பல்வேறு பரிமாணங்களில் மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளார்களின் ஆற்றல்களையும் திறமைகளையும் திண்ணிய செயல்பாடுகளையும் இந்த மூன்றாம் தொகுதி வெளிக் கொண்டு வருகிறது. தமிழர்களின் பண்பாட்டு வரலாற்றில் இந்நூல் பெரும் பங்களிப்பைச் செய்கிறது. விளம்பரத்தால் ஆங்கில நாகரிகமும் ஆரிய நாகரிகமும் வடுக நாகரிகமும் தமிழர் நாகரிகத்தை அழிக்க முயற்சி செய்து வரும் இந்தக் காலகட்டத்தில் மூத்த தமிழ்க் குடியாகிய மள்ளர்கள் எப்படித் தமிழர் நாகரிகத்தைக் காப்பாற்றி வருகிறார்கள் என்பதுவும் இக்கட்டுரைகள் மூலம் வெளிப்படுத்தப்படுகிறது.

இந்நூலை அச்சிட்டு வெளியிடுவதில் தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம் பெருமை கொள்கிறது.

கோயமுத்தூர்
16.7.2000

முனைவர் குருசாமி சித்தர்
முனைவர் தே. ஞானசேகரன்

# பொருளடக்கம்

பக்கம்

# நெல் நாகரிகம்

டாக்டர் குருசாமி சித்தர்,
தலைவர், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்,
கோயமுத்தூர் - 641 046.

உலகின் நாகரிகங்களை வகைப்படுத்தும் போது தென்கிழக்கு ஆசிய நாடுகளின் நாகரிகத்தை "நெல் நாகரிகம்" (Rice Culture) என்று கூறுகிறார்கள். இந்த நெல் நாகரிகம் தோன்றியது, வளர்ந்தது எல்லாம் தமிழகத்திலே தான். தமிழகத்தில் இந்த நாகரிகம் "மள்ளர் நாகரிகம்" எனப்படுகிறது. தமிழ் இலக்கியங்கள் எல்லாம் இந்த நாகரிகத்தின் தோற்றத்தையும் இந்த நாகரிகத்தைத் தோற்றுவித்தவர்கள் பற்றியும் அதன் பண்பாடுத் தலைவர்கள் (Cultural Hero) பற்றியும் அந்தப் பண்பாடு பற்றியும் விரிவாகவும் பெருமைபடவும் கூறுகின்றன.

### தமிழ் நில வகைகள்

தமிழர்கள் மக்களின் வாழ்விடங்களை ஐந்து வகைகளாகப் (திணை) பிரித்தனர். இவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், மற்றும் பாலை எனப்பட்டது. குறிஞ்சி நிலம் என்பது மலையும் மலை சார்ந்த நிலமும் ஆகும். முல்லை நிலம் என்பது காடும் காடு சார்ந்த நிலமும் ஆகும். மருத நிலம் என்பது நீர் வேளாண்மை செய்யப்படும் வயலும் வயல் சார்ந்த நீர் வளம் மிகுந்த நிலம் ஆகும். நெய்தல் என்பது கடலை ஒட்டிய மணல் பரந்த நிலம் ஆகும். பாலை நிலம் என்பது குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் மழையின்மையாலும் கதிரவனின் வெப்பத்தாலும் காய்ந்து வரண்டு திரிந்த நிலம் ஆகும்.

### உலக நாகரிகங்கள்

ஆற்றுப் பள்ளத்தாக்குகள் மற்றும் ஆறு பாயும் சமவெளிகள் மருதநிலப் பகுதிகள் ஆகும். உலகின் பல நாடுகளிலும் நீர் வளம் மிகுந்த நதிக் கரைகளில் அமைந்த இந்த மருத நிலப் பகுதிகளிலேயே நாகரிகங்கள் தோன்றியுள்ளன. கி.மு. 3400 வாக்கில் தோன்றிய எகிப்திய நாகரிகம் நைல் நதிச் சமவெளி நாகரிகம் ஆகும். கி.மு. 3500 வாக்கில் தோன்றிய சுமேரிய நாகரிகம் யூப்ரடீஸ் - டைகிரீஸ் நதிச் சமவெளி நாகரிகம் ஆகும். கி.மு. 3000 வாக்கில் தோன்றியது சிந்து நதிச் சமவெளி நாகரிகம் ஆகும். கி.மு. 1600 வாக்கில் தோன்றியது சீன மஞ்சள் நதிச் சமவெளி நாகரிகம் ஆகும். கி.மு. 2500 வாக்கில் தோன்றிய கிரேக்க நாகரிகமும் நதிச் சமவெளி நாகரிகம் ஆகும். கி.மு.1000 வாக்கில் தோன்றியது கங்கை நதிச் சமவெளி நாகரிகம் ஆகும். இப்படிப் பல நாடுகளிலும் நாகரிகங்கள் தோன்றியது ஆற்றுச் சமவெளிப் பகுதிகளான மருத நிலங்களில் தான்.

## தமிழர் நாகரிகம்

காவிரி, தென்பெண்ணை, பாலாறு, பவானி, அமராவதி, வைகை, தாமிரபரணி மற்றும் கடல் கொண்ட பஃறுளி ஆற்றுச் சமவெளிகளான மருத நிலத்தில் தோன்றிய தமிழர் நாகரிகம் "நெல் நாகரிகம்" எனப்படும். இந்த நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்த தமிழர் மள்ளர் எனப்பட்டனர். இந்த நெல் நாகரிகம் தமிழகத்தில் தோன்றி தென்கிழக்கு ஆசிய நாடுகளான வட இந்தியா, பாகிஸ்தான், வங்காள தேசம், மியான்மர் (பர்மா), தாய்லாந்து, வியட்நாம், சீனா, இந்தோனேசியா, சப்பான் முதலிய நாடுகளுக்கும் பரவியது.

## தொல்காப்பிய வேந்தன்

தமிழகத்தில் மருத நிலத்தில் முதன் முதலில் மள்ளர்களால் நெல் கண்டுபிடிக்கப்பட்டு விளைவிக்கப்பட்ட காலத்தில்தான் குடும்பம், ஊர், பேரூர், நகரம், நாடு, அரசுகள் தோன்றின. நெல் நாகரிகத்தின் பண்பாட்டுத் தலைவன் இந்தப் பண்பாட்டினை உடைய மக்களுக்குத் தலைவனானான். தமிழ் இலக்கியங்களில் நமக்குக் கிடைக்கக்கூடிய மிகப் பழமையான நூலான தொல்காப்பியம் இந்தப் பண்பாட்டுத் தலைவனை வேந்தன் எனக் கூறுகிறது. இந்நூலில் இந்தப் பண்பாட்டுத் தலைவனான "வேந்தன்" கடவுள் நிலைக்கு உயர்த்தப்பட்ட மிகவும் வளர்ச்சியடைந்த நிலையைக் கூறுகிறது.

வேந்தன் மேயத் தீம்புனல் உலகமும்

- தொல்காப்பியம் - பொருளதிகாரம்

நெல் நாகரிகம் தோன்றிய மருத நிலத்தின் கடவுள் வேந்தன் எனக் கூறுகிறது. தொல்காப்பியம் தோன்றியது கி.மு. 500 என்று கூறப்படுகிறது. ஆகையால் இந்த நெல் நாகரிகம் அதற்கும் பல நூற்றாண்டுகள் முன்னமேயே தோன்றி இந்நிலைக்கு முதிர்ச்சி பெற்றிருக்க வேண்டும்.

பின்பு நெல் நாகரிகத்தைத் தமது பண்பாடாகக் கொண்ட மருத நில மள்ளர்களின் பண்பாட்டுத் தலைவர்கள் பலரும் வேந்தன்-வேந்தர் எனப்பட்டனர். இப்பண்பாட்டுத் தலைவர்களான தமிழக அரசர்கள் தமிழ் மூவேந்தர் சேர வேந்தன், சோழ வேந்தன், பாண்டிய வேந்தன் எனப்பட்டனர். மருத நில இறைவனான (அரசனான) வேந்தனின் வழித்தோன்றல்கள் தாம் மள்ளர் குல சேர, சோழ, பாண்டிய வேந்தர்கள்.

## பாண்டிய வேந்தன்

பாண்டியன் நெடுஞ்செழிய மள்ளரை வேந்தன் என்றதும் அவனுடைய நீண்ட மதில் கொண்ட மதுரையை மல்லன் மூதூர்

என்றதும் அவன் நெல்லின் மக்களின் குலத்தைச் சார்ந்தவன் என்பதும் பின்வரும் பாடல்களால் அறியலாம்.

வானுட்கும் வடி நீண்டமதில்
மல்லன் மூதூர் வய வேந்தே

- புறநானூறு - 18, குடபுலவியனார் பாடியது.

சீர் சான்ற உயர் நெல்லின் ஊர்
கொண்ட உயர் கொற்றவ

- மதுரைக் காஞ்சி வரி 87-88, மாங்குடி மருதனார்.
(பாண்டிய வேந்தர் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழிய மன்ளரைப் புகழ்ந்து பாடியது)

பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர்
குப்பை நெல்லின் முத்தூறுதந்த
கொற்ற நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய

- புறநானூறு 24, மாங்குடி மருதனார் பாண்டியர் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழிய மன்ளரைப் பாடியது.

## சோழ வேந்தன்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் மன்ளரை வெள்ளைக்குடி நாகனார் தமிழ் மூவேந்தருள்ளும் சிறந்த வேந்தர் எனப் பாடியது.

மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்
முரசு முழங்கு தானை மூவருள்ளும்
அரசெனப்படுவது நினதே பெரும
. . . . . . . . . . . . . . . . . . . . . .
ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடெனப்படுவது நினதே யத்தை, ஆங்க
நாடு கெழு செல்வத்துப் பீடு கெழு வேந்தே

- புறநானூறு 35, வெள்ளைக்குடி நாகனார் கிள்ளி வளவன் மன்ளரைப் பாடியது.

சாலி நெல்லின் சிறை கொள் வேலி
ஆயிரம் விளையுட்டு ஆக
காவிரி புரக்கும் நாடு கிழவோனே

- பொருநர் ஆற்றுப்படை வரி 246-248,
முடத்தாமக் கண்ணியார்
சோழ வேந்தர் கரிகாற் பெருவளந்தான் மன்ளரைப் புழகந்து பாடியது.

## சேர வேந்தன்

சேரன் பாலை பாடிய இளங்கோ மன்ளரை ஏருடைய வேந்தன்

என்றது.

விண்பொருபுகழ் விறல் வஞ்சிப்
பாடல் சான்ற விறல் வேந்தனும்மே
வெப்புடைய வரண் கடந்து
தும்புறுவர் புறம் பெற்றிசினே
புறம் பெற்ற வயவேந்தன்
மறம் பாடிய பாடினியும்மே
ஏருடைய விழுக் கழஞ்சிற்
சீருடைய விழைபெற்றிசினே

- புறநானூறு 11
பேய்மகள் இளவெயினி பாடியது

உழுபடையல்லது வேறு படையில்லை
திருவில் அல்லது கொலை வில் அறியார்
நாஞ்சில் அல்லது படையும் அறியார்

(நாஞ்சில் - கலப்பை)

- புறனானூறு 20, குறுங்கோழியூர் கிழார் பாடியது
(சேர வேந்தர் யானைகட்சேய் மாந்தரஞ் சேரல்
இரும்பொறை மன்னர் பற்றி.)

**தேவேந்திர குலத்தினரின் உயர்வு**

இந்த வேந்தர்கள் மள்ளர் குலத்தினர் என்பது சங்க இலக்கியங்கள் பலவற்றிலும் கூறப்ப்டுகின்ற்ன. வேந்தன் பின்நாளில் இந்திரன், தேவேந்திரன் என்ப்பட்டதால் இவர்களும் இவர்களின் வழித்தோன்றல்களும் தேவேந்திர குலத்தினர் என்றும் கூறப்படுகின்றனர்.

**சேர, சோழ, பாண்டியர்கள் வேந்தர்கள் என்பதையும் அவர்கள் நெல் நாகரிகத்தின் பண்பாட்டுத் தலைவர்கள் என்பதையும் இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.**

இந்த நெல் நாகரிகத்தின் தலைமக்களாகிய உழவர்களுக்கு, மள்ளர் குலத்தினருக்கு / தேவேந்திர குலத்தினருக்கு இருந்த சிறப்பை, முதன்மையைக் கிழ்வரும் பாடல்கள் காட்டுகின்றன.

உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத்தோரே
உண்டி முதற்றே யுணவின் பிண்டம்
உணவெனப்படுவது நிலத்தொடு நீரே

- புறனானூறு - 18, குடபுலவியனார் பாடியது.

சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை

- குறள் 1031.

உழதுண்டு வாழ்வாரே வாழ்வர் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர்

- குறள் 1033

மருத நில மக்கள் மள்ளர், உழவர், களமர், கடைஞர், வினைஞர், கிளைஞர், சம்பளர், தொழுவர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர் எனப்பட்டனர். உழவுத் தொழில் தலையாய தொழிலாகவும் உழவர்கள் தலைமக்களாகவும் போற்றப்பட்டனர். மன்னர்களும் வேந்தர்களும் மள்ளர் என்றும் உழவர் என்றும் பெருமைப்படக் குறிப்பிடப்பட்டனர். பிற தொழில்களில் உள்ள சாதனையாளர்களும் உழவர்களாக மேன்மையடைந்ததாகக் கூறப்பட்டனர். அதனாலேயே ஏருழவர், சொல்லேருழவர், வாளேருழவர், வில்லேருழவர் என்ற சொற்றொடர்கள் இலக்கியங்களில் ஆளப்பட்டன. உழவர், வீரர், மன்னர் என்ற மூன்று சொற்களுக்கும் பொருள்படுவதாக மள்ளர் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இம்மூவரும் மள்ளர் குலத்தினராதலால் மள்ளர் என்பதற்கு இலக்கணமாக

அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத்தாகும் மள்ளர் என்னும் பெயர்

என்று திவாகர நிகண்டும்

செருமலை வீரரும் திண்ணியோரும்
மருத நில மக்களும் மள்ளர் என்ப

என்று பிங்கல நிகண்டும் கூறுகின்றன.

நெல் நாகரிகத்தில் பண்பாட்டுத் தலைவர்கள் மற்றும் அவர்களின் சுற்றத்தார் தமது செல்வ வளத்தாலும் படை வலிமையாலும் பிற நில மக்களுக்கும் தலைவர்களாக (இறைவனாக) இருந்தார்கள். இதனைத் தொல்காப்பியம்

**மாயோன் (திருமால்) மேய காடுறை (முல்லை) உலகமும்**
**சேயோன் (முருகன்) மேய மைவரை (குறிஞ்சி) உலகமும்**
**வேந்தன் (தேவேந்திரன்) மேய தீம்புனல் (மருதம்) உலகமும்**
**வருணன் மேய பெருமணல் (நெய்தல்) உலகமும்**

- தொல்காப்பியம்

என திருமால், முருகன், தேவேந்திரன், வருணன் ஆகியோர் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம் மற்றும் நெய்தல் நிலங்களுக்கு இறைவர்கள் எனக்கூறும். பாலை நில இறைவி கொற்றவை ஆகும்.

இலக்கியங்கள், புராணங்கள் இந்தப் பண்பாட்டுத் தலைவர்களின் உறவு முறைகள் பற்றி தெளிவாகக் குறிப்பிடுகின்றன. சிவன் மள்ளர் - கொற்றவை பற்றி தெளிவாகக் குறிப்பிடுகின்றன. சிவன் மள்ளர் -

கொற்றவை எனப்படுகிற பார்வதி ஆகியோரின் குமரன் சேயோன் எனப்படுகிற முருகன் ஆகும். தேவேந்திரன் எனப்படுகிற வேந்தனின் மகள் தெய்வயானையின் கணவர் சேயோன் எனப்படுகிற முருகன் மள்ளர். கொற்றவை எனப்படுகிற பார்வதியின் சகோதரர் மாயோன் எனப்படுகிற திருமால் மள்ளர் ஆகும். வருணன் மள்ளர் வேந்தன் எனப்படுகிற தேவேந்திரருக்குக் கீழ்பட்ட ஒரு தலைவன்.

மள்ளர் குலத்தினரின், தேவேந்திர குலத்தினரின், தமிழரின் இந்த நெல் நாகரிகம் தான் பல கலைகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் தோற்றுவித்து ஆதரித்து வளர்த்து மக்களிடையே பரப்பியுள்ளது. மனித குலத்தின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், வளத்திற்கும் பண்பாட்டு மேலாண்மைக்கும் காரணமாக அமைந்துள்ளது.

**மள்ளர் - தேவேந்திர குல வேளாளர் வளமை**

" நெல் வேளாண்மைக்கு இன்றியமையாத நீரை இம்மக்கள் வேண்ட அவர்களின் இறைவனும் மாரிக் கடவுளுமான தேவேந்திரர் கோடை காலத்திலும் கொடுப்பார் என்கிறார் பெரியபுராண ஆசிரியர் சேக்கிழார் பெருமான்.

பிள்ளை தைவரப் பெருகுபால் சொரி முலைத்தாய்போல்
மள்ளர் வேனிலின் மணல்திடர் பிசைந்து கைவருட
வெள்ள நீரிடு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ள நீள் வயல் பருமடை உடைப்பது பாவி

- பெரியபுராணம், திருக்குறிப்புத் தொண்டர்
நாயனார் புராணம், பாடல் 22.

இவர் விளைத்துக் குவித்த வானாளாவிய நெற்குன்றுகள் மருத நிலத்தைக் மலைகளடர்ந்த குறிஞ்சி நிலமாகக் காட்டியது என்கிறார் இன்னொரு பாடலில்,

கைவினை மள்ளர் வானங் காக்க வாக்கிய நெற் குன்றால்
மொய்வரை யுலகம் போலும் முளரிநீர் மருத வைப்பு

- பெரியபுராணம், திருநாட்டுச் சிறப்பு, பாடல் 25.

'குன்றுடைக் குலமள்ளர்' என்னும் கம்பர் தமது இராமாயணத்தில் இவர்கள் போர்க்களத்தில் பகைவர்களின் தலைகளை வெட்டி வீழ்த்தியதை உழவு, தொளிகலக்குதல் நாற்று முடிகளைப் பரவுதல் முதலிய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறுவார்.

நெடும் படை வாள் நாஞ்சில் உழு நிணச் சேற்றின்
உதிர நீர் நிறைந்த காப்பின்
கடும் பகடு படி கிடந்த கரும் பரப்பின்
இன மள்ளர் பரந்த கையில்
கடுங்கமல மலர் நாறும் முடிபரந்த

பெருங்கிடக்கைப் பரந்த பண்ணை
தடம் பணையின் நறும் பழனம் தழுவியதே
எனப் பொலியும் தகையும் காண்மின்"

- கம்பராமாயணம், வானரர் களம் காண் படலம்,
செய்யுள் 25.

பழனிச் செப்புப்பட்டயம் (மள்ளர் மலர் அக்டோபர் 1998 பக். 20-21) இம்மக்களின் தோற்றம் மற்றும் வரலாறு பற்றிக் கூறும். உலக மக்களுக்கு செந்நெல் அமுது படைப்பதற்காக சிவனும் உமையும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களைப் படைத்தார்கள். இவர்கள் இப்பூமியில் செந்நெல்லை தோற்றுவித்தார்கள் என செப்புப்பட்டயம் பெருமைப்பட கூறும்.

தெய்வேந்திரர் வரலாறு

சிவனுயுமையும் மதிறுக் காஞ்சி தன்னில்
ஏகாம்பரரா இருந்தருள் புரிந்து
மதுரையை நோக்கி வரும் வழியதனில்
உலகலாமீன்ற உமையவள் மனதில்
திருவருள் தோன்றி சிவனிடத்துரைக்க
அரன்மன மகிழ்ந்து முகமது வேர்க்க
கரமதில் வாங்கி வரமதுக்கியந்து
வைகையில் விடுக்க
வருணன் பொழிந்துருழிக் காத்தடித்து
குளக் கரையதனில் கொடி வள்ளல் தாங்க
ஓமம் வளர்ந்து உற்பபணமாக
ஈஷ்வரி தேடி யிருளில் நடக்க
கூவிய சத்தம் குமரனை நோக்கி
வாரியெடுத்து வள்ளலை வலபுறம் வைத்து
வலமார் பிய்ந்து அமுர்தம்
பொழிந்து அஷ்த்தம் கொடுக்க
பாலன் நரிவு பணிவிடைக்காக
புரந்தரன் மகிழ்ந்து பூரித்தெடுக்க

தெய்வேந்திரன் அன்னம் படைத்தல்

கன்னல் சென்னல் கதழி பிலாவுடன்
தென்னை கமுகு செறந்த வெள்ளிலை
அன்ன மிளகு மாந்துளிற் மஞ்சள்
மல்லிகை முல்லை மகழி நுவர்ச்சி
பரிமள சுகந்தம் பாங்குடன் கொண்டு
தெய்வ சபையை தெரிசிக்க வென்று
காராவின் பாலை கரகத்திலேந்தி
சீறாக அன்னம் சிறப்பித்த போது

**தெய்வேந்திரன் விருதுகள்**

ஈஷ்வரன் மகிழ்ந்து இணைமுடி தரிக்க
அமரர்கள் மகிழ்ந்து இணைமுடி தரிக்க
அமரர்கள் மகிழ்ந்து அதிசயத் திவர்கும்
விமரிசையாக விருது கொடுக்க
மாலயன் ருத்திரன் மகேஷ்பரன் மகிழ்ந்து
பொன்முடி யதனில் பூசன மணிய
வாடாத மாலை மார்பினி லிலங்க
வெட்டுப் பாவாடைகள் வீணைகள் முழங்க
செந்நெல் சேறாடி சிறப்புடன் சூழ
வெள்ளைக் குடையும் வெங்களிறுடனே
டாலுடம்மான சத்தம் அதறிட
மத்தாளம் கைத்தாமம் மகேஷ்பரத் துடனே
எல்லா விருதும் இயல்புடன் கொண்டு
தெய்வ சபையை தெரிசனம் செய்து
பதினெட் டாயுதம் பாங்குட னெடுத்து
புரவியிலேறி பூலோக மதனில்
சென்னலா யெங்கும் சிறப்பிக்கும் போது
விசுவ கன்னாளர் மேழியும் கொடுக்க
மூவராசாக்கள் முடிமணம் சூட்ட

**செந்நெல்லை படைத்தோர்**

குகவேலருளால் குடும்பன் தழைக்க
சிவனருளாலே திருநீறணிந்து
யெல்லா வுலகும் யிறவியுள் ளளவும்
தெள்ளிமை யாத செந்நெலை படைத்தோர்
சேத்துக்கால்ச் செல்வரான
செந்நெல் முடி காவலரான
முத்தளக்கும் கையாதிபரான
பாண்டியன் பண்டான பாறதகதபரான
அளவு கையிட்டவரான
மூன்று கைக்குடையாதிபரான
பஞ்ச கலசம் பாங்குடன் வயித்து
அஞ்சலித் தேவர்கும் அன்னம் படைத்தவரான
மண்ணை வெட்டிக் கொண்டு மலை தகத்தவரான
கடல் கலங்கினும் காவேரி வற்றிலும் மலை
கலங்கினும் மனங் கலங்காத வல்லபரான
மாடக்குளத்தில் வந்துதித்தவறான
பரமசிவனுக்கு பாத பணிவிடை செய்கின்றவரான
தெய்வலோகத்தில் தெய்வேந்திரன் பிள்ளைகளாகிய
பழனித் தலத்தில் காணியாளனாகிய

நெல் நாகரிகத்தின், நெல்லின் மக்களாகிய மள்ளர்களும் அவர்களுடைய பண்பாட்டுத் தலைவர்களுமாகிய (வேந்தன்)

தேவேந்திரர், முருகன் மள்ளர், திருமால் மள்ளர், சிவன் மள்ளர், பார்வதி, சேர வேந்தர், சோழ வேந்தர், பாண்டிய வேந்தரும் அனைத்துத் தமிழ் இலக்கியங்களிலும் பலவாறும் புகழ்ந்து பேசப்படுபவர்கள். சங்க காலத் தமிழ் இலக்கியங்கள் தொடங்கி இன்று வரை இலக்கியங்களில் பேசப்படும் நெல்லின் மக்களாகிய மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்களின் பண்பாட்டு மேலாண்மை, தமிழ் வளர்ச்சிக்கும் தமிழர் முன்னேற்றத்திற்கும் அவர்கள் ஆற்றிய பங்களிப்பு அளப்பரியது. முழுமையானது.

சங்க காலம் தொட்டு சென்ற நூற்றாண்டு வரை இயற்றப்பட்ட அனைத்துத் தமிழ் இலக்கியங்களும் இந்த தேவேந்திர மள்ளர்களின் புகழ் பாடும். இலக்கியங்களில் நாட்டு வளம் என்னும் படலம் நெல் நாகரிகத்தின் மேன்மையையும் அம்மக்களின் சிறப்பையும் கூறும். ஏர் மங்கலம், வான் மங்கலம், வாள் (கலப்பையில் உள்ள கொழுவு) மங்கலம், உழத்திப்பாட்டு முதலியன அரசர்களுக்கு இணையாக இம்மக்களின் சிறப்பை உயர்த்திப் பாடும். அரசர்களின் இந்நெல்நாகரிகத்தின் தலைவர்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

இந்நெல்நாகரிகத்தினைத் தோற்றுவித்த மக்களின் தற்போதைய பெயர்களான மள்ளர், பள்ளர், தேவேந்திரர், தேவேந்திர குலத்தார், தேவேந்திர குல வேளாளர், பண்ணாடி, குடும்பன், மடையர், அதிகாரி, குடும்பனார், மூப்பனார், வாய்காரர் (வாய் - நீர்வரும் வாய், மதகு), குளத்து மள்ளர் முதலிய பெயர்களும் தற்போதும் இம்மக்களுடைய முதன்மைத் தொழில் நஞ்செய் விவசாயம் என்பதுவும் நெல் நாகரிகத்தின் தொன்மையும் தொடர்ச்சியையும் மக்களின் செழிப்பிலும் முன்னேற்றத்திலும் இந்நாகரிகத்தின் பங்களிப்பையும் உணர முடியும்.

தமிழ் மள்ளர்களின் இந்நெல் நாகரிகம் இந்தியா முழுவதிலும் இலங்கை, தாய்லாந்து, சீனா, சப்பான், இந்தோனேசியா, மலேசியா, கம்போடியா, பங்காள தேசம் முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகள் முழுவதிலும் பரவியுள்ளது. இதன் சிறப்பையும் இன்றியமையாமையையும் உணர்த்துகின்றது.



# மள்ளர் மள்ளனின் மாண்பும் வரலாற்றாளர் திரிபும்

- முனைவர். தி. கமலி
இணைப்பேராசிரியர், தமிழியல் துறை
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழக ஆய்வு மன்றம்
(கல்வியியல் கல்லூரி வளாகம்), சைதாப்பேட்டை, சென்னை - 15

உழைத்துக் கருத்த மேனியும், தழைத்த தமிழ் மரபும், வேளாண்மை தந்த அளப்பரும் விளையுளால் செல்வமும், உடல் வலியும், மானமும், மறத்திண்மையும் வாய்க்கப்பெற்ற மள்ளர் பற்றிச் சங்கவிலக்கியம் குறித்துச் செல்கிறது. மள்ளர் மள்ள! மறவர் மறவ! செல்வர் செல்வ! செரு மேம்படுக! என்றெல்லாம் புலவரால் விதந்து ஓதப்பட்ட மள்ளர் மள்ளன் யார்? அவன் மாட்சிமை எத்தகையது? அவனை வரலாற்றாளர் எங்ஙனம் இனங்காண திருபுணர்வுடன் முற்படுகின்றனர் என்பது பற்றி இக்கட்டுறை அமைகிறது.

பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்
கொடுவரிக் குருளை கொளவேட் டாங்குப்
புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினும்
ஒன்றல் செல்லா உரவுவாள் தடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக
மள்ளர் மள்ள! மறவர் மறவ!
செல்வர் செல்வ! செரு மேம்படுந!
(பெரும்பாணாற்றுப்படை. 448 456)

பொறிகளையுடைய வண்டுகள்- மொய்க்கும், யானையைத் தாக்கிச் சாய்த்த அரிமா பின்னர் புலிக்குட்டியைப் பாய்ந்து வெல்ல விரும்பியது போல், புலவர்க்குப் பேரணிகலன்களை வழங்கிச் சிறப்பித்து, பகைவரது காவல் மிக்க மதிலை வெற்றிகொள்ளும் வீரமிக்க வெற்றியையே விரும்புவதல்லது அப்பகையரசர் வணங்கித் தொழ உடன்பட்டாலும், அதற்கு மனம் பொருந்துதல் நிகழாமைக்குக் காரணமான வலிய வாளை உடைய தடக்கையையும், பகைப்புலத்தை வென்று பெற்ற செல்வத்தையுடைய தொண்டையோர் மருகனே! போர் மறவர் நன்கு மதிக்கும் சிறந்த போர் வீரனே! மறவர்தம் மறவனே! செல்வர்க்கெல்லாம் செல்வனே'. போர்த் தொழிலிலே வெற்றிவாகை சூடுபவனே! என்று புலவர் உருத்திரங்கண்ணனாரால் போற்றப்படுபவன் பெரும்பாணாற்றுப்படைக்குத் தலைவனாகிய மன்னன் தொண்டைமான் இளந்திரையன் ஆவான்..

'மள்ளர் மள்ள! என்று போற்றப்படும் இவ்வரசன் 'வள்ளல்' 'மன்னன்' எனும் சிறப்புக்களைப் பெற்றவனாக இருந்ததோடல்லாமல், தெள்ளிய நல்லிசைப் புலவனாகவும் இருந்தான் என்பதை அவன் பாடியதாக நற்றிணையில் இடம்பெற்றிருக்கும் பாடல்கள் மூன்றும், புறநானூற்றிலமைந்துள்ள பாடல் ஒன்றுமென்றிந்த திம்பாடல்கள் காட்டுகின்றன. அம்மன்னனாகிய நல் இசைப்புலவன் தன் போன்ற பிறமன்னர்களுக்கு அரசியல் நுணுக்கத்தினைச் செவியறிவுறுத்தும் முகமாகப் பாடியுள்ள புறநானூற்றுப் பாடல் வருமாறு:

காலபார் கோத்த ஞாலத் தியக்கும்
காவற் சாகா டுகைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினிது படுமே
உய்த்தல் தேற்றா னாயின் வைகலும்
பகைக்கூ ழள்ளற் பட்டு
மிகப்பஃ றீரோய் தலைத்தலைத் தருமே

(புறநானூறு, 185)

என்பதாம்! உலக இயற்கையை நிலைநிறுத்தி நாட்டில் செலுத்தப்படும் நாடு காவலாகிய சகடத்தினைச் செலுத்துவோன் மாட்சிமையுடையவன் ஆயின், உலக வாழ்வும் கேடற்றுச் சான்றோர் வகுத்த நெறிவழியே நன்கு நடக்கும். அவ்வாறு காத்தல் இலனாயின், எந்நாளும் பகையென்னும் சேற்றிலே அழுந்தி அவன் கெடுவதுடன், அவன் குடிமக்களும் பலப்பல துயரங்களுக்கும் உள்ளாகிக் கெடுவர் என்று பொருள்படும் இப்பாடலைப் பாடிய இம்மள்ளர் மள்ளனைப் புலவர் உருத்திரங்கண்ணனார், 'தமிழ்வேந்தர் முக்குடியுள் தோன்றியோருள்ளும் இவன் பெருமைமிக்க சான்றோன்' என்கின்றார். 'அறம்புரி செங்கோலின்' என்றும், 'திரைகொணர்ந்து ஏறவிட்ட மரபினன்' என்றும் 'தொண்டையோர் மருகன்' என்றும், 'பகைப்புலத்துக் கொண்டியுண்டியை உடையோர் குலத்தினன்' என்றும், 'காஞ்சியிலிருப்போன்' என்றும், 'இவனை நயத்தார்நாடு பொன் பூத்தன்' என்றும், 'பகைத்தார் மன்றம் பாழ்பட்டன ' என்றும், 'நயந்தோரும் துப்புக்கொள வேண்டியோரும் இவன் திருமுற்றத்தே செவ்விபெறாதே காத்துக்கிடப்பர்' என்றும், இவன் பரிசிலரைக் கண்டவுடன், பரிந்து உடைநல்கி, உண்டிநல்கி, உறையுள் நல்கி, பொற்றாமரை முதலியன சூட்டிப்போற்றி, யானை, தேர், புரவி, அணிகலன் முதலிய சிறந்த பரிசில் நல்குபவன்' என்றும், சோழ குலத்தினனான இவன் அச்சோழர் குலத்துப் பிறமன்னரினும் ஏனைய இரண்டு தமிழ் மன்னரினும் இவன் சிறந்தவன்' என்றும் கூறுவார்.

மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்
முரசு முழங்குதானை மூவ ருள்ளும்
இலங்கு நீர்ப்பரப்பின் வளைமீக் கூறும்

வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல்வேல் திரையன்

என்று உருத்திரங்கண்ணனாரால் சிறப்பிக்கப்படும் இப்பெரும்பாணாற்றுப்படை நாயகன் ஆய்குடி, வேளிர்குடி, எவ்விகுடி, அதியர்குடி என்று பற்பல மன்னர் குடிகள் இருந்தாற்போன்று, 'தொண்டையர்குடி' என்ற குடியினனாதல் வேண்டும். ஏனெனில், 'உரவுவாள் தடக்கைக் கொண்டியுண்டித் தொண்டையோர்' என்றும், பொருவார் மண்ணெடுத் துண்ணும் அண்ணல் யானை வண்டேர்த் தொண்டையர்' என்றும், 'வினைநவில் யானை விறல்போர்த் தொண்டையர்' என்றும் கூறப்படுகின்றனர், என்று ஒரு கருத்து தொண்டையோராக அடையாளப்படுத்தும்.

'மள்ளர் மள்ள' என்று சிறப்பிக்கப்படும் இம்மன்னனை வடநாட்டின்கண் வாழ்ந்த துரோணமரபினர்' என்று காட்டுதற்கு வரலாற்றாளர் ரா. ராகவய்யங்கார் பெரிதும் முயல்கின்றார். தண்டமிழ் நாட்டின் தண்டமிழ்க் குடியாய்ப் பண்டைநாள் தொட்டுக் கண்டிருந்த குடியைத் தமிழ்க்குடி அல்லாத அயற் குடியனராக்க இம்மறையோர் பெரிதும் முயல்வதை அவர் ஆராய்ச்சி நூல் கண்டு தெளியலாம்.

"இம்மன்னனது காவலர்பார் கோத்து ஞாலத்தியக்கும், எனும் பாட்டுதான் எத்துணை அழகிது! எத்துணை இனிது? எத்துணைத் தெளிவுடைத்து! எத்துணை ஆழ்ந்தது! இத்தகைய திம்பாடலைத் தமிழினத்தில் பிறந்து, தமிழ்நாட்டிலே வளர்ந்து, தமிழாலே பண்பட்டுச் சிறந்த தமிழ் மக்களை அல்லால் வடநாட்டிலிருந்து குடியேறிய ஆரிய வகுப்பினர் அவர்தான் எத்தனை தலைமுறை ஈண்டு வாழ்ந்தவரேனும் பாடவல்லுனர் ஆவரோ உரைமின்?' என்று பொ.வே. சோமசுந்தரனார் வருந்துவர்.

அருந்திறல் வீரனாகவும், பெருங்கொடை வள்ளலாகவும், குடிகளைக் காக்கும் தாயொத்தவனாகவும், கல்வி கேள்வியில் வல்லவனாகவும், சிறந்த பாவியற்றும் ஆற்றலினனாகவும் இருக்கும் பட்சத்தில், 'மள்ளர் மள்ளன்' எத்தனை இலகுவாக 'ஆரியனாக ஆரிய வமிசாவளி வந்தவனாகக்' கற்பிக்கப்படுகிறான் என்பதை நோக்கும்போது, 'சிறப்பெல்லாம் தமக்கே; தம்மினத்தாரே சிறந்தவர் அல்லது சிறந்தவரெல்லாம் தம்மினத்தர்; தம்மினந் தவிர தாழ்ந்ததுவே வேறெல்லாவினமும்' என்ற உறுதிப்பாடான கருத்துகளைக் கொண்டிருக்கும் ஓரிரு வரலாற்றாளர்தம் திரிபுவாதப் போக்கிற்கு 'மள்ளர் மள்ள'னும் இருக்கப்படுவதைச் சான்று காட்டலாம்.



# தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடும் நிலாப் பிள்ளை வழிபாடும்

- டாக்டர் தே. ஞானசேகரன்
பாரதியார் பல்கலைக்கழகம், கோயமுத்தூர் - 641 046.

சங்ககாலம் தொடங்கி இன்றுவரை நெல் வேளாண்மையை உயிர் மூச்சாகக் கொண்டு வாழும் நெல்லின் மக்களாகிய மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள் அன்றுமுதல் இன்றுவரை மருதநிலக் கடவுளான வேந்தனை (இந்திரன் - தேவேந்திரன்) தமது குல முதல்வனாகவும் மழையின் கடவுளாகவும் கருதி வழிபட்டு வருகின்றனர். இக்கட்டுரை ஈரோடு மாவட்டத்தில் இம்மக்களால் வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார் வழிபாட்டையும் நிலாப் பிள்ளை வழிபாட்டையும் அறிமுகம் செய்கின்றது.

**வேந்தன் விழா (இந்திர விழா)**

உழவுத் தொழிற்கு இன்றியமையாத மழை விண்ணிலிருந்தே பெய்வதால், விண்ணுலக வேந்தன் மழைக்கு அதிகாரியானான். நல்வினை செய்தவர்களின் உயிர்கள் இறந்த பின் மேலுலகத்திற்குச் செல்லுமென்றும், உலகில் (மருதநிலத்தில்) அரசனாயிருந்தவன் மறுமையில் மேலுலகத்திலும் அரசனாவான் என்றும் மருதநில மாந்தர் கருதி முதன் முதலில் இறந்த அரசனையே வேந்தன் என்று பெயரிட்டு வணங்கினார்கள். மழை மேலிருந்து பெய்வதால் மேலுலக வேந்தனாகிய தங்கள் தெய்வத்தினிடமிருந்தே வருவதாகக் கருதி, மழை வளத்திற்காகவும் அவனை வழிபட்டார்கள் (1). என்று தேவநேயப் பாவாணர் கூறுவார். இவரே ணிவேந்தன் விழா ஆண்டுதோறும் மூவேந்தர் நாட்டில் கொண்டாடப்பட்டது. அதை தேவேந்தரே நடத்தினர். சிவ மதமும் திருமால் மதமும் தோன்றிய பின், வேந்தன் விழா படிப்படியாகக் கைவிடப்பட்டது. இறுதியாக அதை நடத்தி வந்தவர் புகார்ச் சோழரே. ஆரியர் (பிராமணர்) தென்னாடு வந்தபின், வேந்தன் விழா வடநாட்டிற் போன்றே இந்திர விழா என்பட்டது (2).

இந்திர விழா என்பது பழங்காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் எடுக்கப்பெற்ற ஒரு விழாவாகும். நாடு நோயின்றி வளமுற இந்திரனுக்கு விழா நிகழ்த்துமாறு அகத்திய முனிவர் ஆணையிட, அதன்படி தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்னும் சோழ மன்னன் இந்திரனை வேண்டி, அவன் இசைவு பெற்று ஆண்டுதோறும் தன் தலைநகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் இவ்விழாவினை நடத்தி வந்தான். பின்னர் வந்த சோழ மன்னர்களும் தொடர்ந்து நடத்தி வந்தனர். நெடுமுடிக்கிள்ளி என்னும் சோழன் இவ்விழாவை

நடத்தாததால் காவிரிப்பூம்பட்டினம் கடலால் கொள்ளப்பட்டது என்பர். இந்திர விழாவைப் பற்றிய செய்திகள் சிலப்பதிகாரத்தில் இந்திர விழாவூரெடுத்த காதையிலும் மணிமேகலையில் விழாவறை காதையிலும் இடம் பெற்றுள்ளன. இந்திர விழா நடைபெற்றதனை வான்மீகி, காளிதாசர் முதலியோர் தத்தம் நூல்களில் குறித்துள்ளனர். மருதநிலத் தெய்வமாகிய இந்திரனை மக்கள் விழவு செய்து அழைக்க, அவன் வெளிப்படுவான் என்று நச்சினார்க்கினியர் தம் தொல்காப்பிய உரையில் சுட்டியுள்ளார்(3).

சித்திரைத் திங்களில் சித்திரை விண்மீனொடு கூடிய முழுநிலவு நாளில் (சித்திரா பௌர்ணமி) இந்திர விழாக் கொண்டாடப்படும்(4). சிலப்பதிகாரத்தில் இந்திரன் கோயில் ணிஇந்திரக் கோட்டம் என்று குறிக்கப்படும். அதே போன்று நிலவு வழிபாட்டை ணிநிலாக் கோட்டம் (சிலம்பு, இந்திர விழாவூரெடுத்தகாதை பாடல்வரி - 13) என்றும் குறிப்பிடும். இந்த இரண்டு வழிபாட்டையும் குறிக்கும் வழிபாடே தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடும் நிலாப் பிள்ளை வழிபாடும் ஆகும் எனலாம். இதனை வருமாறு காணலாம்.

### தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு

வேந்தன் மேய தீம்புனல் உலகம் என்று தொல்காப்பியம் குறிப்பிடும் வேந்தனே இன்று தேவேந்திரன் என்று மருத நில மக்களாகிய மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர்களால் வழிபடப்படுகின்றான். சிலப்பதிகாரம் குறிப்பிடும் இந்திரக்கோட்ட வழிபாட்டு முறையை அதே வடிவில் இன்று இம்மக்களிடம் காணமுடியாவிட்டாலும் மழைக்கும், வயலுக்கும் அதிபதியான வேந்தனை மல்லாண்டை (வளமைத் தெய்வம்) மள்ளர்சாமி (மள்ளர்கள் வழிபடும் தெய்வம்) தேவேந்திரப் பிள்ளையார், இந்திரவிழா எனும் நாற்று நடவுத் திருவிழா என்றவாறு மழையுடனும் வேளாண் வளமையுடனும் தொடர்புபடுத்தி இம்மக்கள் இன்றும் வழிபட்டு வருவதைக் காணமுடியும்.

இந்திரனின் மனைவி இந்திராணி; ஊர்தி ஐராவதம் என்னும் வெள்ளை யானையாகும். இந்து என்ற (Indu) சொல்லில் இருந்தே இந்திரன் என்ற பெயர் பிறந்தது. இந்து என்றால் மழையைத் தருபவன் என்பது பொருள். வறட்சியைப் போக்கி உயிர் இனங்களுக்கு மழையைத் தருவித்துச் செழிப்பை உண்டாக்குபவன் என்று இந்துக்கள் இந்திரனைக் கருதுகின்றனர்(5). இதன்படி வேந்தன் வழிபாடு மறைந்து இந்திர வழிபாடு என்று சிறப்புற்று அதுவும் மறைந்து போயின. அதன் பின்பு தோன்றிய விநாயகர் அதாவது பிள்ளையார் வழிபாடு இந்தியாவில் பல்வேறு விதத்தில் வளர்ச்சி பெற்றது. மழை கொடுக்கும் கடவுளாகக் கருதப்பட்ட இந்திரன் இருந்த இடத்தை பின்னாளில் தோன்றிய பிள்ளையார் வழிபாடு கைப்பற்றியது. ஆற்றோரங்களிலும் குளத்துக்

கரையோரங்களிலும் பிள்ளையார் இடம் பெற்றார். மழை வேண்டி பிள்ளையாருக்கு மழைக்கஞ்சி காய்ச்சி ஊற்றும் வழக்கமும் தோன்றியது. மழை இல்லாத காலங்களில் வறண்டு கிடக்கும் குளத்திற்குள் பிள்ளையார் சிலையை தூக்கிப் போட்டு பின்பு குளம் நிரம்பியதும் எடுத்துக் கொள்ளும் வழக்கமும் இந்துக்களிடம் ஏற்பட்டது. இவ்வாறான செல்வாக்கு பிள்ளையாருக்கு வந்ததும் அதனை மழை கொடுக்கும் தேவேந்திரனுடன் சேர்த்து தேவேந்திரப் பிள்ளையார் என்று வைத்து வழிபடுகின்றனர். ஆனால் இங்கு வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு மருதநில மக்கள் வழிபடும் வேந்தன் (இந்திரன்) வழிபாடே ஆகும். இத்தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடுகள் ஒரு சில பள்ளு நூல்களிலும் குறிக்கப்படுகின்றன.

மழை கொடுக்கும் தெய்வம் என்பதோடு மட்டுமல்லாமல் பிள்ளையார் அதாவது விநாயகர் தேவேந்திரனின் வாகனமாகிய ஐதராவதம் எனும் யானை வடிவ உருவமுடையவனாகவும் இருப்பதால் மிக எளிதாக தேவேந்திரன் வழிபாட்டுடன் பிள்ளையார் வழிபாடு இணைந்திருக்க வாய்ப்புண்டு. இன்றும் கோயமுத்தூர் பேரூர் பட்டீஸ்வர மள்ளர் கோயிலில் நடைபெறும் இந்திர விழாவில் தேவேந்திரனின் வாகனமாகிய யானை தவறாது ஊர்வலத்தில் கலந்து கொள்வதைக் கூறமுடியும். இதல்லாமல் இம்மக்கள் வயல்களில் வழிபாடாற்றும் போது கிழக்கு திசையிலிருந்தே வழிபாடு செய்கின்றனர். ணிகிழக்கு திசைக்கு காவலன் மருதநிலக் கடவுளான இந்திரன் (6) என்பதை இங்கு நினையலாம்.

### தேவேந்திரப் பிள்ளையார் வழிபாட்டு முறைகள்

நெல் நாற்றை நடும் போது மாட்டுச் சாணியில் பிள்ளையார் செய்து அதில் அருகம்புல்லைச் சொருகி வைத்து வழிபடுகின்றனர். இது ஒரு வகை வள வழிபாடாகும். இத்தெய்வத்தைத் தேவேந்திரப் பிள்ளையார் என்றே இம்மக்கள் அழைக்கின்றனர். இத்தெய்வத்திற்கு வயலுக்குள்ளேயே இலை, தழைகளாலும், பசுங்குச்சிகளாலும் கோயில் அமைக்கின்றனர். இதே போன்று மள்ளர் சாமி எனும் பெயரில் பாரியூர் அம்மனுடன் தொடர்புபடுத்தப்பட்ட மள்ளர் கோயிலில் வாழை இலை, மற்றும் தென்னை ஒலை, பசிய குச்சிகளால் பந்தலிட்டு வழிபடுவதைக் காணமுடிந்தது. மேலும் இம்மக்கள் வயலில் ஒரு கல்லை எடுத்து வைத்து அதற்கு மல்லாண்டை எனும் பெயர் சூட்டி இலை, தழைகளால் பந்தலிட்டு மல்லாண்டைக்கு கோயில் அமைத்து வழிபடுவதையும் காணமுடிகின்றது. இவ்வகையில் வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார், மள்ளர்சாமி, மல்லாண்டை ஆகியன வயலைக் காக்கும் வேந்தனின் நினைவாக வழிபடப்படும் வள வழிபாடே ஆகும். இவ்வழிபாட்டின் போது பாடப்படும் பாடலும் இதனை உறுதி செய்யும்.

பிள்ளையார் பிள்ளையார் தேவேந்திரப் பிள்ளையார்
ஒடு போட்டு மேஞ்சாலும் ஒழுகுதும்பார் பிள்ளையார்
வாழைப் பூக் கொண்டு வந்து வடபுறமா மேயலாம்
தென்னம் பூக் கொண்டு வந்து தென்புறமா மேயலாம்

என்றவாறும் (7)

நாலு மாட்டுச் சாணியெடுத்து
நாலு சதுரம் வடித்து
நடுவே ஒரு பிள்ளையாரை நாயகமாய் வைத்து

என்றும்

ஒரு முத்தின தேங்காய் உடைத்து
முன்னால் வைத்து
சீப்போட வாழைப்பழம் எடுத்து
முன்னால் வைத்து

என்றும்

ஒரு சோட்டுப் பெண்களெல்லாம்
ஒத்த கும்மி யடித்து

என்றவாறும் பாடும் பாடல் வரிகள் பிள்ளையாருக்கு உருவம் சமைத்து இழை தழைகளால் பந்தல் போட்டு பெண்கள் கும்மியடித்து வழிபடுவதனைக் காட்டும்.

ஒரு மொழசாங் கணபதியா ஒன்னாலாயிரம் - சரவிளக்காம்
சரவிளக்கத் தீண்டிவிட்டு சரணம் எங்கும் - பொழுதுழுகும்
பொழுதுழுகுங் கெங்கையிலே பெண்களெல்லாம் - நீராடி
நீராடி நீர்குளிச்சு நீலோ வர்ணப் பட்டுடுத்தி
பட்டுடுத்தி பவுனுடுத்தி பருஞ்சி கப்பல் தேர்ப்பூட்டி
தேருக்குள்ள பூதாம தேர்முழி பொங்கல் வைக்காம
பொட்டுவெச்சு பூ முடிஞ்சு போறையே பிள்ளையாரே (8)

இப்பாடல் பெண்கள் ஆற்றில் நீராடிவிட்டு பட்டுச்சேலை அணிந்து தேவேந்திரப் பிள்ளையாரை மழைவேண்டிக் கும்மியடித்துப் பாடுவதாகத் தெரிவிக்கின்றது. கும்மி முடிவில் பிள்ளையார் ஆற்று வெள்ளத்தில் போவதாக இப்பெண்கள் கற்பனை செய்கின்றனர். ணிகப்பல் தேர்ப்பூட்டி என்ற வரியை நோக்க கடலில் நீரை உழுவது போன்று செல்வது கப்பல் ஆகும்.

அதே போன்று வயலில் நீர் நிறைய வேண்டும் எனும் உள்ளக் கிடக்கையை இம்மருதநில உழத்தியர்கள் வெளிப்படுத்துகின்றனர். இவ்வள வழிபாடு மழையின் மக்களாகிய தேவேந்திரர்களிடம் மட்டுமே இருப்பது மருதநில வேந்தன் வழிபாடே என்பதை உறுதிப்படுத்தும்.

நிலாப் பிள்ளை வழிபாடு

சிலப்பதிகாரத்தில் இந்திரக் கோட்டம் என்று இந்திரன் கோயில் குறிக்கப்படுவது போன்று நிலவை வழிபடும் கோயில் ணிநிலாக் கோட்டம் என்று குறிக்கப்படுவதைக் காண்கின்றோம். இன்றும் மதுரை மாவட்டத்தில் இம்மக்கள் வழிபடும் தெய்வங்களுக்குக் கிரிடத்தில் பிறை காணப்படுகிறது. பிறந்த குழந்தையைப் பௌர்ணமி அன்று வீதிக்குக் கொண்டு வருகிறார்கள். இரவில் நிலவு வரும் பொழுது கரங்குவித்து வணங்கி வரவேற்கும் பண்பும் தேவேந்திரர்களிடம் காணப்படுகின்றது. இவ்வழக்கங்கள் பிறை வழிபாட்டின் அடிப்படைகளாக அமைந்துள்ளன [9]. என்று வீ. ஐயனார் குறிப்பிடுவதிலிருந்தும் கொங்கு நாட்டில் இம்மக்களிடையே காணப்படும் நிலா வழிபாட்டிற்கும் இம்மக்களுக்கும் நெருங்கிய தொடர்பிருப்பதை அறியலாம். இதனை தேவநேயப் பாவாணர் வருமாறு குறிப்பிடுவார்.

சிற்றொளி வீசுதல் தவிர வேறொரு தன்மையுஞ் செய்யாவிடினும், வேனிற்கால வெப்பந்தாங்க முடியாது வருந்திய மாந்தர், தண்ணொளி வீசும் திங்களையும் போற்றினார். பிறை தொழுகென்றல் என்னும் அகப்பொருட்டுறை, திங்கள் வணக்கம் தொன்று தொட்டு நிகழ்ந்து வந்தமையைக் காட்டும். காவிரிப் பூம்பட்டினத்தில் திங்கட்கும் கோயிலிருந்தது. இளங்கோவடிகளும், திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும் என்று மங்கல வாழ்த்துப் பாடினார்.

பண்டைத் தமிழக முப்புலங்களுள், தென்புலமென்னும் பாண்டிநாடு வெப்பமிக்கிருந்தனால், பாண்டியன் திங்களைத் தன் குல முதலாகவும், குணபுலமென்னும் சோழ நாடு பனிமலை வரை தொடர்ந்து வெப்பங் குன்றியிருந்ததனால், சோழன் கீழ்த்திசையில் எழும் கதிரவனைத் தன் குலமுதலாகவும்; குடபுலமென்னும் சேரநாடு நாள்தேறும் பெருமழை பொழியும் குடமலைத் தொடரைக் கொண்டிருந்ததனால், சேரன் தீயைத்தன் குல முதலாகவும் கொண்டிருந்தனர். மூவேந்தர் குடிக்கிளைகளே, வட நாவலம் ஆரிய நாடாக மாறிய பின், ணிசந்திரவம்சம், சூரியவம்சம், அக்கினிவம்சம் எனப்பெற்றன [10] என்பார். இக்கருத்திலிருந்து மூவேந்தர் மரபுடன் தொடர்புடைய வேந்தன் வழிபாட்டுடன் தொடர்புடைய வழிபாடே திங்கள் வழிபாடு அதாவது நிலா வழிபாடு எனலாம். இதனை மதுரை மாவட்ட இம்மக்கள் வழியாகும். தெய்வங்களின் கிரீடங்களில் பிறை காணப்படுவதாகக் குறிப்பிடும் வீ. ஐயனார் கருத்தும் உறுதிப்படுத்தும்.

திங்கள் வழிபாடு வேளாண் வள வழிபாடே

கொங்குநாட்டில் ஈரோடு மாவட்டத்தில் இவ்வழிபாடு நடைபெறுகின்றது. இந்நிலா வழிபாடு அறுவடை முடிந்ததும் தேவேந்திர

குல பெண்களால் கொண்டாடப் படுகின்றது. ஒரு சிறுமியை நிலாப் பெண்ணாக ஒப்பனை செய்து பச்சைப் பந்தலின் கீழ் அமர்த்துகின்றனர். வளர்பிறை நாளில் தொடங்கி நிலாப் பிறைக்கு கும்மியடித்து வழிபாடு செய்கின்றனர். பௌர்ணமி அன்று சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. வாத்தியக் கருவிகள், கொட்டு மேளங்கள் முழங்க தாசர் சங்கு சேகண்டி இசைக்க இவ்வழிபாடு நடைபெறுகின்றது. இவ்வழிபாட்டில் தேவேந்திர குலப்பெண்கள் முளைப்பாலிகைகளை ஊர்வலமாக எடுத்து வருகின்றனர். விழா முடிவில் முளைப்பாலிகைகள் ஆற்றில் விடப்படுகின்றன. நிலாப்பெண்ணுக்கு புத்தாடை கொடுத்துச் சிறப்புச் செய்கின்றனர். மேலும் குயவர், கொல்லர் போன்றோருக்கும் புத்தாடை கொடுத்து மரியாதை செய்கின்றனர். இவ்வாறு மரியாதை செய்வது பல்வேறு வகைகளில் இவர்கள் வேளாண்மைக்கு உதவுவதால் ஆகும். இவ்விழாவில் பாடப்படும் ஒரு கும்மிப் பாடல் வருமாறு.

> புள்ளாயா புள்ளாயா தேவேந்திரப் புள்ளாயா
> புள்ளையார் பொண்டாட்டி எப்பேரு பட்டவ
> மாடு நெறஞ்சவ வயிரமணி பூத்தவ
> கழுத்து நெறஞ்சவ தொளசிமணி போட்டவ

என்றும்

> ஒரு கிண்ணம் சந்தனமா ஒன்னரைகிண்ணி குங்குமமா
> அழகான பிள்ளையாருக்கு அள்ளி அள்ளி வீசிடுவோம்

தேவேந்திரப் பிள்ளையாரையே நிலாப் பிள்ளை வழிபாட்டுப் பாடலிலும் பாடுகின்றனர். இப்பாடலின் கருத்தும் வழிபாட்டில் இடம்பெறும் சடங்குகளையும் நோக்க இவ்வழிபாடும் வேளாண் வளமையுடன் தொடர்புடைய சடங்காகவே காணப்படுகின்றது . மூத்த குடிமக்கள் ஞாயிறு போலத் திங்களுக்கும் ஆற்றல் இருப்பதாக நம்பினர். வேளாண்மைச் சமூகத்தில் திங்கள் வழிக் காலக்கணிப்பு நடைமுறைப்படுத்தப்பட்டது. வானத்தையும் நிலத்தையும் தம்பதிக் கடவுளராகக் கருதியது போலவே ஞாயிற்றையும் திங்களையும் தம்பதிக் கடவுளராக ஏற்றனர். இதனால் நிலத்திற்குரிய பண்புகளைத் திங்களுக்கும் ஏற்றினார். தொன்மக் கதைகளில் ஞாயிறும் திங்களும் தம்பதியர்களாக இடம்பெறுகின்றனர் [11].

திங்களைப் பெண்ணாக உருவகிப்பவர்கள் பிறை வளர்வதையும் தேய்வதையும் கருவுறுவதலாகவும் கருவுயிர்த்தலாகவும் கொள்கின்றனர். மேலும் பிறப்பு, பருவமடைதல், இறத்தல் போன்றவையாகவும் பிறையின் வளர்ச்சியைக் கருதுகின்றனர் [12].

சந்திரனுடைய திதிகள், கிரகணங்கள், விஷிக்கள், அயனங்கள்

போன்றவை பருவகால மாறுதல்களுடன் சேர்ந்தவை. அந்தக் காலங்களில் இனத்தவர் அனைவரையும் ஒருங்குகூடச் செய்யும் ஆவணி அவிட்டம், தைப்பூசம் போன்ற விழாக்கள் நடைபெறுகின்றன. தைப்பூச நாள் பெரும்பாலும் நிறைமதி நாளாக இருக்கும். அந்நாளில் புண்ணிய நதியில் நீராடினால் மிகுந்த புண்ணியம் உண்டாகும் என்று நம்புகின்றனர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடை மருதூரில் தைப்பூச விழா மிகச் சிறப்பாக நடைபெறும். மேலும் இந்நாளை தைப்பொங்கல் என்று கூறி உழவர்கள் கொண்டாடி வருவதைக் காணலாம்(13). இவ்வகையில் நிலா பல்வேறு வகைகளில் வேளாண் வளமையுடனும் மனித வளனுடனும் தொடர்புபடுத்தப் படுவதைக் காண்கின்றோம். இந்நிலா வழிபாட்டில் இடம்பெறும் நிலாப்பெண்ணை மணமுடித்துக் கொடுப்பது மாதிரியான சடங்கு நிலத்தின் வளத்தை பெண்ணின் வளத்தோடு தொடர்பு படுத்திக் காண்பதாக அமைகின்றது. மேலும் தேவேந்திரப் பிள்ளையாருக்கு தேவேந்திர நிலாப் பெண்ணை (வயலை) மணமுடித்துக் கொடுப்பதாகவும் அமைகின்றது. இங்கு பெண் அதாவது நிலாப்பெண்ணை வயல் தேவேந்திர என்பதாகவும் மழை என்பதாகவும் பொருள் கொண்டு மழையின் அதிபதியாகிய வேந்தனுக்கு வயல் எனும் பெண்ணை மணமுடிப்பதாகவும் கருதலாம். மேலும் பாண்டிய குல மன்னர்களின் குல முதலாக அதாவது குறியீடாகக் கருதப்படுகின்ற சந்திரவம்ச வழிபாட்டின் எச்சமாகவும் இதனைக் கருதலாம்.

இந்த நிலாப் பிள்ளை வழிபாட்டிலும், தேவேந்திர பிள்ளையார் வழிபாட்டிலும், மல்லாண்டை வழிபாட்டிலும் பெரிதும் பெண்களே கலந்து கொண்டு சடங்குகள் நிகழ்த்துகின்றனர். இவ்வாறு பெண்கள் வேளாண்மையோடு அதிகம் தொடர்புபடுத்துவதற்கான காரணங்களை நா. வானமாமலை வருமாறு விளக்குவார். ணிபுராதன விவசாயக் காலத்தில் அவர்கள் புற உலக வாழ்க்கைக்குப் பூமியே முக்கியமானவை. செழிப்புத் தெய்வங்களும் மந்திரச் சடங்குகளும் பூமியின் செழிப்புத்திறனை மிகுதியாகக் கற்பனை செய்யப்பட்டு உருவாக்கப்பட்டன. செழிப்புத்திறன் பெண்களுக்கே உண்டு என்ற நம்பிக்கை தோன்றியது. பெண்கள் தாம் முதலில் வேட்டைத் தொழிலில் இருந்து பூமியில் விதையைச் செடியாக வளர்க்கும் திறனுக்கும் குழந்தை பெறும் தகுதிக்கும் தொடர்பு உண்டு என்று புராதன விவசாயத்தில் ஈடுபட்ட மக்கள் நம்பினர். எனவே விவசாய மந்திரச் சடங்குகளில் பெண்களே பங்கு கொண்டனர் (14). என்று கூறுவதற்கேற்ப மருதநில உழத்தியர்கள் பண்டைக்காலம் தொட்டு பல்வேறு வகையான வேளாண் சடங்குகளையும் மந்திரச் சடங்குகளையும் விடாது செய்வது பின் வேளாண் தொடர்பான பல்வேறு உழத்திப் பாடல்களையும் பாடி வேளாண் வளமைக்கு இன்றும் வளம் சேர்த்து வருவதைக் காணமுடிகின்றது.

**குறிப்புகள்**

1. தேவேநேயப் பாவாணர், ஞா., ஒப்பியன் மொழி நூல், ப. 201.
2. மேலது, தமிழர் மதம், ப. 31
3. இந்திர விழா, (கட்டுரை, வாழ்வியல் களஞ்சியம், தொகுதி 3, தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம், 1991, ப. 660)
4. மேலது
5. மேலது, ப. 662
6. மேலது, ப. 661
7. அருச்சுனன், ஓ.கே., பெரியார் மாவட்டத்தில் பண்ணைப் பாடல்கள், வெளிப்படாத பி.எச்.டி பட்ட ஆய்வேடு, பின்னிணைப்புப் பாடல் எண் : 198.
8. மேலது, பா. எண் : 201.
9. ஐயனார், வீ;பள்ளர் குலச் சடங்குகள், வெளியிடப்படாத எம்ஃபில் பட்ட ஆய்வேடு, ப. 142.
10. தேவநேயப் பாவாணர், தமிழர் மதம், ப. 27.
11. ஞானசேகரன், தே; நாட்டார் சமயம் தோற்றமும் வளர்ச்சியும், பக். 29 - 32.
12. மேலது
13. மேலது
14. வானமாமலை, நா., பழங்கதைகளும் பழமொழிகளும், ப -93.



# நன்செய் நில உற்பத்தி உறவுகள்

முனைவர் அருணா. இராசகோபால்,
இயக்குநர், நீர் நுட்பவியல் மையம்,
தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக்கழகம், கோவை - 641 003.

நீர் தேங்கிய சூழலில் வளர்க்கப்படும் நெல்லை நீர்ப் பயிர் என்று சொல்லலாம். நெல் வளரும் நிலச் சூழலை அறிந்த நமது முன்னோர்கள் 'நீர்ப்புலம்' என்றனர். நீர் வாய்ப்பு பெற்றுள்ள ஆற்று வடிகால் பகுதிகளில் மேற்கொள்ளப்படும் வேளாண்மை 'நன்செய் நில வேளாண்மை' என பெயர் பெற்றுள்ளது. நீர் வளமின்றி அளவான மழை பெறும் வேளாண்மை முறை 'புன்செய் வேளாண்மை' எனப்பட்டது.

நெல் வளமும் நன்செய் நிலச் சூழல் நீர் வளத்தால் நிறைவாக அமைந்திருக்கிறது. மண்ணையும், மணி நீரையும் இணைத்து நெல் வளரும் செந்நெல் சூழலை 'மருதம்' என தமிழ் இலக்கியம் ஐந்திணையின், அருந்திணையாகச் சுட்டுகிறது.

"வேந்தன் மேய தீம்புனல் உலகம்"

என்று தொல்காப்பியம் சுட்டியது.

இத்திம்புனல் உலகத்தின் நெல் விளையும் மண்ணில் வேந்தனைத் தலைவராகக் கொண்டு நிலவளம் பேணி, நீர் வளம் காத்து, நெல்வளம் பெருக்கிய உழைக்கும் மக்களை 'மள்ளர்' குடியினர் எனத் தமிழ் இலக்கியம் காட்டுகிறது. அருந்திறல் வீரராய், பெருந்திறல் உழவராய் வாழ்ந்த மள்ளர் குடியினரும், அவர்களின் தலைவர் வேந்தனும் 'உணவெனப்படுவது நிலத்தோடு நீரே' என்று பாடுபட்டு நெல் விளைத்து, பசி போக்கி வாழ்ந்து கலை, இலக்கியம், பண்பாடு ஆகியவற்றைப் படைத்து செழுமைபடுத்தினர்.

நன்செய் நிலச் சூழல், வளம் கொஞ்சும் சூழலாக அமைந்தாலும், மனித உழைப்பு, அந்த உழைப்பின் செறிவு, உற்பத்தி உறவுகள், மனித உறவுகள் ஆகியவை தனித் தன்மையான போக்குகளையும், வீச்சுகளையும் கொண்டுள்ளன. "நெல் கழனியில் உழைக்கும் மள்ளரிகளின் கால் சேற்றில் பட்டால் மட்டுமே, அந்தணர் வீட்டுச் சோற்றுக்கு நெய் கிடைக்கும், ஆயர் வீட்டிலே கட்டித் தயிர் கிடைக்கும்" என்று கம்பர் தன் படைப்பில் மருத நாட்டு வளம் கண்டார். இந்த உழைக்கும் மள்ளர் குடியினரை, பசி போக்கும் பாட்டாளிகளை 'இனமான ஏந்தல்கள்' என்றும் குறிப்பிட்டார்.

கடுமையான உழைப்பு, நிலத்தைச் சேறாக்கி, நெல் நடவு செய்து,

களை பறித்து, நீர் பாய்ச்சி, கதிர் அறுத்து, நெல் விளைவித்து, வயிற்றுக்குச் சோறிடுவது ஒரு உயரிய பணி. ஆக நெல் விளைப்பு ஒரு தேவை; ஒரு கட்டாயம். ஆனால் எளிதல்ல. ஏதங்கள் மிகுந்தது.

நன்செய் நிலங்களில், அறுவடை முடிந்து, குறிப்பாக கோடை காலத்தில் இந்நிலங்களைப் பார்த்தால் தரிசு நிலங்களாக வெற்று நிலங்களைப் போல் காண்பதற்கு உறுத்தலாக, ஒரு வழியில் கசப்பாகவே இருக்கும். பருவமழை தொடங்கி, ஆறுகள், வாய்க்கால்கள் வழிநீர் பெற்று, நிலம் உழப்பட்டு, பண்பட்டு, நடவு செய்யப்பட்டு பசுமை போர்த்திய நன்செய் நிலச் சூழல் காண்பதற்கு இனிதாய்த் தோன்றும். இறுதியில், நெல்லும் அரிசியும், பிறவும் உண்பதற்கு உணவாய் அமைகின்றன. நன்செய் நிலத்தில் மேற்கொள்ளப்படும் வேளாண்மை, குறிப்பாக நெல் விளைப்பு எளிதல்ல; பெரியது; பேரமைப்பின் வழிபட்டது. நிலத்தின் உழப்பட்ட சேறு முதல் நெல்லாகி அரிசியாக மாறும் வரை மனித உழைப்பில், உற்பத்திக்கு உதவும் ஆற்றல் பெரிய அளவைக் கொண்டது. எதிலும் பெரியதாக அமையப் பெற்றுள்ள நன்செய் நில வேளாண்மை வரலாற்றுக் காலம் முதல் மனித சமுதாயத்தின் கூட்டு முயற்சி.

பத்து பேர் சேர்ந்தது பண்ணையம்
ஆள் பெருத்தது படை
தாள் பெருத்தது வேளாண்மை

என்றெல்லாம் நாட்டுப் புறவியல் கண்ட உண்மைகள் இன்றும் ஒப்புக் கொள்ளத்தக்க பேருண்மைகள்.

புன்செய் மற்றும் இறவை நிலங்களில், அளவான மண் ஈரத்தோடு உழுகிறோம். பண்படுத்துகிறோம்; நிலம் பண்படுகிறது. புன்செய் மண்ணின் அமைப்பை மணி அமைப்பு, திரள் அமைப்பு என்றெல்லாம் வகைப்படுத்துகிறோம். மண்ணின் நயத்தோடு, மண்ணின் அமைப்பையும் ஒழுங்குபடுத்தி நிலம் பண்பட்டதாகக் கருதுகிறோம். அடுத்து வேளாண்மையைத் தொடர்கிறோம். நீர்ப் புலங்களான கழனிகளில் நீர்பாய்ச்சி, ஓரளவு நிற்கும் நீரோடு நிலத்தை உழுகிறோம். இதனால் நிலம் சேறாகிறது. நாம் இதனை உழவு என்பதற்குப் பதிலாக 'தொழி உழவு' என்றும், 'தொழி அடித்தல்' என்றும், 'சேறு கலக்குவது' என்றும் குறிப்பிடுகிறோம். மற்ற நிலங்களில் நிலத்தைப் பண்படுத்தி மண்ணின் அமைப்பைக் காத்தல் என்கிறோம். நெல் கழனிகளில் 'சேறு கலக்குதல்" என்கிறோம். ஒரு வழியில் நிலப் பண்பாடு அழிக்கப்பட்டு, மண் சேறாகி, நிலத்தில் நீர் நிற்பதற்கு வாய்ப்பாக அமைகிறது. இதனால் நெல் கழனிகள் நீர்ப் புலமாகின்றன; இதனைப் 'பேரமைப்பு' என்று சொல்லுகிறோம். அணையில் தேக்கப்பட்ட நீரை நாம் வேறுபடுத்தி பார்க்க முடியாது. அதேபோல் சேறாக்கப்பட்ட மண்ணை வேறுபடுத்த

இயலாமல் பேரமைப்பு கொள்கிறது. நிலம் சமப்படவும், நடவு செய்யவும் சேறாக்கப்பட்ட இந்தப் பேரமைப்பில் பெரும் முயற்சிகளைச் செய்ய வேண்டியுள்ளது. இங்கே பெருந்திறல் - பெருந்திறமை வேண்டப்படுகிறது. நன்செய் நிலத்து உழவு ஒரு பெருந்திறல், ஒரு பெருஞ்சுமை நல்லவேளையாக, இந்தச் சுமை குறைக்க உழுவதற்குக் கலப்பைக்குப் பதிலாக 'டிராக்டர்' எனப்படும் இழுஉந்துகளும், 'பவர்டில்லர்' எனப்படும் விசைக்கலப்பைகளும் உழைக்கும் மக்களின் சுமையைக் குறைக்கின்றன. ஆயினும், மாடு கொண்டு உழப் பயன்படும் கலப்பையும், அதாவது ஏரும், இனியும் இருக்கும். இந்த ஏரின் வளர்ச்சி பெற்ற வடிவமைப்பே அண்மைக்கால நவீன உழு கருவிகளும், அது தொடர்பான பிற மாற்றங்களும்.

நன்செய் நிலத்தில் நாற்று நடுதல் ஒரு பெரும்பணி. நாற்றை ஏற்ற ஆழத்தில் நடுவதற்கு இதுவரை நடவுக் கருவிகள் முழு நிறைவாக இல்லை. புதிய நெல் விதைப்புக் கருவிகள் பிறந்திருக்கின்றன. அவற்றின் பங்கையும், பயனையும் எதிர்காலமே முடிவு செய்ய வேண்டும். நெற்கழனிகளில் நாற்று நடுவது நமது நாட்டில் பெரும்பாலும் பெண்களே. அல்லது சமுதாயத்தில் தாழ்நிலைக்குத் தள்ளப்பட்ட உழைக்கும் குடிகளே. "தாழ்நிலைக்கு தள்ளப்பட்டதால் நாற்று நட்டார்களா? நாற்று நட்டதால் தாழ்நிலைக்குத் தள்ளப்பட்டார்களா? என்பதை வேளாண்மைச் சமுதாய ஆய்வுகள் விளக்க வேண்டும்.

ஆசிய நாடுகளில் நெல் விளைப்பு, நெல் சார்ந்த அரிசி உணவு முதன்மையானவை. ஆசிய நாடுகளின் வேளாண்மை அறிஞர்கள் சொல்லாத ஒரு செய்தியை ஐரோப்பாவின் செக்கேஃசலோவேக்கிய வேளாண்மை அறிஞர் தெளிவாகச் சுட்டிக்காட்டினார். "நெல் நடவு முதுகெலும்பை உடைக்கிற சுமையான பணி". அதாவது "transplanting is a back breaking job" என்று குறிப்பிட்டார். ஆசிய நாடுகளில் இத்தகைய கடுமையான உழைப்பு, மனித உறவுகளையும், சமுதாய அமைப்புகளையும் துலக்கம் பெறச் செய்துள்ளது. சுமையான பணிகளை அடுத்த மக்கள் பிரிவினரிடம் சுமத்திவிட்டு, எளிய பணிகளையும் நல்ல வருமானத்தையும் தமதாக்கிக் கொள்கின்ற முயற்சிகளை நெல் வளர்க்கப்படும் நாடுகளில் காணலாம். சமயக் கோட்பாடுகள், அரசியல் கருத்தாக்கங்கள், நிர்வாக நடைமுறைகள், செயல்பாடுகள் அனைத்தும் உழைக்கும் மக்களை நெடுங்காலமாக கடுமையான பணிகளைத் தொடர வகை செய்கின்றன. உற்பத்தி உறவுகளைச் சமுதாய மாற்றம் வழி மாற்றி அமைக்க முயலும் போது மனித உரிமைச் சிக்கல்களும், சமுதாயத் தளத்தில் கொந்தளிப்புகளும் உருவாகின்றன. தென் தமிழகத்தின் இராமநாதபுரத்தில் உழைக்கின்ற குடியினர், கிருத்துவ அறவணர்கள் தந்த கல்வியைப் பெற்று அரசு ஊழியங்களில் வாய்ப்புப் பெற்ற நிலையில், உழைக்காத அடாவடிச் சாதியினர் 1930-களில் வெள்ளையர்

ஆட்சி அதிகாரத்தை மீறி, சில ஊர்கள் சேர்ந்த சாதி நாடுகளில் கொடுமையான சட்டங்கள் வழி சாதிய ஒதுக்கு முறைகளைச் செயல்படுத்தினர். இச் செய்திகளைச் சமுதாயவியல் அறிஞர் ஜே.எச். ஃகட்டன் பதிவு செய்துள்ளார். உழைக்கின்ற மக்களை ஒதுக்கு முறைகளுக்கு ஆளாக்கி தொடர்ந்து மிரட்டுவதன் மூலம் அவர்களைச் சுமையான பணிகளில் ஈடுபடுத்தியுள்ளனர்; தங்களை 'விதைக்காமல் விளைந்த கழனிகளாக' ஆக்கிக் கொண்டனர். வருணாசிரம சாதி அமைப்பு இதற்கெல்லாம் வழிவகுத்தது. இந்த நிலையில் வீரமிக்க மனித உரிமைப் போராளிகள் பேராடியுள்ளனர்; தியாகம் செய்துள்ளனர். நெல் விளைப்பு உறவுகளில் உருவான நெருடல்கள் தான் தென் தமிழகத்தின் சமுதாயச் சூறாவளியின் மையம். நெல் விளைப்புப் பகுதிகளில் இசைவான சமூக சூழலுக்கு ஒத்திசைவான வேளாண்மை உற்பத்திச் சூழல் அவசியம்; இதற்கு நவீன வேளாண்மை உத்திகள் ஓரளவு உதவியிருக்கின்றன.

நன்செய் நிலங்களில் களையெடுப்பதும், வாழை நிலங்களில் கொத்துவதும், கரும்பு வயல்களில் களை வெட்டுவதும் சுமையான பணிகள். குறிப்பாக களையெடுப்புப் பணிகளைப் பெண்களே செய்கின்றனர். அமெரிக்க நாட்டு வேளாண்மை அறிஞர் ஃகாலும் என்பவர் ஒரு அன்னிய நாட்டில் களைவெட்டி வாழ்க்கை நடத்தும் தென்னாட்டு தமிழ்ப்பெண்ணைச் சுட்டும் போது "இவள் காலை முதல் மாலை வரை சுமையான களை வெட்டும் பணி செய்கிறாள். இந்த அழகிய தமிழ்ப் பெண் பள்ளி சென்றதில்லை; அறிவாலயத்தின் படிகளை மிதித்ததில்லை. இவளுக்கு நேர்ந்தது எந்த அமெரிக்கப் பெண்ணுக்காவது நேருமா?" என்று கேள்விகளை தொடுத்தார். நன்செய் நிலங்களில் உரிய பயிருக்கும் களைகளுக்கும் ஏற்றவாறு களை மருந்துகளைப் பயன்படுத்தலாம். ஓரளவு சுமை குறைக்கலாம். ஆனால் உழைப்பை முற்றிலும் தவிர்த்துவிட முடியாது; நவீன களைக்கொல்லிகள் மனித உழைப்புக்கு மாற்றாகாது; மனித உழைப்புக்குத் துணையாகலாம்.

நன்செய்ப் பகுதிகளில் நீர்வள மேலாண்மை பெரும் பரப்பும் விரிவும் கொண்டது. ஆறுகள் பாய்ந்தோடும் பகுதிகளில் பயிர்களின் நீர்த்தேவை மற்றும் மனிதர்களின் நீர்த்தேவை ஆகியவற்றை நிறைவு செய்வதில் பல சிக்கல்கள் உருவாகின்றன. ஆற்று நீரைக் கால்வாய்கள், வாய்க்கால் வழி நெற்கழனிக்குக் கொண்டு செல்ல கட்டமைப்புகளும், நிர்வாக அமைப்புகளும் தேவைப்படுகின்றன. நன்செய் நிலங்களில் நீர் வள மேலாண்மை இறவை நிலங்களில் மேற்கொள்ளப்படுவது போல் தனித்தனியாக செய்திட முடியாது. கால்வாய்களில் நீரைப் பங்கிடுவதிலும் குறிப்பாக பற்றாக்குறைக் காலங்களில் நீரைப் பகிர்ந்து கொள்ளவும் உழவர் அமைப்புகள் தேவைப்படுகின்றன. கால்வாய்ப்

பாசனப் பகுதிகளிலும், குளத்துப் பாசனப் பகுதிகளிலும் நீர்வள மேலாண்மைக்கு "நீர்மணியம்" என்னும் முறைசாரா அமைப்பு தமிழக அளவில் உதவியிருக்கின்றன. முறைசாரா நீர்மணிய அமைப்பில் 'நீராணிக்கம்' என்போர் 100 எக்டர் பரப்பளவில் தண்ணீரைப் பிரித்தளிப்பார்கள். இவர்களுக்குக் கீழ் 'நீர்க் கட்டிகள்' என்போர் 10 எக்டர் பரப்பளவில் நீர் பாய்ச்சுவார்கள். பகலும் இரவும் இவர்கள் கூட்டாகப் பணியாற்றுவார்கள். குறிப்பாகப் பற்றாக்குறைக் காலங்களில் சீராக நீர் நிர்வாகம் செய்வார்கள். நீர் நிர்வாகத்தோடு வெள்ளம் ஏற்படும் காலங்களில் மக்கள் ஒன்று சேர்ந்து வெள்ளத் தடுப்பிலும், தவிர்ப்பிலும் கூட்டாக ஈடுபடுவார்கள். நெல் அறுவடையில் ஆண், பெண் தொழிலாளிகள் அறுவடை செய்து அறுத்த அரிகளை கட்டாக்கி சுமந்து, களத்தில் சேர்த்து, நெல்லையும் தாளையும் பிரிக்கின்றனர், தாளைப் போராக்கி, நெல்லைத் தூற்றி, புடைத்து நெல் மணிகளை விளைச்சலாகப் பெறுகின்றனர். நெல் அறுவடையில் ஊதியம் கருதி, அறுவடையில் பெரும்பாலும் பங்கு பெறுகின்றனர். நெல் அறுவடைக்கும், நெல்லை அடித்து மணிகளைப் பிரித்தெடுக்கவும் தனித்தனி கருவிகள் உள்ளன. இக்கருவிகளை சிறு உழவர்கள் வாங்கஇயலாவிட்டாலும், வேளாண்மை சேவைகளுக்காக அமைப்புகள் வழி பயன்படுத்தும் வாய்ப்புகள் உள்ளன. இதனால் வேலை வாய்ப்பும் பெருகும். குறிப்பாக அறுவடையின் போது பெய்யும் மழையால் ஏற்படும் இழப்புகளைத் தவிர்க்கவும் கதிரடிப்பு இயந்திரங்கள் பயன்படும். அறுவடையையும், கதிரடிப்பையும் சேர்த்து செய்யும் இணைந்த இயந்திரங்களும் உள்ளன; தேவைக்கேற்ப இவற்றை உழவர்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஆசிய நாடுகளின் நெல் விளைப்புப் பகுதிகளில் இப்போது சொல்லப்படுகின்ற பொருளியல் கோட்பாடு

நெல் விளைப்பு சுமையானது
நெல் வறுமையின் உடன் பிறப்பு

என்பதாகும். அதே சமயம் தமிழ் இலக்கியத்தின் பள்ளுப்பாடல்கள் வழி நம்பிக்கையுடைய கோட்பாடுகள் மீட்டெடுக்கப்பட்டுள்ளன. நெல் விளைவிக்கும் உழைக்கும் மக்களை

"நெல்லின் மக்கள்
மழையின் மக்கள்
ஏருடன் பிறந்தவர்கள்
சேற்றுக்கால் செல்வர்கள்
செந்நெல் முதுகுடியினர்"

என்றெல்லாம் பெயர்சூட்டி நம்பிக்கையான கருத்தியல்கள்

மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ளன. இது புதிய விழிப்புக்கு நம்மை இட்டு செல்கிறது.

இன்று பன்னாட்டு அளவில் நெல் வளர்ப்பில் உழைப்பை கூட்டு முயற்சியால் எளிமைபடுத்தி வெற்றி கண்ட நாடு சீனப் பெருநாடு. பொது உடைமை அமைப்பில் பெரும்பணிகள் எளிதாக முடிக்கப்படுகின்றன. நெல் கதிர் முதிர்ந்த நிலையில் மஞ்சள் நிலம்; காலை நேர காட்சி அறுவடை செய்யப்பட்ட நிலையில் அதே நிலம் இளங்கருப்பு நிலம்; இது நண்பகல் காட்சி. உழுது பண்படுத்தப்பட்டு நடவு செய்யப்பட்ட நிலம் மாலையில் பசுமையான நிலம் என அழைக்கப்படுகிறது. இந்த மூன்று நிலைகளிலும் கூட்டான மனித உழைப்பு, எண்ணிக்கையில் மிகுந்த எந்திரங்களின் செயல்பாடு, மொத்தத்தில் ஒரு நிலப் படையின் ஒரு நாள் படைப்பு இந்த மூன்று காட்சிகள்.

கலப்பு வீரிய நெல்லை பெருமளவு விளைவிக்கும் சீனத்தின் வெற்றிக் கதையில் நிலப் படையின் பணி பெரிது. நன்செய் நிலப்பணிகள் அனைத்தும் பேரமைப்பு கொண்டவை. தனி மனித முயற்சிகள் இங்கு சுமையானவை; கூட்டு முயற்சியே எளிதானவை; சுகமானவை.

தமிழ் நாட்டின் வரலாற்றின் முற்கால சோழர் காலத்தில் காவிரியின் வடிநிலப் பகுதிகளில் நிலம் அரசின் உடைமையாய் இருந்தது. இவற்றை எவரும் வாங்கவோ விற்கவோ முடியாது. மக்கள் நிலத்தில் விளைப்பு பெற முடியும்; விளைப்பில் ஆறில் ஒரு பங்கை அரசிற்குத் திர்வையாக செலுத்த வேண்டும். தமிழ்ச் சமுதாயம் ஒரு தொல்பழம் பொதுவுடைமைச் சமுதாயமாக விளங்கியது. இதனைப் பன்னாட்டு தமிழ் ஆராய்ச்சி மன்றத்தின் தலைவர் சப்பானிய அறிஞர் முனைவர் நொபுரு. கரஷீமா குறிப்பிடுகிறார். தமிழகத்தின் வேளாண்மைச் சூழலில் ஒரு பொது விளைப்பு முறை நிலவியது அன்றைய வரலாற்றுத் தேவை. பேரமைப்பு கொண்ட நில உற்பத்தி முறையில் கூட்டு முயற்சிகளே வெற்றி பெறும், உழைக்கும் மக்கள் மதிக்கப்படுவார்கள். தொழில் நுட்ப உத்திகளும், நவீன கால அறிவியல் முறைகளும் மனிதர்களின் கூட்டு முயற்சியில் மட்டுமே வெற்றி பெற முடியும். நிலப்பண்பாடு முதல் பல வேளாண்மைப் பணிகளுக்கும் கூட்டு முயற்சி, கூட்டு உழைப்பு, கூட்டாக திட்டமிடுவது ஆகியன அடிப்படைத் தேவைகள். கூடி வாழ்ந்து சேர்ந்து உழைத்து எதிர்காலத் தேவைகள், மக்கள் தொகைக் கட்டுப்பாடு, சுற்று சூழல் பாதுகாப்பு ஆகியவற்றிற்கும் திட்டமிடலாம். தமிழகமெங்கும் இப்போது நிலவும் ஒரு பாலைநில வாழ்வு வழமைக்கு மாற்றாக பலரும் சேர்ந்து உழைக்கும் மருத நில வாழ்வின் கூட்டு வாழ்வு விழுமங்கள் தேவைப்படுகின்றன.

இதுவே நன்செய் நில உற்பத்தி உறவுகளும் முறைகளும் வழங்கும் செய்திகள்.

குறிப்பு : அனைத்திந்திய வானொலியின் கோவை நிலையத்தினின்று 8.10.99ஆம் நாள் வயலும் வாழ்வு நிகழ்ச்சியில் இரவு 7.25க்கு ஒலிபரப்பப்பட்ட உரை. காலச்சுருக்கம் கருதி பதிவு செய்யப்படாமல் விடுபட்ட பகுதிகளும் உண்டு, பதிவு செய்து விடுபட்ட பகுதிகளும் உண்டு. கட்டுரைகளுக்கு தெளிவு கருதி எழுதப்பட்டவை இவண் இடம் பெறுகின்றன.





# புறநானூற்றில் மள்ளர் இனக்குழு

டாக்டர் ஆ. திருநாகலிங்கம், M.A., M.Phil., Ph.D.,
தமிழியல் துறை, புதுவைப் பல்கலைக் கழகம்,
புதுச்சேரி 605 014.

இந்திய சமுதாய வரலாற்றில் தொன்மைக் காலத்தில் மக்களிடமிருந்த தொழில் பிரிவுகளே காலப்போக்கில் சாதிப் பிரிவுகளாக மாற்றம் பெற்றன என்றும், தொடக்கக்காலக் கூட்டுச் சமதாயத்திலிருந்த இனக்குழு அமைப்புக்களே இன்றிருக்கக் கூடிய சாதிப் பிரிவுகளாக மாற்றம் பெற்றன என்றும் இருவேறு கருத்துக்கள் சமூகவியல் அறிஞர்களால் விவாதிக்கப்படுகின்றன. தொடக்கக் காலத்திலிருந்த குலங்கள் (Clan) அகமணத்தை ரத்து செய்ததின் மூலம் குல இனக்குழுக்கள் தோன்றியுள்ளன. குல இனக்குழுக்கள் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொண்டு வாழ்ந்ததால் பிற இனக்குழுக்களுடன் தொடர்பற்றுப் போவது/போனது சாதியின் தோற்றத்திற்கு அடிப்படையாக அமைந்திருக்கின்றது.

தொழில் பிரிவுகள் சாதிப் பிரிவுகளாக மாறியுள்ளன என்றால் இன்று வெவ்வேறு இனத்தவர் ஒரு தொழிலைச் செய்ததினால் ஒரே சாதியினர் என்று கூறுவதில்லை. இன்று தொழில் மாறினாலும் ஒருவனின் பிறப்பே அவனுடைய சாதியைத் திர்மானிக்கின்றது. ஒருவன் வேறு சாதியில் மணம் செய்தாலும் அவன் எந்தச் சாதியில் பிறந்தானோ அதுவே அவனது சாதி அடையாளத்தை நிலைநிறுத்தும் கருவியாக உள்ளது. பிறப்பு சாதியைத் திர்மானித்தல் என்பது இனக்குழுக்களே சாதிகளாகத் திரிந்தன என்ற கருத்தை வலியுறுத்துவதாக அமைகின்றதெனலாம்.

இன்றைய தமிழகத்தில் காணப்படும் மிகத் தொன்மையான இனக்குழுக்களில் பள்ளர் என்பதும் ஒன்றாகும். இவர்கள் பழந்தமிழகத்தில் மள்ளர் என்ற பெயரில் இனக்குழுக்களாக இருந்துள்ளனர். இந்த நிலையைப் புறநானூற்றின் துணையுடன் காணலாம்.

புறநானூற்றில் இனக்குழுத் தலைவன், குறுநில மன்னன், வேந்தன் ஆகியோரைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இனக்குழுத் தலைவர்கள் சிறூர் மன்னர், சிறூர் வண்மையோன், சிறுகுடிக்கிழான், சிறூர் மதவலி, சிறூர் நெடுந்தகை, மறவர் பெருமகன், கோவலர் வீரன், புன்புலத்து வேலோன் என்று சுட்டப்பட்டனர். இனக்குழுத் தலைவர்கள் பலரோடு சேர்ந்து உணவு உண்பவர்களாகவும், காலைக் கள்ளைக்

குடித்து விட்டுத் தூசி நிறைந்த முற்றத்தில் உறங்குபவர்களாகவும், விரிப்பேதும் இல்லாமல் தரையில் படுத்து உறங்குபவர்களாகவும், கைப்பொருள் ஏதுமில்லாதவர்களாகவும், விருந்தினரை உபசரிக்க தன்னிடமுள்ள வாளை அடகு வைப்பவர்களாகவும் இருந்துள்ளனர். இவர்கள் மக்களுடன் தன்னை அய்க்கியப்படுத்திக் கொண்டவர்கள். இவர்கள் தமிழகத்தின் மூத்த குடிமக்களாவர்.

புறநானூற்றில் காணப்படும் இனக்குழுக்களில் மள்ளர் இனக்குழுவும் ஒன்றாகும். புறநானூற்றில் மள்ளர்,

1. 'மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்'
2. 'உடன்று மேல்வந்த வம்ப மள்ளரை'
3. 'புனை கழல் எழுவர் நல்வலம் அடங்க'
4. 'எள்ளி வந்த வம்ப மள்ளர்'
5. 'வம்ப மள்ளரோ பலரே'
6. 'களம்புகு மள்ளற் கடந்து அடுநிலையே'
7. 'கவிகை மள்ளன் கைப்பட்டோரே'
8. 'ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு'
9. 'சிறுவல் மள்ளரும் உளரே அதாஅன்று'
10. 'முழுஉ வள்ளூரம் உணக்கும் மள்ள'
11. 'இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்'
12. 'இடைச் சுரத்து இறுத்த மள்ள! விளர்த்த'
13. 'மள்ளர் மள்ளன், தொல்லோர் மருகன்'

ஆகிய பதிமூன்று இடங்களில் பேசப்படுகின்றனர். இங்குப் பல இடங்களில் மள்ளர் குல இளைஞன், மள்ளர் குலத் தலைவன், மள்ளர் குல மன்னர், மள்ளர் குல வீரர் ஆகிய முறைகளில் பொருள்கள் அமைகின்றன. 'வம்ப மள்ளர்' என்ற தொடர் இனக்குழுக்களுக்குள் நடந்த போட்டியை விளக்குவதாக அமைகின்றது. மேலும் மள்ளர்கள் குல மன்னர்களாக இருந்த நிலையை மள்ளர் குறித்த இலக்கியத் தரவுகளை முழுமையாகத் தொகுத்து ஆராயும் குருசாமி சித்தர் பின் வருமாறு எழுதுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனை எதிர்த்த ஏழு மள்ளர் குல அரசர்களில் இருபெரும் வேந்தர்கள்

1. மாந்தரஞ்சேரல் இரும்பொறை,
2. செம்மியன் (சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்), ஐம் பெரும் வேளிர்,
3. திதியன்,
4. எழினி (அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன்),
5. இருங்கோவேள்,
6. எருமை யூரான் (எருமைவெளியன்)
7. பொருநன் என்போர்.

இங்குச் சுட்டப்படும் திதியன், எழினி, எருமையூரான், பொருநன் மள்ளர் இனக்குழுத் தலைவர்களாவர். மாந்தரஞ்சேரல் இரும்பொறை, செம்பியன், இருங்கோவேள் ஆகியோர் மள்ளர் இனக்குழுவிலிருந்து தோன்றிய சிற்றரசர் ஆவர். இவற்றிலிருந்து மள்ளர்கள இனக்குழுத் தலைவர்களாக இருந்து சிற்றரசர்களாகவும், பேரரசர்களாகவும் காலப்போக்கில் மாற்றம் பெற்றவர்கள் என்பது வெளிப்படை. அதாவது தமிழகத்தின் மூத்தக் குடிகளாக மள்ளர்கள் இருந்து, காலப்போக்கில் பல்வேறு சமூக மாற்றங்களுக்கிடையில் வாழ்ந்து வந்துள்ளனர் என்பது தெளிவு. இங்கு தமிழக வரலாற்றை பண்பாட்டுச் சூழலடன் எழுதும் கே.கே. பிள்ளை, இன்றைய சமதாயத்தில் வாழும் பள்ளர்கள் தமிழகத்தின் மூத்தகுடிகளில் ஒரு பிரிவினர் என்று கூறுவது மனங்கொள்ளத்தக்கதாகும்.

மள்ளர்களின் வழி வந்தவர்களே இன்றைய பள்ளர்கள் என்பதை வின்சுலோ, ஜி. ஒப்பர்ட், தேவநேயப் பாவாணர், எம். சீனிவாச அய்யங்கார், சோ. இலக்குமிதரன் பாரதி, கே.ஆர் அனுமந்தன், ஏ.வி. சுப்பிரமணிய அய்யர். இரா. தேவாசிர்வாதம். ந. சேதுரகுநாதன், குருசாமிச் சித்தர், தே. ஞானசேகரன், மேஜர் கதிர் மகாதேவன், சு. வேங்கடராமன், சி. சிவசண்முகம், அ. அறிவுநம்பி, வே. தயாளன், சி. மகேஸ்வரன், கி. இராசா, தே. லூர்து, தி. கமலி கஜேந்திரன், சி. பரமேஸ்வரி ஆகியோர் ஆராய்ந்து நிறுவியுள்ளனர்.

மேற்கண்ட செய்திகளை ஒருமுகப்படுத்தி நோக்கினால் பண்டைய தமிழகத்திலிருந்த பூர்வீக இனக் குழுக்களில் மள்ளர் இனக்குழுவும் ஒன்று என்பதையே புறநானூற்றுச் செய்திகள் தெரிவிக்கின்றன. மேலும் இந்த மூத்த (மள்ளர்) இனக்குழுவினரின் வழிவந்தவர்களே இன்றைய பள்ளர் இனக்குழுவினராகிய தேவேந்திர குல வேளாளர் என்பதைத் தெரியலாம்.

## பார்வை நூல்கள்


1. குருசாமிச் சித்தன், — தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திரகுல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்), 1993. தேவேந்திரர் மன்றம், 5/1, குருசாமி நகர், கோயம்புத்தூர்.

2. தேவாசிர்வாதம், இரா, — பள்ளர் அல்ல, மள்ளர் ஆம் மன்னர் 1984 இராமதேவன் பதிப்பகம் 180, யாகப்பா நகர், தஞ்சாவூர்.

3. சுப்பிரமணியன், கா. — சங்க காலச் சமுதாயம், (ஆய்வுக் கட்டுரைகள்) 1987 என்.சி.பி.எச்., சென்னை.

4. ............................ — புறநானூற்று மூலமும் பழைய உரையும் 1971 உ.வே. சா. நூல்நிலையம் சென்னை.

அச்சில் வராத ஆய்வேடு

பரமேஸ்வரி.சி. — தேவேந்திர குல வேளாளர் சமூக வரலாறும் பண்பாடும் பாரதியார் பல்கலைக்கழக பி.எச்.டி பட்டத்திற்காக அளிக்கப்பட்ட ஆய்வேடு 1998.




# மள்ளர்களின் மாண்பு
# அன்றும் இன்றும்

முனைவர் வே. தயாளன்
இணைப் பேராசிரியர், மொழியியல் துறை
பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர் - 641046.

உலகில் உள்ள இனங்களையெல்லாம் பார்க்கிறபோது அவை ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு வகையில் சில சிறப்புக் கூறுகளைக் கொண்டே விளங்குகின்றன. அதுபோன்று ஒவ்வொரு இனத்திற்கும் ஒரு வரலாறு என்பது அது சார்ந்துள்ள சமுதாய நிலையை, அதன் பண்பாட்டுக் கூறுகளை, வாழ்வியல் நிகழ்வுகளை விளக்கக் கூடியவையாகும். இந்திய நாட்டைப் பொறுத்த வரையில் குறிப்பாகத் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் மள்ளர் இனம் மிகப்பெரிய விழுமியங்களை (Values) கொண்ட இனமாகும். பல்வேறு வரலாற்றுச் சான்றுகள் இதை நன்கு வெளிப்படுத்தியுள்ளன. ஒரு நாட்டின் வரலாறு ஆனாலும் சரி, அல்லது ஒரு இனத்தில் வரலாறு ஆனாலும் சரி அவை வரலாற்றுச் சான்றுகளின் வாயிலாகவே அறியப்படுகின்றன. பொதுவாக இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், ஓலைச் சுவடிகள் போன்றவையெல்லாம் வரலாற்று ஆவணங்களாக நமக்குப் பயன்பட்டு வருகின்றன. வரலாற்றை எழுதுவதற்கும் எழுதப்பட்டுள்ள வரலாற்றில் உள்ள குறைகளைத் திருத்திக் கொள்வதற்கும், புதிய வரலாறு படைப்பதற்கும் ஆவணங்கள் பயன்படுகின்றன.

தமிழகத்தின் மூத்த குடிகளாக மள்ளர்கள் விளங்குகின்றனர். அறிவிலும் ஆற்றலிலும் போரிலும் பூமியை ஆண்டதிலும் இவர்களுக்கு இணையாக வேறு எந்த இனத்தையும் இங்கு காட்ட இயலாது. ஓர் இனத்தின் மாண்பு என்பது அவ்வினம் எவ்வாறு ஒரு நாட்டில் ஆட்சி செலுத்தியது; அவ்வினத்தின் வாழ்வியல் செயல்பாடு எவ்வாறு இருந்தது என்பதைப் பொறுத்தே அமைகிறது எனலாம். மள்ளர்கள் இம்மண்ணின் மைந்தர்கள். இவர்கள் அன்று தொட்டு இன்று வரை எத்தகைய வாழ்க்கையை வாழ்ந்து வருகிறார்கள் என்பதையும் அவர்களது பெருமைகள் இன்று எவ்வாறு உள்ளன என்பதைப் பற்றியும் இச்சிறு ஆய்வுக்கட்டுரை விளக்குகிறது.

'மாண்பு' என்ற சொல்லுக்குப் பெருமை, மரியாதை போன்ற பொருள் உண்டு. எனவே மள்ளர்களின் மாண்பு என்பது அவர்களது பெருமையைப் பற்றியதாகும். அடுத்ததாக 'மரியாதை' என்ற பொருளும் இச்சொல்லுக்கு உண்டென்பதால் இவர்களுக்குச் சமூகத்தில் இருந்த மரியாதை பற்றியும் குறிப்பிட வேண்டும். சொல்லுக்கான விளக்கங்கள் எப்படி இருந்த போதிலும், இவர்களது பெருமை அன்று முதல் இன்று

வரை எவ்வாறு நிலை நிறுத்தப்பட்டுள்ளது என்பதை சில கூறுகளின் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளது.

## மள்ளர் மாண்பு

முத்தொழிலுக்கு உரியவர்களாக இம்மக்கள் அடையாளப் படுத்தப் பட்டுள்ளனர். இதனைப் பின்வரும் வகையில் வகைப்படுத்தலாம்.

1. காத்தல் தொழில்
   - நாட்டைக் காத்தல்
   - மக்களைக் காத்தல்
   - அடைக்கலம் கேட்டு வருவோரைக் காத்தல்

2. அழித்தல் தொழில்
   - பகைவரை அழித்தல்
   - காட்டிக் கொடுப்போரை அழித்தல்

3. ஆக்கும் தொழில் ——— காட்டை அழிந்து வேளாண்மையை உருவாக்குதல்

இந்தக் கூறுகளை அடிப்படையாகக் கொண்டு மள்ளர்களின் மாண்புகள் ஓரளவிற்கு இங்கு மீட்டுருவாக்கம் செய்யப்படுகிறது.

## நாட்டைக் காத்தல்

மள்ளர்களின் முக்கியத் தொழில் ஏர்த்தொழிலும், போர்த் தொழிலுமேயாகும். இவர்கள் மன்னர்களாக இருந்தும் நாட்டைக் காத்துள்ளனர். மெய்க்காவல் படையில் இருந்தும் நாட்டைக் காத்துள்ளனர். பகைவரிடம் இருந்து நாட்டைக் காக்கும் முக்கியப் பணியை இவர்களே செய்தனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. பொதுவாக நாட்டை ஆளக்கூடியவர்கள் தமக்கு நம்பிக்கைக் குரியவர்களையே படைத்தளபதியாக நியமிப்பர். தமது இனத்தவர்களையே அந்தப் பொறுப்பில் அமர்த்துவர். இவ்வாறு செய்வதே தமக்கும், நாட்டிற்கும் நல்லது என்று கருதி வந்தனர். இவ்வாறு இவர்கள் மன்னர்களாகவும், படைத் தளபதியாகவும், போர் வீரர்களாகவும் இருந்து நாட்டைக் காத்தனர். இவர்களது இருபொருள் தன்மையை தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் கதிர் மகாதேவன் பின்வருமாறு கூறுவார். "இவர்கள் இரு பொருள் உடையவர்கள், ஒன்று ஏர்க்களத்திலே சென்று தங்கள் உணவிற்காக உழைப்பவர்கள்; போர்க்களத்திலே சென்று வீரர்களாக இருப்பவர்கள். இது எப்படி இரண்டும் முடிந்தது. அங்கு நிலைப்படை இல்லை. தமிழர்,

பழந்தமிழர் வரலாற்றுப் பண்பாட்டின் ஆய்வை நிகழ்த்திய பொழுது தெரிகிறது The Stationary Army, அதாவது நிலைப்படை என்று ஏதும் கிடையாது என்பது. ஏதேனும் இழுக்கும் பழிச்சொல்லும் வருமேயானால் உடனே நிலத்தில் வேலை செய்கிறவர்கள் போர் வீரர்களாக மாறுவார்கள். மாறித் தங்களுடைய ஆண்மையை நிலை நாட்டுவார்கள், திறமையை நிலை நாட்டுவார்கள்" (மள்ளர் மலர், செப். 1996, இதழ் 9 பக்.5). இவர்கள் நாட்டைக் காப்பதில் எவ்வாறு செயலாற்றினர் என்பதை மேற்கண்ட செய்தி நன்கு புலப்படுத்துகிறது.

### மக்களைக் காத்தல்

மள்ளர்களுக்கு இரு வித சமுதாயப் பொறுப்புக்கள் இருந்தன என்பதை ஏற்கனவே கண்டோம். ஒன்று படைவீரர்களாக இருந்து நாட்டைக் காப்பது; மற்றொன்று வேளாண் தொழில் வாயிலாக உற்பத்தியைப் பெருக்கி, அதன் வாயிலாக மக்களைப் பசியில் இருந்து காப்பது. மேலும் இயற்கையின் சீற்றங்களான மழை, வெள்ளம், புயல், காற்று போன்றவற்றிலிருந்தும் மக்களைக் காத்துள்ளனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. அதாவது மழை வெள்ளத்தால் ஆறு, குளம், ஏரி போன்றவை நிறைந்து அவை உடைப்பெடுந்து ஒடும்போது அவற்றைத் தடுத்து நிறுத்தி மக்களை அழிவில் இருந்து காத்துள்ளனர். எடுத்துக்காட்டாக, கரைபுரண்டு ஒடும் வெள்ள நீர் அணையை உடைக்கும் போது மள்ளர் குலத்தினர் அனைவரும் ஒன்று கூடி மண் இட்டு உடைப்பைத் தடுத்து நிறுத்தினர் என்னும் செய்தியை தியாகராசலீலை, திருவிளையாடல் புராணம் (பிட்டுக் மண்சுமந்த படலம்) ஆகிய நூல்கள் நமக்கு அறியத் தருகின்றன.

### அடைக்கலம் கொடுத்தலும் காத்தலும்

அடைக்கலம் கேட்டு வருவோருக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களை உயிரினும் மேலாகக் கருதி காக்கும் பண்பு இவர்களுக்கு உண்டு. "அடைக்கலம் என வந்தவர்களை காத்து நிற்பதே தமிழர்களின் சிறந்த பண்பாடு. அடைக்கலம் புகுந்தவர்களைக் காத்து, உண்மையான வீரர்களாகத் திகழ்ந்தவர்கள் மள்ளர்கள்" (கதிர் மகாதேவன், தினமணி 17.6.99) என்னும் இக்கருத்து மனங்கொள்ளத்தக்கது. எனவேதான் இப்பண்பு மள்ளர்களின் முக்கிய மாண்பாகக் கருதப்படுகிறது. இப்பண்பை ஒரு வரலாற்றுச் சான்று மூலமாக இங்கு விளக்கலாம். அதாவது, இந்திய விடுதலைப் போரில் பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்முவின் பங்கு பணிபற்றி நாம் அறிவோம். தளபதி சுந்தரலிங்கக் குடும்பனாரின் தலைமையில் படைகளை ஒன்று திரட்டி போரிட்ட வீர வரலாற்றினை மறக்க முடியாத வகையில் மள்ளர் இலக்கியமாகிய 'வசந்த முல்லை'யில் ஆசிரியர் வினோதா விளக்கியுள்ளார். வெள்ளையருக்கும் கட்டபொம்முவிற்கும் நடந்த

போரில் தோல்வி கண்டு கட்டபொம்முவின் மரணத்திற்குப் பின்னர் ஊமைத்துரை தலைமையில் போர் நடந்தது. இதில் ஊமைத்துரை தோல்வியைச் சந்திக்க நேர்ந்தது. ஊமைத்துரை இரவோடு இரவாக தன் தளபதிகளுடன் தப்பித்து நெல்லையை விட்டு வெளியேறினான். இந்தச் சமயத்தில் மற்ற பாளையக்காரர்கள் எல்லாம் காட்டிக் கொடுக்க தேவேந்திரர்களே ஊமைத்துரைக்கு அடைக்கலம் கொடுத்தார்கள்( வினோதா, 1998:135 – 136). இந்தப் பண்பு வரலாற்றோடு நின்றுவிடவில்லை. இன்று கூட இப்பண்பை இவர்களிடம் காணலாம். அடைக்கலம் கேட்டு வருவோருக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களைப் பாதுகாத்து உதவும் பண்பு இவர்களது இரத்தத்தோடு இரண்டறக் கலந்துவிட்ட ஒன்றாகும்.

## பகைவரை அழித்தல்

நாட்டைக் காக்கும் பொருட்டுப் பகைவரை அழித்தல், இனத்தைக் காக்கும் பொருட்டுப் பகைவரை அழித்தல், மொழி பண்பாடு போன்றவற்றைக் காக்கும் பொருட்டுப் பகைவரை அழித்தல் போன்ற வகைகளில் நாம் வகைப்படுத்தலாம். மள்ளர்கள் மன்னர்களாக இந்த நாட்டை ஆண்டனர் என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன. (காண்க: டாக்டர் குருசாமி சித்தரின், தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்). சங்க காலம் தொட்டு இந்திய விடுதலைப் போர் வரை பகைவரை அழிப்பதற்கு, வீரம் கொண்ட மக்கள் மள்ளர்களே என்பதைப் பல மன்னர்களும், குறுநில மனனர்களும், பாளையக்காரர்களும் கண்டு கொண்டனர். இவர்களது திறனையும், போர்த் திறமையையும் அறிந்து கொண்ட காரணத்தினாலேதான் படைத்தலைவர்களாக, தளபதிகளாக, தண்டாள மள்ளர்களாக இவர்களால் செயல்பட முடிந்தது. மள்ளர்கள் விசாரணை அதிகாரியாகவும் அதே சமயம் தண்டனை வழங்கும் அதிகாரமும் பெற்று இருந்தனர் என்பதற்குத் திருவிளையாடற் புராணம் பழியஞ்சின படலத்தின் வாயிலாக உணரலாம். பொதுவாக நாட்டை ஆளக் கூடியவர்கள் தம் இனத்தைச் சேர்த்வர்களையே படைத்தளபதியாக நியமிப்பர். இவ்வாறு செய்வதே தமக்கும், நாட்டிற்கும் நல்லது என்று கருதி வந்தனர். இதற்கு மாறாக கட்டபொம்மு தனது தளபதியாக கருப்பணன் காலாடியையும், படைத்தளபதியாக சுந்தரலிங்கத்தையும் அமர்த்திக் கொண்டிருந்தார். இதற்குக் காரணம் எத்துணை இடர்பாடுகள் வந்தாலும் தன்னுயிரைக் கொடுத்தாவது மன்னனைக் காப்போம் என்ற இவர்களது நெஞ்சுரத்தினாலேதான். இவர்கள் திரமிக்கவர்கள், போர்க்கலையில் வல்லவர்கள், எதிரிகளை வீழ்த்துவதில் தனி ஆர்வம் மிக்கவர்கள். பின்வரும் வரலாற்று நிகழ்வு இவர்களது வீர வரலாற்றிற்குத் தக்க சான்றாகும். "வெள்ளையர்கள் பீரங்கிகள் மூலம் கோட்டையைத் தகர்க்க முயற்சித்தபோது சுந்தரலிங்கத்தின்

உத்தரவுப்படி கோட்டைக் கதவு திறந்தது. கட்டக்கருப்பக் குடும்பனார் (சுந்தரலிங்கத்தின் தந்தையார்) தலைமையில் வந்த படை வெள்ளையர் படையுடன் மோதியது. கட்டக்கருப்பன் எதிரி வீரர்கள் தன்னை அணுக முடியாதபடி ஒரு கையால் கம்பைச் சுழற்றியபடி ஒரு கையால் வேலை எடுத்தெடுத்து எதிரிகளைக் குறிபார்த்து எறிந்து வீழ்த்திக் கொண்டிருந்தார். அவர் கையில் உள்ள கம்பு சுழன்ற விதம் சக்ராயுதம் போல் இருந்தது. கர்னல் அக்னியூ கட்டக் கருப்பக் குடும்பனாரின் வீரப்போர் முறையைப் பார்த்து திகைத்துப் போனார். அன்றைய போரில் பல வீரர்கள் வெள்ளையரின் அதி நவீன ஆயுதமான துப்பாக்கிகளுக்கு அஞ்சி ஒடிப் போனார்கள் என்பது கசப்பான உண்மை, என்றாலும் அஞ்சாமல் நின்று போர் புரிந்த கட்டக்கருப்பக் குடும்பனார் கர்னல் அக்னியூவின் துப்பாக்கிக்கு பலி ஆனார் (வசந்தமுல்லை, வினோதா, 1998:108)".

நேருக்கு நேர் எதிரிகளை எதிர் கொள்ளும் விதம், கட்டக் கருப்பக் குடும்பனாரின் போர் முறை, மற்றவர்கள் எல்லாம் வெள்ளையர்களின் துப்பாக்கியைக் கண்டவுடன் பயந்து ஓடிய பிறகும், பயப்படாமல் துணிந்து போராடிய கட்டக் கருப்பக் குடும்பனார் வீரத்தின் விளைநிலமாய் திகழ்ந்தார். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா! தந்தையே சிறந்த வீரனாகத் திகழ்ந்தபோது தனயனைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ!

தளபதி சுந்தரலிங்கனாரின் வீரம்தான் கட்டபொம்முவின் விரத்திற்குக் காரணம். நம்மைச் சுற்றியிருப்பவர்கள் எப்படியோ அது போலத்தால் நாமும் இருப்போம். கட்டபொம்முவைச் சுற்றியிருந்த வீரர்கள் கருப்பணன் காலாடி, கட்டக் கருப்பக் குடும்பனார், தளபதி சுந்தரலிங்கம் போன்றோர். இவர்களது பலம் தான் கட்டபொம்முவின் பலம். இவர்கள் வீர மரணத்தை தழுவிய பிறகே கட்டபொம்முவின் ஆட்சியும் அதிகாரமும் பறிபோயிற்று. வரலாறு காட்டும் உண்மை இது. தளபதி சுந்தரலிங்கத்தின் மாண்பிற்குப் பின்வரும் வரலாற்று நிகழ்வைச் சொல்லலாம். "கோட்டைக் கதவு தகர்ந்து விழுந்தது. எதிரிப்படை முன்னே பாய முற்பட்டது. புயல் காற்றைப் போல் சுழன்று தாக்கினார் சுந்தரலிங்கம். கோட்டை வாசலில் வீரர்களை நெருக்கமாக நிற்காமல் பரலவாக நிற்க வைத்து எதிரியைத் தாக்க உத்தரவிட்டதால் முதலில் பாய்ந்து வந்த குதிரைப் படையை சுலபமாக வீழ்த்தினார். அத்து வந்த காலாட் படையை இரு கைகளாலும் வாளைக் கொண்டு சுழற்றி எதிரியின் தலையை வெட்டி வீழ்த்தினார். அடுத்து துப்பாக்கிப் படை வந்தது. துப்பாக்கியைப் பார்த்தவுடன் சுந்தரலிங்கத்தின் படை சிதறியது. அனால் சுந்தரலிங்கம் மதங்கொண்ட யானைபோல் எதிரியை சின்னா பின்னமாக்கினார். துப்பாக்கிக் குண்டு தோளை உரசியது, புலிபோல் பாய்ந்து தாக்கினார். எதிரி வீரர்கள் கோட்டைக்குள்

புகமுடியாமல் திணறினர். எதிரியைத் தாக்கியபடியே வாசலுக்கு வெளியே வந்துவிட்ட சுந்தரலிங்கத்தை எதிரிப் படை வீரர்கள் சுற்றி வளைத்துக் கொண்டனர்.

சக்ரவியூகத்திற்குள் மாட்டிக் கொண்ட அபிமன்யு போல் எதிரியின் வட்டத்திற்குள் மாட்டிக் கொண்ட தளபதியார் அஞ்சவில்லை. குண்டுகள் மார்பில் பாய்ந்தும் அவர் நிற்கவில்லை. முடிவில் சல்லடைக் கண்களாக அவர் உடல் துளைக்கப்பட்ட பின்பும் அவர் கீழே விழவில்லை. காரணம் மன்னருடன் போகச் சொல்லியும் போகாமல் தளபதியாரை நிழல்போல் தொடர்ந்து போரிட்டுக் கொண்டிருந்த மதியழகன் ஓடிவந்து தாங்கி தன் மடிமேல் போட்டுக் கொள்கிறான். தன் நண்பரின் முகம் பார்த்துத் சிரிக்க முயன்ற அந்த மாவீரன் தளபதி சுந்தரலிங்கக் குடும்பனாரின் மரணத்திற்குப் பின்பே எதிரிப்படை கோட்டைக்குள் நுழைய முடிந்தது என்பது சரித்திர உண்மை (வினோதா, 1998, 117 – 118)".

இந்த வீரனின் வரலாற்றைப் பார்க்கிற போது சில உண்மைகள் நமக்குப் புலனாகின்றன. அதாவது தலைவனைக் காக்க, இந்த நாட்டைக் காக்க, இந்த மண்ணைக் காக்க மள்ளர்களே முதல் வரிசையில் நின்று போராடி, தமது உயிரினை மாய்த்துக் கொண்டனர் என்பதாகும்.

### காட்டிக் கொடுப்போரை அழித்தல்

மன்னனுக்கு கடைசி வரை விசுவாசமாகவே இருந்தவர்கள் மள்ளர்கள். இவர்களிடம் காட்டிக் கொடுக்கும் பண்பு சிறிதும் கிடையாது. ஆனால் தம்மையோ அல்லது தமது படையையோ காட்டிக் கொடுப்போரை அழித்தொழிக்கவும் தயங்கமாட்டார்கள். பின்வரும் வரலாற்றுச் சம்பவம் இதை நன்கு உணர்த்தும். "நாயக்கராட்சியில் பாளைப்பட்டுக்கள் பிரிக்கப்பட்டு, பாளையக்காரர்களால் ஆட்சி செய்யப்பட்டன. அவ்வாறு பிரிக்கப்பட்ட பாளையங்களில் நெற்கட்டான் செவ்வலும் ஒன்று. இப்பகுதி பூலித்தேவனால் ஆட்சி செய்யப்பட்டது. கான்சாகிப் எனும் முகமதியன் படையெடுத்து வந்து பூலித்தேவனுடன் போரிட்டான். பூலித்தேவன் வெற்றி பெறவும், கான்சாகிப் தோல்வியடையவும் நேர்ந்தது. எப்படியும் பூலித்தேவனை வெற்றி கொள்ள வேண்டும் என்று எண்ணிய கான்சாகிப் சூழ்ச்சியைக் கையாண்டான். மறவர் பாளையங்களில் ஒன்றான நடுவக் குறிச்சிப் பாளையக்காரனை விலை கொடுத்து வாங்கினான் கான்சாகிப். பூலியின் படையில் இருந்த வீரர்களுக்குப் பொருளாசையும் பதவி ஆசையும் காட்டித் தமது படையில் சேர்த்துக் கொண்டான். வயிற்றுப் பிழைப்பிற்காக கை கூலியைப் பெற்றுத் தங்கள் தலைவனைக் காட்டிக் கொடுக்கத் துணிந்த கயவர்களில் சுமார் இரண்டாயிரத்திற்கு

மேற்பட்டவர்கள் சேர்ந்தார்கள். இவர்களை நெற்கட்டான் செவ்வலைச் சுற்றியுள்ள காடுகளில் மறைந்திருக்கும்படி செய்தான் கான்சாகிப். இதை ஒற்றர்கள் மூலம் அறிந்த பூலித்தேவன் அவர்களை வேட்டையாடுவதற்குப் பல குழுக்களை அனுப்பினான். அவ்வாறு சென்ற குழுக்களில் தளபதி பெரியகாலாடி என்ற வெண்ணிக் காலாடியும் ஒருவராவார். இக்குழு காட்டிக் கொடுக்க நினைத்த வீரர்களை அழித்தொழித்தது.

தளபதி பெரியகாலாடி பூலித்தேவனின் தலைமைத் தளபதியாக விளங்கியவர். கான்சாகிப் படையோடு கடுமையாகப் போரிட்டு அவனது படை வீரர்களைக் கொன்று குவித்தவர். குடல் கிழிபட்டு வெளியே வந்த பிறகும் கூட, அதை வயிற்றுக்கு உள்ளே செலுத்தி தன்னுடைய தலைப் பாகையினால் கட்டிக் கொண்டு மீண்டும் போரிட்டு வெற்றிபெற்று இறுதியில் வீரமரணம் அடைந்தவர் (மள்ளர் மலர், அக்டோபர், 1996, இதழ் 10 பக்.9)".

## காட்டை அழித்து வேளாண்மையை உருவாக்குதல்

உழவரை விழுமிய முறையில் போற்றுவது தமிழ் மரபு. பெரும் புலவரை சொல்லேருழவர் என்பர் சிந்தாமணியார். அரசனை எயிற்றுழவர் என்பர். விரர்கள் வில்லேருழவர் எனப்படுவர். இத்துணை சிறப்புகள் உழவர் என்னும் சொல்லுக்கு உண்டு. உழவுத் தொழில் செய்வதற்கு முன்பு இந்தக் காட்டையும், மேட்டையும் அழித்து விளைநிலங்களாக்கிய பெருமைக்கு உரியவர்கள் மள்ளர்கள். தொழில்களில் மிகவும் உயர்ந்த, சிறந்த தொழில் வேளாண் தொழிலே. வேளாண் தொழில் செய்பவரே உயர்ந்தவர்கள் என்று சில மானிடவியல் அறிஞர்கள் கூறியுள்ளதை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். டுர்காட் என்ற மானிடவியல் அறிஞர் கூறுகிறார் "வேளாண் தொழிலை மேற்கொண்ட பின்பே மனித இனம் நிலையான வாழ்க்கை என்பதை உணரத் தலைப்பட்டனர். அதன் பின்னரே தொழில் வேறுபாடு, மக்கள் தொகைப் பெருக்கம், ஓய்வு நேரம் முதலானவை ஏற்பட்டது". இந்தக் கருத்தை அடிப்டையாகக் கொண்டு பார்க்கிறபோது, தமிழகத்தில் முதன் முதலில் காடுகளை அழித்து, விளைநிலங்களாக மாற்றி வேளாண் தொழிலை ஏற்படுத்தியவர்கள் மள்ளர் இன மக்களே என்று கூறலாம். மேலும் இவர்கள் செய்த வேளாண் தொழில் நெல் பற்றியது. அதாவது பண்பட்ட வேளாண்மை என்று நெல் வேளாண்மையைக் குறிப்பிடுவர். மேலும் காடு திருத்தி வயல் வெளியை உண்டாக்கிய உழவர் குடியே இந்த மள்ளர் குடி. இந்த உலகம் உள்ளவரை இதைப் பெருமையாகச் சொல்ல முடியும்.

சில கூறுகளை அடிப்படையாகக் கொண்டு மள்ளர்களின் மாண்புகள் மேற்கண்ட பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. இவை தவிர இன்னும் வளமாக இவர்களது பெருமைகள் காக்கப்பட

வேண்டுமென்றால் அரசியல் அதிகாரம் தேவைப்படுகிறது. இவர்களது அரசியல் அதிகாரத்தை அடிப்படையகக் கொண்டு இவர்களது கடமையும், பெருமையும் கிழே விளக்கப்பட்டுள்ளன.

### தேவேந்திரகுல தனித்த அரசியல் இயக்கங்கள்

ஓர் அரசியல் இயக்கத்தோடு தங்களை இணைத்துக் கொண்டு செயல்படுவதால் பலன் ஏதும் இல்லை என்பதை இம்மக்கள் 1989 க்குப் பின்னர் உணரத் தொடங்கினர். சமூக ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் எழுச்சி பெற வேண்டுமானால் தனித்த அரசியல் இயக்கங்களே சரியான வழியாக அமையும் என எண்ணலாயினர். தங்களைக் காத்துக் கொள்வதற்கும், இலக்குகளை அடைவதற்கும் இதுவே சிறந்த முறை என்ற எண்ணத்திலே தோன்றியவை தான் தேவேந்திர குல வேளாளர்களின் தனித்த அரசியல் இயக்கங்கள். இவர்களை முன்னிருத்திப் போராடி வருகின்றன. அவையாவன:

1. திரு ஜான்பாண்டியன் அவர்களால் 1989 இல் தொடங்கப் பெற்ற 'அகில இந்திய தேவேந்திரகுல வேளாளர் முன்னேற்ற சங்கம்'
2. டாக்டர் குருசாமி சித்தர் அவர்களால் 1995 இல் தொடங்கப் பெற்ற 'தமிழக முன்னேற்றக் கழகம்'
3. டாக்டர் கிருஷ்ணசாமி அவர்களால் 1998 இல் தொடங்கப் பெற்ற 'புதிய தமிழகம்'

இம்மூன்று அரசியல் தலைவர்களும் தனித்த தேவேந்திரர் அரசியல் தலைவர்களாக எழுச்சி பெற்றுள்ளதைக் காணும்போது, அரசியலில் இவர்களது பங்களிப்பு நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வருவதைக் காணலாம். ஒரு காலத்தில் இந்தப் பூமியை ஆண்டர்வகள் அரசியல் அதிகாரம் போய்விட்ட காரணத்தினால் ஒடுக்கப்பட்டவர்களாக ஆக்கப்பட்டனர். மீண்டும் இந்நாட்டை ஆளவேண்டும் என்றால் அதற்கு ஆட்சி அதிகாரம் இருந்தால்தான் முடியும். ஒவ்வொரு அரசியல் கட்சிகளும் இவர்களை ஓட்டுக்காகப் பயன் படுத்திக் கொண்டு பின்னர் வேட்டு வைத்து விடுவதைத் தான் கடந்த 50 ஆண்டுகால ஆட்சியில் கண்டனர். இதை மாற்றிட வேண்டுமானால் தனித்த அரசியலே சரியான பாதையாக அமையும். இங்கு தனித்த அரசியலே மள்ளர்களின் மாண்பை மீண்டும் நிலை நிறுத்த உதவும் ஒரு சாதனமாகவே நாம் பார்க்க வேண்டும். அதாவது உண்மையான தமிழன் ஆட்சி, தமிழ்மொழி, தமிழ் இனப் பண்பாடு போன்றவற்றை நிலை பெறச் செய்யும் வகையில் ஓர் ஆட்சியை ஏற்படுத்துவதுதான் இந்த இயக்கங்களின் முக்கிய நோக்கமாகும்.

## மள்ளர்களின் மாண்பு அன்றும் இன்றும்

மள்ளர்கள் மருதநில மக்கள், வேளாளர்கள், கொடை வள்ளல்கள், நாட்டு மக்களுக்கு உணவளிப்பவர்கள், நாட்டைச் செழிப்பாக்குபவர்கள், தியாக சிலர்கள், தமிழ் நாட்டைப் பல ஆண்டுகள் காத்து வந்தவர்கள், போர் மறவர்கள், படைத்தளபதிகள், மள்ளர் வம்சத்தினரே சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்கள்.

பிறநாட்டுப் படைபெடுப்பால் இவர்கள் ஒடுக்கப்பட்டு, இவர்களது பெருமைகள் அமுக்கப்பட்டு அல்லது மறைக்கப்பட்டு உண்மைக்குப் புறம்பான செய்திகள் கொடுக்கப்பட்டன. ஆட்சியைப் பறிகொடுத்த இவர்கள் ஒவ்வொன்றாக உரிமையையும் உடைமையையும் பறிகொடுத்தனர். இவர்களின் வாழ்வில் அன்றும் இன்றும் காணப்படுகின்ற சில மாண்புகளைச் (பெருமைகளை) சுட்டிக்காட்டுகின்ற வகையிலேதான் இந்தக் கட்டுரை உருவாக்கப்பட்டுள்ளது. கட்டுரையின் சாராம்சாமாக சில பண்புகள் மட்டும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவையாவன:

1. தலைவனைக் காக்கத் தன்னுயிரையும் கொடுக்கத் தயங்காதவர்கள்.
2. பிற இன மக்களை விட போர்க் கலையில் வல்லவர்கள். அந்தப் போர்க் குணத்தை இன்றும் இவர்களிடம் காணலாம்.
3. மறைமுகத் தாக்குதலை விட எதிரியை நேருக்கு நேர் எதிர்கொண்டு போர் புரிவதில் வல்லவர்கள்.
4. பிறரை வஞ்சித்து ஏமாற்றிப் பிழைக்கும் பண்போ அல்லது பிறர் பொருளை அபகரிக்கும் தீய எண்ணமோ இவர்களிடம் காண்பதரிது.
5. இவர்களாக எந்தப் பிரச்சினையையும் உருவாக்குவதில்லை; பிறர் இவர்களைச் சீண்டிப் பார்க்கும்போது இவர்கள் வெறுமனே இருப்பதில்லை.
6. அடைக்கலம் கொடுத்துக் காப்பது இவர்களது முக்கியப் பண்பாகும்.
7. பிறருக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றும் பண்பாளர்கள்.

### பயன்பட்ட நூற்கள்

அழகர்சாமி 1996 'மள்ளர் மலர்', இதழ்-10
(ப,ஆ. குருசாமி சித்தர்)
மாமன்னர் அச்சகம் : கோயம்புத்தூர்

| | | |
|---|---|---|
| கதிர் மகாதேவன் | 1996 | 'மள்ளர்மலர்', இதழ் 9<br>(ப,ஆ. குருசாமிசித்தர்)<br>மாமன்னர் அச்சகம்:கோம்புத்தூர் |
| குருசாமி சித்தன் | 1993 | **தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்),**<br>தேவேந்திரமன்றம் : கோயம்புத்தூர் |
| தேவஆசிர்வாதம், இரா. | 1991 | **பள்ளர் அல்ல, மள்ளர் ஆம் மன்னர்**<br>இராமதேவன், 189 யாகப்பா நகர், தஞ்சாவூர் - 613 007. |
| வினோதா | 1998 | **வசந்தமுல்லை**<br>பாப்பம்மாள் பதிப்பகம் :<br>கோயம்புத்தூர். |



# மள்ளர் குலப் பண்பாட்டு வரலாறு காட்டும் திருவிளையாடல் புராணம்

இரா. முத்துமணி தேவேந்திரர் M.Sc., B.L.,
வழக்கறிஞர், 8/11 ஆசாரி குறுக்குத்தெரு,
சோழவந்தான், மதுரை - 625 204.

தமிழகத்தின் மூத்த குடியினராய், தலைமக்களாக சேர, சோழ, பாண்டியப் பேரரசுகளை நிர்மானம் செய்து, வைணவ, சைவ நெறிகளில் திலைத்துள்ள மள்ளர் குலத்தார் (இன்றைய குடும்பன், காலாடி, பணிக்கன், பண்ணாடி, மூப்பன், வயல்காரர், வாய்க்கால்காரர், பலகனார், பள்ளர், தேவேந்திர குலத்தார்) பக்தி நெறிகளிலும், பண்பாட்டு தளத்திலும் சிறந்து விளங்கியதை தமிழுக்குச் சிறப்பு சேர்த்த பெரிய புராணம், கம்பராமாயணம், கந்தபுராணம், திருவிளையாடல் புராணம் போன்ற பக்தி இலக்கியங்கள் பகர்கின்றன. இவற்றில் பாண்டிய நாட்டிற்கு பெருமை சேர்த்த பக்தி இலக்கியங்களில் ஒன்று திருவிளையாடல் புராணம் ஆகும். இதன் ஆசிரியர் பரஞ்சோதி முனிவர், 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தாலும், நாயக்க அரசுகள் மள்ளர்குலப் பாண்பாட்டு வரலாறுகளை தடுத்திருந்தபோதிலும், ஆசிரியர் சிறந்த சைவ இலக்கியங்களில் ஒன்றான இத்திருவிளையாடல் புராணத்தின் மூலமாக சைவ நெறியில் திலைத்த மள்ளர்குல பாண்டிய பேரரசர்களை வரிசைப்படுத்தி அவர்களது பக்தி சார்ந்த பண்பாட்டுச் செய்திகளைப் படைத்துள்ளார்.

பாண்டிய மன்னர்களின் வழித்தோன்றல்களாக பின்வரும் பாண்டிய மள்ளர்களை வரிசைப்படுத்துகிறார். மலையத்துவச பாண்டிய மள்ளர், தடாதகை மள்ளத்தியர், சோமசுந்தர பாண்டிய மள்ளர், குல பூடன மள்ளர், ராஜேந்திர பாண்டிய மள்ளர், இராசபுரன் மள்ளர், இராசகேசரி மள்ளர், இராச கம்பீர மள்ளர், வங்கிச தீபன் மள்ளர், புரந்தரசித்து மள்ளர், வங்கிசடதை மள்ளர், சுந்தரேச சேகர மள்ளர், வரகுண பாண்டிய மள்ளர், ராசராச மள்ளர், வங்கிய சேகர மள்ளர், அரிமர்த்தன பாண்டிய மள்ளர் மற்றும் இத்திருவிளையாடல் புராணத்தில் இவர்களது எதிர் அரசர்களாக விளங்கிய சோழப் பேரரசர்களான சோழன் கிள்ளி மள்ளர், விக்கிரம சோழ மள்ளர்களையும் காண்பித்துள்ளார்.

இப்பாண்டிய மன்னர்களின் வழித் தோன்றல்கள் மதுரை, அனுப்பானடி வாழ் தேவேந்திர குல மக்களின் தலைமக்கள், ஊர் குடும்பனார் வகையறாக்கள் மற்றும் நீர்க்காலாடி, மடைவாரியர்களை திருவிளையாடல் புராணத்தில் விளக்கப்படும் பண்பாட்டு வரலாறான

சோமசுந்தரக் கடவுளால் நரியைப் பரியாக்கும் சிறப்பும், புட்டுக்கு மண் சுமந்து பிரம்படி பட்ட புட்டுத் திருவிழாக்களில் கலந்து கொள்ள மதுரை மீனாட்சியம்மன் கோவில் தேவஸ்தானத்தார்களால் அழைத்துச் செல்லப்பட்டு, அனுப்பானடி மள்ளர்களுக்கு உரிய மரியாதை வழங்கி விழாவினை தொடங்கும் சிறப்பு தொன்று தொட்டு இன்று வரை நடைபெற்று வருகிறது.

இவ்விழா மதுரை அனுப்பானடி தேவேந்திர குல மககளின் தலைவர் ஊர் குடும்பனார் வகையறாக்கள் மற்றும் நீர்க் காலாடிகள், மடை வாரியர்களால் நடத்தப்பட்டு வருகிறது.

## நரியைப் பரியாக்கிய படலம் - திருவிளையாடல் புராணம்

பாண்டிய நாட்டை அரிமர்த்தன பாண்டிய மள்ளர் ஆட்சி செய்து வந்தார். இவரது தலைமை அமைச்சனாக திருவாதவூரைச் சார்ந்த மாணிக்கவாசர் எனும் சிவனடியார் இருந்து வந்தார். பாண்டிய மன்னர் தமது படை வலிமைக்கு குதிரைகள் தேவைப்பட்டதால், அரண்மனைப் பொக்கிஷத்திலிருந்து வேண்டிய அளவு பொற்காசுகளை எடுத்துக் கொண்டு கடற்கரை சென்று குதிரைகள் வாங்கிவர மாணிக்கவாசரைப் பணித்தார். ஆனால் மாணிக்கவாசர் சோமசுந்தரக் கடவுளின் மீது கொண்டிருந்த பக்தி மிகுதியால் கோயில் காரியங்களுக்கு செலவு செய்திடவே, அரிமர்த்தன மள்ளர் மாணிக்கவாசரை அழைத்து புரவிகள் ஏன் இன்னும் வாங்கி வரவில்லை எனக் கேட்க மூன்று தினங்களில் புரவிகள் வந்துவிடும், மேலும் அப்பரிகளுக்கு புதிய லாயங்கள், புதிதாக குளங்கள், ஊர் முழுமைக்கும் அலங்காரம் செய்ய வாதவூரார் கேட்டுக் கொண்டார். மன்னரும் அவ்வாறே செய்து முடிக்க, மூன்று தினங்கள் தாண்டியும், குதிரைகள் வராதிருக்கவே, மன்னர் சினம் கொள்ள, வாதவூராரை அழைத்துச் சென்று தண்டனையாக அவரது தலையின் மீது கல்லை வைத்து, கிட்டி கட்டித் துன்புறுத்தவே, சோமசுந்தரக் கடவுள் சிவகணங்களை எல்லாம் மள்ளர்களாக்கி நரிகளையெல்லாம் திரட்டி பரிகளாக்கினார். சோமசுந்தரக் கடவுளும், மறைப்பரியில் ஏறி மற்றைய புறவிகளில் வீர மள்ளர்களுடன் செல்லவே, இது கண்ட மக்கள் "குதிரைகள் கனைப்பொலியன்று, கடலோசை" என்றும், இந்திர ஜாலமென்றும் கருதினர். இப்பரிகள் இவ்வுலகில் உள்ளவையல்ல, இந்திரன் பரியாக இருக்கலாம் எனத் திகைத்தனர். இச்செய்தி அரிமர்த்தன மள்ளருக்குக் கிடைத்திட வாதவூராருக்கு மணிகளும், உயர்ந்த ஆடைகளும் அளித்து மகிழ்ந்தார். பாண்டிய மன்னர் வந்துள்ள பரி மள்ளர்களில் சிறந்தவர் யார் எனக் கேட்க, மாணிக்கவாசர் "யான் அறியேன்" எனக் கூற சோமசுந்தர மள்ளர் அரசர் முன் வந்து தான் வந்த மறைப் பரியை எட்டுத் திக்கு வானவரும் வியக்கச் செலுத்திக் காட்டினார். மற்றைய பரி மள்ளர்கள் இவரே எங்கள் தலைவர் என

உரைக்க, பாண்டிய மள்ளர் அனைவருக்கும் வெண் பட்டாடை வழங்கி கௌரவித்தார்.

"நரியைப் பரியாக்கிய மள்ளர் சோமசுந்தரரின் வழித் தோன்றல்களும், பாண்டிய மன்னர்களின் வாரிசுகளும் இன்றும் இந்தப் பண்பாடு காத்து வருகிறார்கள்.

மதுரை அனுப்பானடி வாழ் பாண்டிய மன்னர்களின் வாரிசுகளான அவ்வூர்க் குடும்பனார் மற்றும் மடை வாரியர்கள் நரிகளைப் பரியாக்க, வருடம் தோறும் அருள்மிகு மீனாட்சியம்மன் தேவஸ்தானத்தின் மூலமாக நடத்தப்படும் இப்பண்பாட்டு விழாவிற்கு நரியுடன் சென்று பரியாக மாற்றி கோவில் மரியாதை பெற்று வருவது இன்றும் நடந்து வருகிறது.

## புட்டுக்கு மண் சுமத்தல் - திருவிளையாடல் புராணம்

சோமசுந்தரக் கடவுள் புரிந்த திருவிளையாடல் காரணமாக வைகை நதியில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு, மதுரை மக்களுக்கு பெரும் துன்பம் விளைவிக்க, அரிமர்த்தன பாண்டிய மள்ளர் அமைச்சர்களை அழைத்து பெருகிவரும் வெள்ளப் பெருக்கை அடக்க ஆணையிட, அமைச்சர்கள் மதுரை மாநகர் வாழ்குடி மக்களை வீட்டுக்கு ஒருவர் வீதம் கூடை மண்வெட்டி சகிதமாக வந்து மண் சுமந்து கரையை அடைக்கக் கட்டளையிட, அவ்வாறே கரையை அடைக்க முயன்றனர். எனினும், சோமசுந்தரக் கடவுளின் அன்பின் மிகுதியால் தினந்தோறும் கடவுளுக்கு புட்டை அபிஷேகம் செய்துவிட்டு, மதுரை மாநகர் தெருக்களில் புட்டு விற்று வரும் "வந்தி" எனும் கிழவி தன் பங்கிற்கு வைகை கரை சென்று அடைக்க ஆள் இல்லாமல் சோமசுந்தரக் கடவுளை அழுதவாறு வேண்ட, சோமசுந்தரப் பெருமாள் அவள் மீது இரக்கம் கொண்டு கூலி ஆளாக அவதாரம் எடுத்து தலையில் சுருமாடு வைத்து, அதன் மேல் கூடை வைத்து தோளில் மண்வெட்டி போட்டுக் கொண்டு வைகைக் கரை அடைக்க சென்ற கடவுள் தன்னை வந்தியின் கூலியாள் என பதிவு செய்து கொண்டு மண் சுமந்து போட, சரிவர வேலை செய்யாது மரத்தடியில் தூங்கவே, அவரது பங்கிற்கு வேலை எதுவும் நடக்காமல் இருப்பது கண்டு, கண்காணி மள்ளர்கள் அரிமர்த்தன பாண்டிய மன்னரிடம் கூற, அக்கூலியாளை அழைத்து வந்து தன் முன் கொண்டு வந்து நிறுத்த ஆணையிட, கண்காணி மள்ளர்களும் அவ்வாறே செய்ய, அரிமர்த்தன பாண்டிய மன்னன் தன் கையில் இருந்த பொற்பிரம்பால் சோமசுந்தர மள்ளனை அடிக்க, சோமசுந்தரக் கடவுள் உடனே கூடையில் மண் சுமந்து தன் பங்கிற்கு கரையை அடைத்துவிட்டு மாயமாக மறைந்தார். ஆனால், அரிமர்த்தன பாண்டியன் அடித்த பிரம்படி கண்காணி மள்ளர்களுக்கும், பாண்டிய

மன்னருக்கும் பட்டு தழும்பு பட்டிருப்பது கண்டு அனைவரும் வியந்தனர். சோமசுந்தரக் கடவுள் வந்தியுடன் தோன்றி அரிமர்த்தன பாண்டிய மன்னனிடம், தெய்வ வாக்காக மாணிக்கவாசருக்கு இழைத்த கொடுமைகளால், அவர் பால் அன்பு கொண்ட கடவுள் அரிமர்த்தன பாண்டியனுக்கு தனது திறந்தை நிலைநாட்ட, அரிமர்த்தன பாண்டிய மன்னன் தன் தவற்றை உணர்ந்தான்.

எனவே, மதுரை புட்டுத் தோப்பில் வருடம் தோறும் நடைபெறும் புட்டுத் திருவிழாவிற்கு அனுப்பானடி வாழ் மள்ளர் குல மக்கள் தலைவர்களான ஊர் குடும்பனாரையும் (ஆய்யாவு குடும்பனார் வகையறாக்கள்) மற்றும் மடைவாரியார் வகையறாக்களையும் இன்றும் மதுரை அருள்மிகு மீனாட்சி அம்மன் கோயில் தேவஸ்தான அதிகாரிகள் சகல மரியாதையுடன் அழைத்துச் சென்று சோமசுந்தர மள்ளருடன் கூடை, மண்வெட்டி சகிதமாகச் சென்று புட்டுக்கு மண் சுமந்து பிரம்படிபட்ட பண்பாட்டு வரலாற்றைக் காண்பித்து வருகின்றனர்.

மள்ளர் குலப் பாண்டியர்கள், மதுரைக்கு பெருமை சேர்க்கும் பண்பாட்டு வரலாறுகளை பண்பாட்டுத் திருவிழாக்களாக வருடந்தோறும் நடத்தி வருவதைக் காண முடிகிறது.



குலத்தொழிலாக 'உழவினையே' மேற்கொண்டுள்ளனர். இன்று அவர்கள் பிறதொழில்களிலும் ஈடுபட்டுள்ளனர். உதாரணத்திற்கு சிவகாசி வட்டாரத்தில் வாழ்ந்துவரும் இவ்வினத்தார் தீப்பெட்டித் தொழிலை மேற்கொண்டு வருகின்றனர்.

### குழந்தைப் பேறு - நம்பிக்கை

உலகில் பிறந்த ஒவ்வொருவரும் தனக்கென அமைந்த மணவாழ்க்கையில் நன்மக்களைப் பெறுதலை வரமாக நினைந்தனர். அவ்வடிப்படையில் இவ்வினமக்கள் தங்களுக்குக் குழந்தை வேண்டிப் பாடியிருக்கின்றனர். அதோடு பிள்ளைப் பேறு நிலையினை அடைவதாகவும் நம்பினர்.

காடெல்லாம் பிச்சிப்பூ
கரையெல்லாம் செண்பகப்பூ
நாடெல்லாம் பூமணக்கும்
நல்ல மகன் போகும்போது

(தாலாட்டு)

இந்தத் தாலாட்டில் ஒரு தாயின் உள்ளம், அவள் கொண்டுள்ள நம்பிக்கை அவள் மகன் மீது கொண்டுள்ள பாசம் நமக்குப் புலப்படுகின்றது. தன் மகன் செல்லும் வழியெல்லாம் வளம் பெறும் என்று தாயின் உள்ளம் நம்பிக்கை கொள்கின்றது.

### உவமை வழி நம்பிக்கை

மணமக்கள் இருவரையும் ஒருசேர இருத்தி வாழ்த்தும் போது, அம்மையும், அப்பனும் போல, கந்தனும் வள்ளியும் போல வாழவேண்டும் என வாழ்த்தும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது.

வள்ளியும் முருகனும் போல
சீதையும் இராமனும் இணைந்தாற் போல
இன்று போல என்றும் இன்பமுடன் வாழ்ந்திடுக

(வாழ்த்துமடல்)

என்ற பாடல் வழி அவர்களின் நம்பிக்கையும், பிரியா வாழ்வு நெறியும் நமக்குத் தென்படுகின்றன.

### கண்ணேறுகழிப்பு

குழந்தைக்குக் கண்ணேறு கழிப்பு அடிக்கடி செய்வதுண்டு. குழந்தையின் மீது மற்றவர் கண் பட்டுவிடக்கூடாதென கண்ணேறு கழிப்பதுண்டு. இப்பழக்கம் இவர்களிடம் காணப்படுகின்றது.

இவ்வின மக்களின் நம்பிக்கைக்கு பக்தி ஒரு காரணம் என்று சொல்லலாம். இவ்வகையில் இவ்வினத்தாரிடம் கெவுளி சொல்லுதல், காவு கொடுத்தல், கண்ணேறு கழித்தல், இறை மானிட உருவெடுத்தல்,

இறந்தோர் உயிர்த்தெழல் போன்ற நம்பிக்கைகள் காணப்பட்டு வருகின்றன. ஆனால் இன்று இவர்களிடம் இவ்வித நம்பிக்கைகள் குறைந்து வருகின்றன.

பாக்கு துவர்த்தால் பழைய உறவு மங்கும் என்று அவர்கள் நம்பினர் என்பதைப்

பாக்கு தொவக்குதடி
பழைய உறவு மங்குதடி
ஏலக்கா சொக்குதடி
என்னை விட்டு போறதுக்கு

(தெம்மாங்கு)

என்ற பாடல் உணர்த்துகிறது.

### சகுனம் பார்க்கும் பழக்கம்

மனிதன் எக்காரியத்தினைத் தொடங்கினும் அதற்கு நல்லநேரம் பார்ப்பதும், நாள் நட்சத்திரம் பார்ப்பதும் எல்லா இன மக்களிடமும் காணப்படுகின்றன. தற்சமயம் நேரம் பார்த்து செயல் புரிவது போல, சகுனம் கண்டு காரியம் செய்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர் இவ்வின மக்கள்.

சாப்பிட்டுக் கைகழுவிச்
சவனம் பார்த்து வண்டியேறிப்
போராரு உங்க ஐயா
புது மதுர ஏலமிட

(தாலாட்டு)

இதில் வரும் 'சவனம்' எனும் சொல் 'சகுனம்' என்னும் பொருளில் வழங்கி வருகிறது. ஆகவே சகுனம் பார்க்கும் வழக்கம் இவ்வினத்தினரிடம் இருந்து வருகிறது என்பது தெளிவாகிறது.

### நற்சகுனமும் கெட்டசகுனமும்

சிவகாசி வட்டாரத்தில் வாழும் இவ்வின மக்கள் சகுனம் பார்ப்பதை வழக்கமாக் கொண்டுள்ளனர். நரி குறுக்கிடுதல், பல்லி சப்தமிடுதல், கழுதை கத்துதல், ஆந்தை கூட்டமாகச் சேர்ந்து அலறுதல், வண்ணான் அழுக்குத் துணியுடன் செல்லுதல், கருங்குருவி இடதுபக்கம் பாய்தல் (பறத்தல்) முதலிய செயல்களை நற்சகுனமாகக் கருதுகின்றனர்.

பூனை குறுக்கிடுதல், ஆமை குறுக்கே வருதல், பார்ப்பான் ஒருவனாக வருதல், வரிதலையுடைய பெண் குறுக்கிடுதல், முயல் குறுக்கிடுதல், சாரைப் பாம்பு குறுக்கிடுதல், ஆந்தை ஒற்றையாக நின்று அலறுதல், ஓர் ஆள் பின்னேயிருந்து கூப்பிடுதல், கண்ணாடி உடைதல் இவ்விதச் சகுனங்களால் ஏதாவது திங்கு விளையும் என்று நம்புகின்றனர்.

**பூக்கட்டி வைத்துப் பார்க்கும் பழக்கம்**

பூக்கட்டி வைத்துப் பார்த்து, அதிலிருந்து பெறும் முடிவே (தீர்ப்பே) தெய்வத்தின் தீர்ப்பு என்பதை இவ்வின மக்கள் நம்பி வருகின்றனர். இவ்வித நம்பிக்கை பிறஇன மக்களிடையும் காணப்படுகின்றது, இதனை,

> ஒட்டப் பிடாரத்திலே
> உலகநாதர் கோவிலில
> நான் பூக்கட்டி வச்சுப் பார்த்தேன்
> பொருந்தலையே எம்மனசு
>
> (தெம்மாங்கு)

பொருத்தம் பார்க்கும் முறை இவ்வின மக்களிடம் காணப்பட்டது. பூக்கட்டி வைத்துப் பெண்ணுக்கும், அவள் வாழ்க்கைத் துணைவனுக்கும் பொருத்தம் இருக்கின்றதா என்று பார்க்கும் வழக்கம் காணப்படுகிறது. பொருத்தம் (ராசி) பார்க்கும் நம்பிக்கை அனைத்து மக்களிடமும் உண்டு. குறிப்பாகத் திருமண நிகழ்ச்சியில் இவ்வித நம்பிக்கை அதிகம் பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

**வேறு சில நம்பிக்கைகள்**

காக்கை தம் வீட்டின் மேல்நின்று கரைந்து கொண்டிருந்தால், அன்று விருந்தினர் தம் இல்லத்திற்கு வரக்கூடும் என்று நம்புகின்றனர். வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் தங்கள் வீட்டிலிருந்து பொருட்களை மற்றவர்களுக்குத் தரமாட்டார்கள். இந்நம்பிக்கை சிலமக்களிடம் தவிர்க்கப் பட்டு வருகின்றது. சிவகாசி வட்டாரத்தில் வாழும் தேவேந்திரகுல வேளாள படித்த இளைஞர், படித்த பெண்கள் போன்றோரிடம் இம்மாதிரியான நம்பிக்கைகள் குறைந்து வருகின்றன.

**நாட்டுப்புறப் பாடல்வழி அறியலாகும் தெய்வழிபாடு**

திருவிழா நேரங்களில் இவர்கள் கும்மிப் பாடல்கள் பாடுகின்றனர். சில கும்மிப் பாடல்கள் வழி மத உணர்வும், வழிபாட்டு முறையும் அறிப்பட்டுள்ளன.

இவ்வினத்தார் குறிப்பாக ஆடி மாதம் அறுவடை முடிந்ததும் திருவிழா கொண்டாடுகின்றனர். இவ்வின மக்கள் காளியம்மனுக்குத் திருவிழா எடுக்கின்றனர். அப்பொழுது அவர்கள் கும்மிப் பாடல்கள் பாடுகின்றனர். இதன்வழி இவர்கள் தங்களுடைய இறைவழிபாட்டை வெளிப்படுத்துகின்றனர்.

**தெய்வங்கள்**

காளியம்மன், மாரியம்மன், கருப்பசாமி, செல்வீரம்மன் போன்ற தெய்வங்களை இவ்வினமக்கள் வணங்கி வருகின்றனர். குறிப்பாகக்

காளியம்மன் விழாவே சிறப்பாக நடத்தப்பட்டு வருகின்றது. அவர்கள் பாடும் கும்மிப் பாடல்களில் அத்தெய்வங்களின் பெயர்கள் இடம் பெறுகின்றன.

**காளியம்மன் கோவில**
**கணக்கதொரு இச்சி**
**இச்சியெல்லாம் பச்சி**

**(கும்மிப்பாடல்)**

**மாரியம்மன் கோவில்**
**மாவிளக்கு நூறு**
**மஞ்சப்பிள்ளை நூறு**

**(கும்மிப்பாடல்கல்)**

**இவ்வாறு அவர்கள் பாடும் பொழுது 'மாரியம்மன், காளியம்மன், பார்வதி, மூத்தாலம்மன், சக்தி, மீனாட்சி' போன்ற பெண் தெய்வங்களும் இடம் பெறுகின்றன.**

இவ்வின மக்கள் கும்மி அடிக்கும் முன்பு, பிற தெய்வங்களைப் பற்றி பாடும் முன்பாகக் கடவுள் வாழ்த்துப் பாடும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

முந்தி முந்தி விநாயகரே
முருகா சரஸ்வதியே
கந்தனுக்கு முன் பிறந்த
கணவதியே காப்பு (காப்பாய்)

(கும்மிப்பாடல்)

**இவ்வாறு தெய்வங்களைப் பற்றி பாடும் முன்பு விநாயகனுக்கும், முருகனுக்கும் சரஸ்வதிக்கும் வணக்கம் தெரிவிக்கும் பொருட்டு இப்பாடல் பாடப்படுகின்றது.**

**இவ்வினமக்கள் 'சக்தி' யை ஒரு பெண் தெய்வமாகக் கருதி வழிபடுகின்றனர். நாகப்பாம்பு 'சக்தியின்' வடிவம் என்று நம்புகின்றனர்.**

**ஆத்திலே அடகிடக்கும் அஞ்சுதலநாகம்**
**ஆளக்கண்டா படமெடுக்கும்**
**அம்மா ளோட சக்தி**

(கும்மிப்பாடல்)

**காளியம்மன் வழிபாடு**

சிவகாசி வட்டாரத்தில் உள்ள துலுக்கப்பட்டி, மணிம்பட்டி, பெரிய பொட்டல்பட்டி, சின்னப் பொட்டல்பட்டி, ஊராம்பட்டி, இராமச்சந்திராபுரம் என்ற புதூர், அம்மாபட்டி ஆகிய ஏழு ஊர் மக்களும் இத்தெய்வத்தை வணங்கி விழா எடுத்து வருகின்றனர். இத்தெய்வத்தின் திருவுருவங்கள் சில ஊர்களில் செம்பிலும், சில ஊர்களில் கல்லிலும் செய்யப்பட்டுள்ளன.

காளியம்மன் கோவில் கருவளையல் நூறு
அது அரும்பரும்பத் தோணும்
கதளி வாழைப் பழத்தக் கண்டா
கண்டகிளி ராவும்

(கும்மிப்பாடல்)

என்று பாடி காளியம்மன் சிறப்புப் பற்றிக் கூறுவர்.

சக்திகுட்டி வெட்டுதல், பொங்கல் வைத்தல், மாவிளக்கு எடுத்தல் போன்ற பழக்கங்கள் இவ்வின மக்களிடம் காணப்படுகின்றன. சாமியைச் சப்பரத்தில் வைத்துக் கொண்டு செல்லும் பழக்கம் உண்டு. (பொட்டல் பட்டி என்ற கிராமத்தில் இப்பழக்கம் உண்டு)

சின்னச்சின்ன மூங்கிவெட்டி
சின்னச் சப்பரம் சூடி
அதில் வார காளியம்மாளுக்கு
அலட்டிப் போடுங்க கும்மிய

(கும்மிப்பாடல்)

இவ்வாறு சப்பரத்தின் மீது வரும் தெய்வத்தைப் பார்த்துக் கும்மி அடிக்கின்றனர்.

### மாரியம்மன் திருவிழா

மாரியம்மனுக்குச் சிவகாசியில் மட்டும் விழா எடுக்கப் படுகின்றது. இவ்விழாவின்போது இவ்வினமக்கள் அத்தெய்வத்தை வேண்டி கும்மி அடித்து கிடாய் வெட்டுவர். தற்பொழுது யாரும் அவ்வாறு கிடாய் வெட்டுவதாகத் தெரியவில்லை. (கோயில் முன்பு வெட்டாமல் ஊர் எல்லையில் வைத்து வெட்டுவர்). இத்தெய்வத்தை நினைத்து நல்ல சுகத்தைத் தரவேண்டும் என்று வேண்டி மாவிளக்கு எடுக்கும் பழக்கம் உண்டு.

வயிற்று வலி தீர்ப்பாள் எங்கள் குலமாரி

(கும்மிப்பாடல்)

என்ற பாடலின் வழி வயிற்றுவலி திர்ப்பாள் மாரி என்று நம்புகின்றனர் என்பது தெரியவருகிறது.

### நேர்த்திக் கடன்கள்

இவர்கள் தாங்கள் கும்பிடுகின்ற தெய்வங்களுக்கு அக்கினிச் சட்டி எடுத்தல், கிடாய் வெட்டுதல், பொங்கல் வைத்தல், மாவிளக்கு எடுத்தல், சேவலைப் பயிலிடுதல், முளைப்பாரி அமைத்தல், மொட்டை அடித்தல், அரிவாள் அடித்து வைத்தல், துணியால் கல்லைக்கட்டி மரத்தில் தொங்கவிடுதல், ஈரத்துணியுடன் கோவிலைச் சுற்றி வருதல், கவுறுகுத்தல் போன்ற நேர்த்திக் கடன்களைச் செய்து வருகின்றனர்.

சமூகப் பண்பாட்டில் மிக உயர்ந்த நிலையில் உள்ள இவர்கள் மற்ற இனத்தவர்களுடன் சற்று வேறுபட்ட முறையில் விழா நடத்துகின்றனர். பொருளாதார நிலைகளுக்குத் தகுந்தாற்போல் விழாக்களின் சிறப்பு அமைந்துள்ளது.

**3. நாட்டுப்புறப் பாடல் வழி அறியப்படும் தொழில்கள்**

பழங்காலத்திலிருந்து சிவகாசி வட்டாரத்தில் வாழுகின்ற இவ்வின மக்களிடம் வேளாண்மைத் தொழில் காணப்பட்டு வந்திருக்கின்றது. பின்பு நாகரிகமும், கல்வி அறிவும் ஏற்பட்டு வேறு சில தொழில்களும் காணப்பட்டு வந்திருக்கின்றன. இன்றுள்ள நிலையில் இவ்வட்டாரத்தில் தீப்பெட்டித் தொழிலும், வெடிமருந்துத் தொழிலும் பெரும்பாலும் காணப்படுகின்றன. ஆகவே இங்கு வாழும் இவர்கள் இப்பொழுது இத்தொழிலில் அதிக ஆர்வம் கொண்டு செய்து வருகின்றனர்.

பொதுவாக உழவர்கள் இவர்களாகவே இருப்பார்கள். வயல் வேலைகள் முழுதும் இவர்களால் செய்யப்பட்டு வரும். வாரத்திற்கென்றும், குத்தகைக் கென்றும் வயல்களை அவர்களிடம் விட்டுவிடுவதுண்டு.

இன்று இப்பகுதியில் தொழிற்பாடல்கள் கிடைத்துள்ளன. அவற்றைக் கொண்டு இவர்களின் தொழிலைப் பற்றிக் காணலாம்.

வேளாண்மைத் தொழில் வகை

1. ஏர் பூட்டுதல்
2. ஏர் உழுதல்
3. விதை விதைத்தல்
4. நாற்று நடுதல்
5. களையெடுத்தல்
6. கதிரறுத்தல்
7. பொலி குவித்தல்
8. சூடு மிதித்தல்
9. நெல் குற்றல்

போன்ற எல்லாத் தொழில்களும் இங்கு காணப்பட்டு வருகின்றன.

**ஏர் பூட்டுதல்**

மாட்டை உழவர் செல்லமாக அழைத்துத் தன் பிள்ளையைக் கொஞ்சுவது போலப் பாடிக்கொண்ட ஏரில் பூட்டுவார்.

மா ரெண்டும் மதுரவெள்ள
மணிகள்ரெண்டும் தஞ்சாவூரு
குப்பி ரெண்டும் கும்ப கோணம்

குலுங்குதடி சாலப்பாதா

(தொழில் பாடல்)

இவ்வாறு மாட்டின் பெருமையைப் பற்றிக் கூறிக் கொண்டு மாட்டினை ஏரில் பூட்டி உழுவுத் தொழில் செய்யும் பழக்கம் இவ்வின மக்களிடம் அன்றிலிருந்து இன்றுவரை இருந்து வருகின்றது.

**ஏர் உழுதல்**

ஏரினைப் பூட்டி ஏர் உழ ஆரம்பிப்பார். அவ்வாறு உழும்பொழுது உழுகின்ற கலப்பை எப்படிப் பட்டது என்று கூறுவார்.

சந்தனக் கலப்பை வெட்டிப் பள்ளன்உழுவான்
சாதிச் சம்பா நத்தெடுத்து பள்ளி நடுவா
குங்குமம் கட்டவெட்டிப் பள்ளன் உழுவான்
சாதிலிங்க நாத்தெடுத்துப் பள்ளி நடுவா

இப்பாடலை நோக்குகின்ற பொழுது இவர்களுடைய குலத்தொழிலை வேளாண்மைத் தொழில் என்று கூறுவதில் ஐயம் இல்லை என்பது தெரிய வருகின்றது.

**களையெடுத்தல்**

விதைவிதைத்துவிட்டு, நாற்று நட்டவுடன் நாற்றுகள் நன்றாக வளர்ந்த பிறகு களையெடுக்கும் பழக்கம் உண்டு.

**கானக் கரிசலில**
**களையெடுக்கும் பெண்மயிலே**
**நீலக்கருங்குயிலே**
**நிக்கட்டாடி போகட்டாடி**
**களையெடுக்கும் பெண்மயிலே**

என்ற வரியில் ஒருபெண் களையெடுக்கும் போது அவளைப் பார்த்துக் கிண்டல் செய்வது போல் இருக்கிறது 'நிக்கட்டாடி' என்பது 'நில்' என்ற பொருளில் வழங்கப்படுகிறது.

**கதிரறுத்தல்**

பெரும்பாலும் இவ்வட்டாரத்தில் வாழுகின்ற இவ்வின ஆண்கள் கதிரறுக்கின்றனர். இப்பழக்கம் இன்றும் இருந்து வருகின்றது. ஆனால் தற்பொழுது இப்பழக்கம் குறைந்து கொண்டே வருகின்றது.

கருது அறுத்துக் கிறுகிறுத்துக்
கண்ணும் ரெண்டும் சோறப்போட்டு
நிலம் குளுந்த இச்சியில
நிக்கிறது சாமிதானம்

(தெம்மாங்குப் பாடல்கள்)

சாமிதானம் 'கொத்தாளு' என்று பொருள் படும். இப்பாடல் கதிர் அறுத்துக் கிறுகிறுத்துப் போகும் நிலையினைப் படம் பிடித்துக் காட்டுகின்றது.

பெரும்பாலும் கதிர்களை ஆண்கள் அடிக்கும் பழக்கம் இவ்வின மக்களிடம் காணப்பட்டு வருகின்றது. சோளம், கம்பு, நெல், மற்றும் உள்ள தானியங்கள் எது விளைந்தாலும் விளைந்த கதிர்களைக் களத்தில் கொண்டு வந்து போட்டு இவ்வின மக்களே கதிரினை அடிக்கின்றனர்.

### தீப்பெட்டித் தொழில்

இன்று, திப்பெட்டித் தொழிலும், வெடிகள் செய்யும் தொழிலும் இவர்களிடம் காணப்படுகின்றன. உழவுத் தொழிலையே தொடக்க காலத்திலிருந்து செய்த கொண்டிருந்த மக்கள் தற்பொழுது திப்பெட்டித் தொழிலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டு இருக்கின்றனர்.

### முடிவுகள்

சிவகாசி வட்டார தேவேந்திர குல வேளாள மக்களின் நாட்டுப்புறப் பாடல்கள் வழியாகப் பல பழக்க வழக்கங்கள் அறியப்படுகின்றன.

இவ்வினத்தவர்களுடைய சடங்குமுறைகள் மற்ற இனத்தவர்களின் சடங்கு முறைகளுடன் ஒப்புமைப்பட்டு இருந்தாலும் பல பழக்கவழக்கங்கள் மாறுபட்டுள்ளன. இவர்கள் திப்பெட்டித் தொழிலை இப்பொழுது முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். அதனால் இப்பகுதியில் விவசாயம் குறைந்து கொண்டே வருகிறது.

இவர்கள் தாங்கள் வணங்கும் தெவத்தின் மீது மிகுந்த நம்பிக்கை வைத்துள்ளனர்.

சிவகாசி வட்டார தேவேந்திர குல வேளாளப் பெண்களின் அணிகள், பொருளாதார நிலை, உறவுமுறைகள், சடங்குகள், ஏனைய சமுதாயத்துடன் கொண்ட உறவுகள், நாகரிகம் போன்ற தலைப்புகளில் மேலும் ஆய்வு மேற்கொள்ளலாம்.



# தேவேந்திரகுல வேளாளர்களின் சுற்றுப்புறச் சூழல் பற்றிய மரபுவழி அறிவியல்

ஆய்வாளர் சு. மாயழகு
நாட்டுப் புறவியல் துறை, தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை - 625 011.

வேளாண்மைத் தொழிலுக்கும் சுற்றுப்புறச் சூழலுக்கும் மிக நெருக்கமான தொடர்பு உண்டு. வேளாண்மைத் தொழில் நிலம் சார்ந்ததாகவும், நிலம் நீர் சார்ந்ததாகவும் விளங்குகிறது. நீர்வளமுள்ள நிலத்தில் தாவரங்கள் இயற்கையாகவே செழித்து வளர்வது ஒரு புறமிருக்க மக்கள் தங்களுடைய தேவைக் கேற்பத் திட்டமிட்டு தாவரங்களை வளர்த்தால் அவை இன்னும் வளமாக வளரும். தாவரங்கள் செழித்து வளரும் நிலப்பகுதியில் காற்று மாசுபடாமல் தூய்மையாக இருக்கும். ஆகவே நிலமும், நீரும், காற்றும் வளமையோடு இருப்பதால் அப்பகுதியில் வாழும் மனிதர்களும் மற்ற உயிரினங்களும் பல்கிப்பெருகும். இவ்வாறு பெருகுகின்ற உயிரினங்கள் மறுபடியும் தாவர வளர்ச்சியில் தாக்கத்தை ஏற்படுத்தும். உயிரினங்கள் தாவரங்களை உணவாக கொள்வதும், தாவரங்களுக்கு உணவாக உயிரினங்களும் உயிரினங்களின் கழிவுப்பொருள்கள் பயன்படுவதும் ஆகிய சுழல்முறைச் சுற்றுப்புறச் சூழலில் மாற்றம் ஏற்படுகிறது.

இவ்வாறு சுற்றுப்புறச் சூழலைத் திர்மாணிக்கின்ற வேளாண்மைத் தொழிலில் ஈடுபடுகின்ற தேவேந்திரகுல வேளாளர்கள் வேளாண்மைத் தொழில் பற்றியும், சுற்றுப்புறச் சூழல் பற்றியுமான மரபுவழிச் சிந்தனைகளை உருவாக்கி வைத்திருப்பது ஆச்சரியப்படத்தக்கதல்ல. ஆனால் இன்றைய நிலையில் தேவேந்திரகுல வேளார்களின் மரபு வழி அறிவியல் சிந்தனைகள் புறக்கணிக்கப் படுகின்றன. இன்றைய நவீன அறிவியலை மக்கள் நலம் சார்ந்த அறிவியலாக மாற்றுவதற்குரிய வழிமுறைகள், தேவேந்திரகுல வேளார்களின் மரபுவழி அறிவியல் சிந்தனைப் போக்குகளில் காணப்படுகின்றன. எனவே இத்தகைய மரபுவழி அறிவியல் சிந்தனைகளை எழுத்தில் பதிவு செய்வது காலத்தின் கட்டாயமாகும். எனவேதான் இக்கட்டுரையில் தேவேந்திரகுல வேளாளர்களின் சுற்றுப்புறச் சூழல் பற்றிய மரபுவழி அறிவியல் கருத்துக்கள் கள ஆய்வின் மூலமாகத் தொகுக்கப்பட்டு வகை, தொகைப் படுத்தப்பட்டு விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

சுற்றுப்புறச் சூழல் என்பது நிலம், நீர், காற்று, மக்களின் உணவு, உடை, உறையுள் பழக்க வழக்கங்கள், போக்குவரத்து முறைகள் போன்ற பல்வேறு அம்சங்களோடு தொடர்புடையது. இவை எல்லாவற்றையும் பற்றி இக்கட்டுரையில் விளக்க இயலாது. எனவே நிலம் பற்றிய

தேவேந்திரகுல வேளாளர்களின் மரபு வழியான அறிவியல் சிந்தனைகள் மட்டும் இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப்படுகின்றன. நிலம் என்பது சுற்றுப்புறச் சூழல் தொடர்பான கூறுகளில் மிக முக்கியமாக ஒன்று என்பதாலும் அது வேளாண்மைத் தொழில் மூலமாக ஆரோக்கியமான நிலையில் பாதுகாக்கப்பட்டு வருவதாலும், அதனைப் பற்றி விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

### சுற்றுப்புறச் சூழலும் நிலமும்

சுற்றுப்புறச் சூழலின் கூறுகளில் ஒன்றாக நிலம் விளங்குகின்றது. நிலத்தின் பாதிப்பு சுற்றுப்புறச் சூழலின் மற்ற கூறுகளையும் பாதிக்கிறது. அதாவது நிலத்தின் தன்மை காற்றின் தன்மையைப் பாதிப்பதோடு, அந்நிலம் சார்ந்த மற்ற உயிரினங்களின் தன்மையையும் பாதிக்கிறது. சான்றாக நல்ல நீர் கிடைக்கின்ற நிலம் வளமான நிலமாக விளங்குகின்றது. இதனை வேறுமுறையில் சொல்வதென்றால் வளமையான நிலத்தில் நல்ல நீர் கிடைக்கின்றது. இத்தகைய நிலத்தில் பயிரினங்கள் செழிப்பாக வளர்கின்றன. மேலும் இப்பயிரினங்களை நம்பி வாழ்கின்ற மனிதர்களின் வாழ்க்கையும் வளமாக அமைகிறது. அதாவது பொருளாதார நிலையில் மட்டுமின்றி உயிரியல் நிலையிலும் நலமான வாழ்க்கை இந்நிலங்களில் வாழ்கின்ற தேவேந்திர குல மக்களுக்குக் கிடைக்கின்றது. எனவே இவ்வளமான நிலம் மனிதர்களின் வேறு சில நடவடிக்கையினால் பாதிக்கப்படும்போது அந்நிலத்திற்கடியில் இருக்கும் நீரும், மனித வாழ்க்கையும் பாதிக்கப்படுகின்றன.

கமுதி வட்டாரப் பேரையூர் பஞ்சாயத்தைச் சேர்ந்த கிராமப்புற மக்கள், குறிப்பாகத் தேவேந்திர குல வேளாளர்கள் பெரும்பாலும் வேளாண்மைத் தொழிலைச் சார்ந்திருப்பதால் அத்தொழிலுக்கு மூலமாக விளங்குகின்ற நிலத்தைப் பற்றிய ஆழமான அறிவைப் பெற்றிருக்கிறார்கள். நிலத்தின் பல்வேறு பண்புகளின் அடிப்படையில் நிலத்தின் வகைகளைப் பற்றியும் ஒவ்வொரு வகையான நிலத்திலும் கிடைக்கக் கூடிய நீரின் தன்மையைப் பற்றியும் இத்தகைய நிலங்களில் எத்தகைய பயிரினங்கள் விளையும் என்பதைப் பற்றியும் அந்நிலங்களைச் சார்ந்த தம்முடைய வாழ்க்கையை எப்படி அமைத்துக் கொள்ளவேண்டும் என்பதைப் பற்றியும் அந்நிலங்களின் தன்மை கெடாமல் எவ்வாறு பாதுகாக்கப்பட வேண்டும் என்பதைப் பற்றியும் தேவேந்திர குல வேளாளர்கள் மிகவும் நுட்பமாக அறிந்து வைத்து இருக்கிறார்கள். இக்கட்டுரை பேரையூர் பஞ்சாயத்திற்குள் அடங்கிய கிராமங்களில் வாழ்கின்ற தேவேந்திர குல வேளாளர்கள் தங்கள் நிலம் குறித்தும் சுற்றுப்புறச் சூழலுக்கும் நிலத்திற்கும் இடையே உள்ள தொடர்பு குறித்தும் பெற்றிருக்கும் மரபுவழி சிந்தனைகள் விளக்குகிறது.

## தேவேந்திர குல வேளாளர்கள் நிலத்தை வகைப்படுத்தும் முறை

பேரையூர்ப் பஞ்சாயத்தில் அடங்கிய கிராமங்களில் வாழ்கின்ற தேவேந்திர குல வேளாளர்கள் தாங்கள் வாழ்கின்ற மற்றும் சார்ந்திருக்கின்ற நிலங்களைத் தங்களுடைய அனுபவத்தின் அடிப்படையில் பல்வேறு வகைகளாகப் பிரித்து இருப்பதைக் கள ஆய்வின் மூலமாக அறிந்து கொள்ள முடிந்தது.

### மண்ணின் தன்மைக்கேற்ப நிலத்தை பிரித்தல்

மண்ணின் தன்மைக்கு ஏற்ப நிலத்தினைத் தேவேந்திர குல வேளாளர்கள் கீழ்க் காணுமாறு ஆறு வகையாகப் பிரித்துள்ளனர். அவை,

1. செம்மண் நிலம்
2. கரிசல் மண் நிலம்
3. வண்டல் மண் நிலம்
4. பொட்டல் மண் நிலம்
5. இருசாழி மண் நிலம்
6. கொசப்பய நிலம்

இவ்வாறு மண்ணைப் பற்றியும், மண்ணின் பண்புகளைப் பற்றியும் அம்மண்ணில் விளையும் பயிர்களைப் பற்றியும் தேவேந்திர குல வேளாளர் மிக நுட்பமாக அறிந்து வைத்துள்ளனர்.

### 1. செம்மண் நிலம்

தேவேந்திர குல வேளாளர்கள் செம்மண் நிலத்தை மூன்று வகையாகப் பிரிக்கின்றனர். அவை,

1. செங்காட்டு நிலம்
2. செம்பாறை நிலம்
3. செங்கரிசல் நிலம்

ஆகியவை ஆகும்.

### செங்காட்டு நிலமும் அதன் பண்புகளும்

பேரையூர் வடக்குப் பகுதியில் செங்காட்டு நிலங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. சிவப்பு நிறமுடைய இந்நிலம் மழைக் காலங்களில் அதிகமான நீரை உள்வாங்கிக் கொள்ளும் தன்மை கொண்டது. இந்நிலத்தில் தொடர்ந்து ஈரப்பதம் இருந்து கொண்டிருப்பதால் கோடை காலங்களில் வெடிப்பு ஏற்படாதென்று குறிப்பிடுகின்றனர். இந்நிலத்தில் பயிர்கள் செழித்து வளர்வதால் இதனைச் சார்ந்து வாழும் தேவேந்திர குல மக்களின் வாழ்க்கை முறையும் வளமாக அமைவதாகச்

கூறுகிறார்கள். அதாவது நலமான வாழ்க்கையும் பொருளாதார வசதியும் சிறப்பாக அமைகிறது என்று குறிப்பிடுகின்றனர்.

**செங்காட்டு நிலத்தில் விளையும் பயிர்கள்**

செங்காட்டு நிலத்தில் நிலக்கடலை, வாழை, சர்க்கரை வள்ளிக் கிழங்கு, மரவள்ளிக் கிழங்கு, உளுந்து, தட்டைப்பயறு, பாசிப்பயறு, துவரை, மொச்சைப்பயறு, எள், தினை, கேப்பை போன்ற பயிர்கள் செழிப்பாக வளர்வதாகக் கூறுகின்றனர். (இ. குருவையா தேவேந்திரர் பேரையூர்: 24.03.98)

**செம்பாறை நிலமும் அதன் பண்புகளும்**

பாறைகள் அதிகமாகக் காணப்படும் செம்மண் நிலம் "செம்பாறை நிலம்" என்று தேவேந்திர குல மக்களால் அழைக்கப் படுகிறது. இந்நிலத்தில் எந்தப் பயிரும் விளைவதில்லை. ஆனால் இந்நிலத்திற்கடியில் தண்ணீர் அதிகமாகக் கிடைக்கும் என்றும் குடியிருப்புகள் அமைப்பதற்கு ஏற்ற நிலம் என்றும் கருதுகின்றனர்.

**செங்கரிசல் நிலமும் அதன் பண்புகளும்**

செம்மண் நிலத்தில் கரிசல் மண் கலந்து காணப்படுவதால் அதனைச் "செங்கரிசல் நிலம்" என்றும் "செங்காட்டுக் கரிசல் நிலம்" என்றும் அழைக்கின்றனர். பேரையூரின் தெற்குப் பகுதிகளில் இந்நிலங்கள் காணப்படுகின்றன.

**செங்கரிசல் நிலத்தில் விளையும் பயிர்கள்**

செங்கரிசல் நிலத்தில் ஈரத்தண்மை அதிகமாக இருந்து கொண்டேயிருப்பதால் பருத்தி, மிளகாய் போன்ற பயிர்கள் செழிப்பாக வளரும் என்று குறிப்பிடுகின்றனர். (க. தங்கசாமி தேவேந்திரர் பேரையூர்12.04.98)

மேட்டுப்பட்டி கிராமத்தைச் சுற்றியுள்ள நிலங்களில் கரிசல் (மண்) நிலங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. இந்நிலங்களை மேட்டுப்பட்டியைச் சேர்ந்த தேவேந்திரர்கள் அவற்றின் தன்மைகளுக்கேற்றவாறு வகைப்படுத்துகின்றார்கள். மேலும் அந்நிலங்களில் விளையும் பயிர்களைப் பற்றியும் மிகத் தெளிவாக அறிந்து வைத்திருக்கிறார்கள்.

**கரிசல் நிலத்தின் வகைகள்**

தேவேந்திர குல வேளார்கள் கரிசல் நிலத்தில் காணப்படும் மண்ணின் தன்மையைப் பொறுத்துக் கீழ்கண்டவாறு வகைப்படுத்துகின்றனர். அவை

1. கருங்கரிசல்
2. ஊளைக்கரிசல்
3. நொய்க்கரிசல்
4. ஈழக்கரிசல்
5. பொக்குக் கரிசல்
6. நிலக்கரிசல்
7. நண்டுக் கொழுப்புக் (மண்) கரிசல்

என ஏழு வகையாக பிரிக்கின்றனர். இந்நிலங்களில் தானியப் பயிர்களும் பயறு வகைப் பயிர்களும் செழிப்பாக வளர்வதால் இந்நிலத்தில் வாழும் தேவேந்திர குல மக்களின் வாழ்க்கை நிலையும் பொருளாதார நிலையும் வளமாக இருப்பதாகக் குறிப்பிடுகின்றனர்.

**கருங்கரிசல் நிலம்**

மேட்டுப்பட்டிக் கிராமத்தின் கிழக்குப் பகுதிகளில் கருங்கரிசல் நிலம் அதிகமாகக் காணப்படுகிறது. இவ்வகை நிலத்தில் மண் கருப்பு நிறமாகவும், கல், ஒடுகல் மற்றும் முள் போன்றவை இல்லாமல் சுத்தமாகவும் இருக்கின்ற காரணத்தால் இந்நிலத்தைக் கருங்கரிசல் நிலமென்றும் “தனிக்கரிசல் நிலம்” என்றும் கூறுகின்றனர். மேலும் இந்நிலத்தில் விழும் நீரானது நிலத்தின் மேலே தேங்காமல் உள்வாங்கிக் கொள்ளப்படுவதால் அதிக நாட்கள் ஈரப்பதம் உடையதாக இருக்கும் எனக் கூறுகிறார்கள்.

**கருங்கரிசல் நிலத்தில் விளையும் பயிர்கள்**

இந்நிலத்தில் நெல், பருத்தி, மிளகாய், சோளம், கம்பு, கேப்பை, குதிரைவள்ளி, தினை, வரகு, கத்தரிக்காய், வெண்டைக்காய் போன்ற பயிர்கள் செழிப்பாக விளைவதாகக் குறிப்பிடுகின்றனர்.

**ஊளைக் கரிசல்**

மேட்டுப்பட்டிக் கிராமத்தைச் சுற்றியுள்ள கிழக்குப் பகுதியில் இந்நிலம் அதிகமாகக் காணப்படுகிறது. இந்நிலம் வண்டல் மண் கலந்த கரிசல் மண்ணைக் கொண்டிருப்பதாலும் அதிகமான நீரை உள்வாங்கிக் கொண்டாலும் விரைவாக உலர்ந்து விடுவதால் மழைக்காலத்தில் மட்டும் இந்நிலங்களில் பயிர்கள் விளையுமென்றும் குறிப்பிடுகின்றனர். வண்டலும், கரிசலும், கலந்திருப்பதால் நீர் அதிகமாகத் தேங்கிச் சேறும், சகதியுமாய்க் காணப்படுவதால் இதனை “அழிக்கரிசல்” என்றும் குறிப்பிடுகின்றனர்.

**ஊழைக் கரிசல் நிலத்தில் விளையும் பயிர்கள்**

இந்நிலங்களில் கம்பு, சோளம், குதிரைவள்ளி, கேப்பை, வரகு போன்ற பயிர்கள் வளர்வதாகக் கூறுகின்றனர். (ம. துரைராஜ் தேவேந்திரர் மேட்டுப்பட்டி: 20.04.98)

**நொய்க் கரிசல்**

மேட்டுப்பட்டிக் கிராமத்தின் மேற்குப் பகுதிகளில் இந்நிலம் அதிகமாகக் காணப்படுகிறது. இந்நிலம் பொட்டலாகக் காணப்படுவதாலும் சுத்தமாக இல்லாமல் வழுவழுப்பாக இருப்பதாலும் இதனை "நொய்க் கரிசல் நிலம்"' என்று குறிப்பிடுகின்றனர்.

**நொய்க் கரிசல் நிலத்தில் விளையும் பயிர்கள்**

இவ்வகை நிலத்தில் கம்பு, சோளம், கேப்பை, வரகு, தினை, குதிரைவள்ளி, பாகற்காய், வெள்ளரிக்காய், போன்ற பயிர்கள் செழிப்பாக விளைவதாகக் குறிப்பிடுகின்றனர்.

**ஈழக் கரிசல்**

மேட்டுப்பட்டிக் கிராமத்தில் மேற்குப் பகுதியில் இத்தகைய நிலம் அதிகமாக காணப்படுகின்றது. இந்நிலத்தில் களிக்கூறு அதிகமாகக் காணப்படுவதால் அதிகமான நீர் உள்வாங்கப்படாமல் மேலே தேங்கி நின்று வறண்டு போவதால் இந்நிலத்தின் உட்பகுதியில் ஈரப்பதம் இருப்பதில்லை என்று கூறுகின்றனர். எனவே இந்நிலம் பயிர் செய்ய உகந்தது இல்லை எனக் குறிப்பிடுகின்றனர். (வா. சுந்தரராஜ் தேவேந்திரர் மேட்டுப்பட்டி:30.04.98)

**பொக்குக் கரிசல்**

மேட்டுப்பட்டிக் கிராமத்தின் தெற்குப் பகுதியில் இவ்வகை நிலங்கள் காணப்படுகின்றன. இந்நிலங்களில் மணல் அதிகமாகக் காணப்படுவதாலும், இம்மண்ணானது சொரசொரப்பாகவும் கூடு போன்றும் காணப்படுவதாலும் இதனைப் "பொக்குக் கரிசல்" என்று குறிப்பிடுகின்றனர். இவ்வகை நிலங்களில் மண் ஒட்டாமல் தனித்து இருப்பதாலும் கல், ஒடுகல் அதிகமாகக் காணப்படுவதாலும் இவற்றில் பயிர் செய்யப்படுவதில்லை என்றும் கூறுகின்றனர்.

**நீலக் கரிசல்**

மேட்டுப்பட்டிக் கிராமத்தில் கண்மாய்ப் பகுதியில் இவ்வகை மண் கொண்ட நிலங்கள் காணப்படுகின்றன: இந்நிலம் வண்டல் கலந்த மணல் பகுதியாகும். இந்நிலமானது அதிகமான நீரை உள்வாங்கிக் கொள்வதாலும் மணல் கலந்து வெளுத்து நீல நிறத்தில் காணப்படுவதாலும் இதனை "நீலக் கரிசல்" என்று கூறுகின்றனர்.

**நீலக் கரிசல் நிலத்தில் விளையும் பயிர்கள்**

இந்நிலங்களில் பருத்தி, மிளகாய் போன்ற பயிர்கள் குறைந்தளவே மகசூல் தருவதாகக் குறிப்பிடுகின்றனர். (அ. வெள்ளைச்சாமி தேவேந்திரர் மேட்டுப்பட்டி: 02.05.98)

**நண்டுக் கொழுப்புக் (மண்) கரிசல்**

கண்மாயைச் சுற்றியுள்ள பகுதிகளில் இவ்வகை மண் காணப்படுகிறது. இந்நிலம் அதிகமான நீரை உள்வாங்கிக் கொண்டு ஈரப்பதமாகக் காணப்படும். மழைக் காலங்களில் நண்டுகள் கூடு கட்டுவதற்கு ஏற்ற வகையில் மண்ணானது இளகிச் சேறும் சகதியுமாகக் காணப்படுவதால் இந்நிலப்பகுதியை "நண்டுக் கொழுப்பு நிலம்" என்று குறிப்பிடுகின்றனர். இந்நிலத்தில் நெல் பயிர் செய்யப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர்.

**வண்டல் நிலம்**

இந்நிலம் பேரையூர்ப் பஞ்சாயத்தைச் சுற்றியுள்ள செங்கோட்டைப்பட்டி, சங்கரப்பன்பட்டி ஆகிய கிராமங்களில் அதிகமாகக் காணப்படுகிறது. இக்கிராமங்களில் வாழும் தேவேந்திரர்கள் மண்ணின் தன்மைக் கேற்றவாறு மூன்று வகையாகப் பிரிக்கின்றனர். அவை,

1. வண்டல்
2. கரு வண்டல்
3. படி வண்டல்

ஆகியவை ஆகும்.

**வண்டல்**

இம்மண்ணானது ஆற்றில் அடித்து வரப்பட்டு நிலங்களில் படிவதால் இம்மண் மென்மையாக இருக்கிறது. இதனை வண்டல்மண் என்று குறிப்பிடுகின்றனர். இந்நிலம் நீரைக் குறைவாக உறிஞ்சும் தன்மை உடையதாகவும் உடனடியாக உலர்ந்து விடுவதாகவும் இருப்பதால் மழை தொடர்ந்து பெய்யும்போது மட்டுமே பயிர்கள் விளையும் என்று குறிப்பிடுகின்றனர்.

**வண்டல் நிலத்தில் விளையும் பயிர்கள்**

வண்டல் நிலத்தில் மிளகாய், பருத்தி, மொச்சைப்பயிறு, உளுந்து, பாசிப்பயறு, அவரை, போன்ற பயிர்கள் விளையும் என்று குறிப்பிடுகின்றனர்.

கரு வண்டல்

செங்கோட்டைப்பட்டி கிராமத்தின் தென்பகுதியில் கருவண்டல் நிலம் காணப்படுகிறது. இந்நிலமானது களிமண் கலந்த வண்டல் மண்ணை உடையதாகவும் ஈரப்பதம் தொடர்ந்து இருந்து கொண்டிருப்பதாலும் கருமை நிறத்தில் காணப்படுவதாலும் இதனை கருவண்டல் மண் என்றும் தனி வண்டல் மண் என்றும் குறிப்பிடுகின்றனர்.

கருவண்டல் நிலத்தில் விளையும் பயிர்கள்

இந்நிலங்களில் பருத்தி, மிளகாய், பாசிப்பயறு, உளுந்து, தட்டைப்பயறு, அவரைக்காய், போன்ற பயிர்கள் நன்கு செழித்து வளரும் என்று குறிப்பிடுகின்றனர்.

படிவண்டல்

இந்நிலமானது சங்கரப்பன்பட்டி கிராமத்தின் வடபகுதியில் அதிகமாகக் காணப்படுகிறது. இம்மண்ணானது ஆற்றுப்பகுதியிலிருந்து அதிக வெள்ளத்தால் அடித்து வரப்பட்டுப் படிந்து காணப்படுவதாலும் சாம்பல் நிறத்தில் காணப்படுவதாலும் இதனைப் படிவண்டல் என்று குறிப்பிடுகின்றனர். மேலும் இம்மண் பல நிலங்களிலிருந்து அடித்து வரப்படுவதால் ஊட்டச்சத்து உடையது என்றும் குறிப்பிடுகின்றனர்.

படிவண்டல் நிலத்தில் விளையும் பயிர்கள்

இந்நிலத்தில் பருத்தி, மிளகாய், மொச்சைப்பயறு, தட்டைப்பயறு, பாசிப்பயறு, உளுந்து, அவரை, துவரை, போன்ற பயிர்கள் செழிப்பாக வளர்வதாகக் கூறுகின்றனர். மேலும் கோடைக்காலத்தில் மழை பெய்தால் அம்மழை நீரைக் கொண்டு கத்தரி, வெண்டைக்காய் போன்ற பயிர்களைப் பயிர்செய்யலாம் என்றும் குறிப்பிடுகின்றனர். (அ. செல்லச்சாமி தேவேந்திரர் செங்கோட்டைப்பட்டி:29.05.98)

பொட்டல் நிலம்

பொட்டல் நிலமானது மேட்டுப்பட்டிக் கிராமத்தை அடுத்துள்ள சேர்ந்தகோட்டை, சாமிபட்டி ஆகிய கிராமங்களில் தெற்கு பகுதிகளில் அதிகமாகக் காணப்படுகிறது. இந்நிலம் இறுகிய தன்மை கொண்டதாலும் மிகவும் வெளுத்துக் காணப்படுவதாலும் இதனைப் பொட்டல் நிலம் என்று குறிப்பிடுகின்றனர். மேலும் இந்நிலம் நீரை உள்வாங்கிக் கொள்வதாலும் ஈரப்பதம் தொடர்ந்து இருந்துகொண்டே இருப்பதாலும் எல்லா விதமான பயிர்களும் இதில் பயிர்செய்யலாம் என்றும் இம்மண் வீடு கட்டுவதற்குரிய செங்கல் செய்வதற்கும் பயன்படுவதாகவும் கூறுகின்றனர்.

### பொட்டல் நிலத்தில் விளையும் பயிர்கள்

இந்நிலத்தில் நெற்பயிர் நன்றாக விளைவதாகக் கூறுகிறார்கள். ஈரம் அதிகமாக இருந்து கொண்டே இருப்பதால் பருத்தி, மிளகாய், கத்தரி, கேப்பை, வெண்டைக்காய் போன்ற பயிர்கள் பயிர் செய்யப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். (சி. கருப்பையா தேவேந்திரர் சேர்ந்தகோட்டை : 08.05.98)

### இருசாதி நிலம்

இருசாதி நிலம் என்பது பொதுவாக எல்லா இடங்களிலும் காணப்படுகிறது. குறிப்பாக பேரையூர் மேட்டுப்பட்டி, செங்கோட்டைப்பட்டி, சாமிபட்டி, கிழவலசை, சங்கரப்பன்பட்டி போன்ற கிராமங்களில் இம்மண் அதிகமாகக் காணப்படுகிறது. இருசாதி நிலம் என்பது இரண்டு வகையான மண்ணைக் கொண்டு காணப்படுகிறது. அதாவது செம்மண்ணுடன் கரிசல் மண் கலந்து காணப்படுவதை "இருசாதி மண்" (நிலம்) என்று குறிப்பிடுகின்றனர்.

### இருசாதி நிலத்தில் விளையும் பயிர்கள்

இந்நிலங்களில் இரண்டு வகையான மண் காணப்படுவதால் கத்தரி, மிளகாய், வெண்டை, தட்டைப்பயறு, உளுந்தம் பயறு, துவரை, மொச்சை, அவரை, கேப்பை, கம்பு, சோளம், நெல், குதிரைவள்ளி, வரகு, தினை, சர்க்கரை வள்ளிக்கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு போன்ற பயிர்கள் செழிப்பாக விளைவதாகக் குறிப்பிடுகின்றனர்.

### கொசப்பய நிலம்

இந்நிலப்பகுதி பேரையூர் கிழக்குப் பகுதிகளில் காணப்படுகிறது. இவ்வகை நிலத்தில் எந்தப் பயிர்களும் சரியாக விளைவதில்லை. ஆனால் இந்நிலங்களில் காணப்படும் மண்ணைக் குயவர்கள் பானை, சட்டி, மற்றும் கைவினைப்பொருள் செய்யப் பயன்படுத்துவதால் இந்நிலத்தைக் "கொசப்பயநிலம்" என்று குறிப்பிடுகின்றனர்.

மேலும் இந்நிலப் பகுதியில் காணப்படும் மண்ணானது உலர்ந்து காணப்படுவதால் நீர் பட்டவுடன் சேறும் சகதியுமாய் இருப்பதால் வேளாண்மை வேலைகள் செய்ய தகுதியற்றது எனக் குறிப்பிடுகின்றனர். (ச. இருளாண்டி தேவேந்திரர், சங்கரப்பன்பட்டி:08.06.98)

### நீரின் தன்மைக்கேற்ப நிலத்தைப் பிரித்தல்

தேவேந்திர குல வேளாளர்கள் மண்ணின் தன்மைக் கேற்றவாறு நிலங்களைப் பிரித்திருப்பதைப் போன்றே நீரின் தன்மைக்கேற்றவாறும் நிலங்களைப் பிரிக்கின்றனர்.

நிலத்தின் அடியிலிருந்து பெறப்படும் நீரைக் கொண்டு பேரையூர் மற்றும் கிழவலசைக் கிராமங்களில் உள்ள தேவேந்திரர்கள் நிலத்தை இரண்டு வகையாகப் பிரிக்கின்றனர். அவை,

1. உவர் நிலம்
2. உப்பு நிலம்

**உவர் நிலம்**

இந்நிலம் கிழவலசைக் கிராமத்தின் தென்பகுதியில் அதிகமாகக் காணப்படுகிறது. இந்நிலம் நீரின் தன்னைமக்கேற்ப அமையும் என்கிறார்கள். இந்நிலத்தில் உவர் நீர் அதிகமாகக் காணப்படுவதாலும் அந்நீரையே நிலங்களுக்கும் பாய்ச்சுவதாலும் இந்நிலத்தினை உவர்நிலம் என்று குறிப்பிடுகின்றனர். அதாவது உவடு பாய்ந்து காணப்படுவதாகவும் குறிப்பிடுகின்றனர். உவடு என்பது நிலத்தின் மேல் மண்ணானது அடிமண்ணோடு ஒட்டாமல் இருப்பதை குறிக்கின்றனர்.

**உவர் நிலத்தில் விளையும் பயிர்கள்**

உவர் நிலங்களில் கோடைக் காலங்களில் மட்டுமே பயிர் செய்ய முடியும் என்கிறார்கள். முக்கிய பயிர்களாகப் பருத்தி, கத்தரிக்காய், கம்பு போன்றவை நன்கு செழிப்பாக வளர்கின்றன. கோடைக் காலங்களில் இந்நிலத்தில் விளையும் பயிர்களைக் கோடைக்கத்தரி, கோடைக்கம்பு என்றும் குறிப்பிடுகின்றனர்.

**உப்பு நிலம்**

இந்நிலமானது மேட்டுப்பட்டி, பேரையூர், சேர்ந்தகோட்டை, சாமிபட்டி ஆகிய ஊர்களின் வடபகுதியில் காணப்படுகிறது. இந்நிலத்தை நீரின் தன்மை கொண்ட அடையாளம் காண்கின்றனர். அதாவது கிணற்றிலுள்ள உப்புநீரைப் பயிர்களில் பாய்ச்சுவதால் நிலங்களில் உப்புப் படிந்து காணப்படும். எனவே இதனை உப்பு நிலம் என்று குறிப்பிடுகின்றனர். மேலும் உப்பு மண்ணானது பிரிந்தும் பொங்கியும் காணப்படுவதால் கோடைக்காலத்தில் மட்டுமே பயிர் செய்ய முடியும் என்று கூறுகின்றனர்.

**உப்பு நிலத்தில் விளையும் பயிர்கள்**

இந்நிலத்தில் பருத்தி, கத்தரி, வெண்டை, கம்பு, கேப்பை போன்ற பயிர்கள் ஓரளவு விளையும் என்று குறிப்பிடுகின்றனர். (க. தங்கராசு தேவேந்திரர், கிழவலசை:21.06.98)

## நிலங்களைப் பாதுகாத்தல் - மரபு வழி அறிவு

தேவந்திர குல வேளாளர்கள் வேளாண்மைத் தொழிலை முதன்மையானதாகக் கருதுவதால் வேளாண்மை நிலங்களைப்

பாதுகாப்பதில் முக்கியக்கவனம் செலுத்துகின்றனர். குறிப்பாக நிலங்களில் வேளாண்மை செய்யாமல் தரிசாகப் போட்டு வைப்பதால் நிலங்களில் விரிசல் ஏற்பட்டு மண்ணின் தன்மை பாதிக்கின்றது என்று நம்புகின்றனர். எனவே நிலத்தில் தொடர்ந்து ஏதாவது பயிர் செய்ய வேண்டும் என்றும், அவ்வாறு செய்வதால் நிலத்தின் மேல் மண், அடிமண் போன்றவை மாறுபட்டு பயிர்களுக்கு இடப்படும் இயற்கை உரம் பயன்தந்து கொண்டேயிருக்கும் என்றும் கூறுகின்றனர். (அ. குமரையா தேவேந்திரர், சேர்ந்தைக்கோட்டை:13.05.98)

**பயிர் செய்யும் காலம் பற்றிய மரபு வழி அறிவு**

பொதுவாக வேளாண்மைத் தொழிலையே நம்பி வாழ்கின்ற தேவேந்திர குல வேளாளர்கள் பயிர் செய்யும் காலம் பற்றியும் மிக நுட்பமாக அறிந்து வைத்துள்ளனர். செம்மண் நிலம், கரிசல் நிலம், வண்டல் நிலம், பொட்டல் நிலம் ஆகிய நிலங்கள் மழையை நம்பியிருப்பதால் புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில் அவற்றில் வேளாண்மை செய்கின்றனர். கோடைக் காலங்களில் நிலத்தை உழுது காயவிட்டு விடுகின்றனர். மேலும் தட்ப வெப்ப நிலைகளுக்குத் தகுந்தாற்போல் நிலங்களைப் பக்குவப்படுத்தி வளமையான பயிர்களான வாழை, தென்னை, சர்க்கரை வள்ளிக்கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு, நெல் போன்ற பயிர்களைப் பயிர் செய்வதால் நிலத்தின் தன்மை கெடாமல் பாதுகாக்கப்படுவதாகக் கூறுகின்றனர். குறிப்பாகக் கோடைக்காலத்தில் விளையக்கூடிய பயிர்களைக் காலத்தில் பயிர் செய்யவேண்டும் என்றும் அதற்கு மாறுபட்டால் பயிர் விளைச்சலில்லாமல் போவதுடன் நிலமும் பாதிக்கப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். மேலும் இத்தகைய வளமையான பயிர்கள் பயிர்செய்யப்படுவதால் நிலத்தின் இறுக்கத்தன்மை மாற்றப்பட்டு, விரிசல் இல்லாமல் பாதுகாக்கப்படுவதாகக் கூறுகின்றனர். தேவேந்திர குல வேளாளர்கள் உரிய காலத்தில் உரிய நிலத்தில் பயிரைப் பயிர் செய்வதை முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளதைக் கள ஆய்வில் காணமுடிந்தது. (தொ. தங்கச்சாமி தேவேந்திரர், சாமிபட்டி:27.05.98)

**நிலங்களில் உரமிடுவதைப் பற்றிய மரபுவழி அறிவு**

நல்ல விளைச்சலைப் பெறுவதற்கும், பயிர்களை நோய் மற்றும் பூச்சித் தாக்குதலிருந்து காப்பதற்கும் இயற்கை உரங்களை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். குறிப்பாக விவசாய நிலங்களில் நிலத்தை உழுவதற்கு முன்பு ஆட்டுக் கெடை அல்லது மாட்டுக் கெடை போடுதல் மூலமாகவும், ஆட்டெரு, மாட்டெரு போன்ற எருக்குப்பைகள் இடுவதின் மூலமாகவும் வேப்பம் புண்ணாக்கு, பசுந்தழை உரங்கள், மக்கிய எரு உரங்கள் இடுவதின் மூலமாகவும் மண்ணின் தன்மை தட்ப வெப்ப நிலைகளால் பாதிக்கப்படாமல் காக்கபடுவதாகக் கூறுகின்றனர். விவசாய

நிலங்களில் இத்தகைய உரங்களை இடுவதால் நிலம் இறுக்கத் தன்மையிலிருந்து மாறி பயிர்கள் செழிப்பாக வளர்வதற்குரியதாகவும், நோய் தாக்காததாகவும் விளங்குகிறது.

பேரையூர் ஊராட்சிக்கு உட்பட்ட கிராமங்களில் வாழ்கின்ற தேவேந்திர குல வேளார்கள் தங்களுடைய ஊரைச் சுற்றியுள்ள நிலங்களை மரபு வழியாக அறிவியல் சிந்தனைகளைக் கொண்டு சுற்றுப்புறச் சூழல் நிலங்களை எவ்வாறு பாதிக்கிறது என்பது பற்றியும், அவற்றை இயற்கை முறையில் மரபு வழியாகச் சீர்திருத்துவது பற்றியும், நிலங்களை இயற்கை முறையில் பாதுகாப்பது பற்றியும், மரபு வழி அறிவியல் சிந்தனைகளிலும் அறிந்து வைத்திருக்கின்றனர். மேலும் அந்நிலங்களை மண்ணின் தன்மைக்கேற்றவாரும் நீரின் தன்மைக்கேற்றவாரும் நிலங்களைப் பிரிக்கின்றனர். இயற்கை உரங்கள் மூலமாக நிலங்களை எவ்வாறு பாதுகாப்பது என்பது பற்றியும் அவற்றின் பயன்களைப் பற்றியும் குறிப்பிடப்படுகிறது. அந்நிலங்களில் பயிர் செய்யும் பயிர்கள் பற்றியும் அவை பயிர் செய்யும் காலங்கள் பற்றியும் இக்கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது.



பாதுகாப்பதில் முக்கியக்கவனம் செலுத்துகின்றனர். குறிப்பாக நிலங்களில் வேளாண்மை செய்யாமல் தரிசாகப் போட்டு வைப்பதால் நிலங்களில் விரிசல் ஏற்பட்டு மண்ணின் தன்மை பாதிக்கின்றது என்று நம்புகின்றனர். எனவே நிலத்தில் தொடர்ந்து ஏதாவது பயிர் செய்ய வேண்டும் என்றும், அவ்வாறு செய்வதால் நிலத்தின் மேல் மண், அடிமண் போன்றவை மாறுபட்டு பயிர்களுக்கு இடப்படும் இயற்கை உரம் பயன்தந்து கொண்டேயிருக்கும் என்றும் கூறுகின்றனர். (அ. குமரையா தேவேந்திரர், சேர்ந்தைக்கோட்டை:13.05.98)

### பயிர் செய்யும் காலம் பற்றிய மரபு வழி அறிவு

பொதுவாக வேளாண்மைத் தொழிலையே நம்பி வாழ்கின்ற தேவேந்திர குல வேளாளர்கள் பயிர் செய்யும் காலம் பற்றியும் மிக நுட்பமாக அறிந்து வைத்துள்ளனர். செம்மண் நிலம், கரிசல் நிலம், வண்டல் நிலம், பொட்டல் நிலம் ஆகிய நிலங்கள் மழையை நம்பியிருப்பதால் புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில் அவற்றில் வேளாண்மை செய்கின்றனர். கோடைக் காலங்களில் நிலத்தை உழுது காயவிட்டு விடுகின்றனர். மேலும் தட்ப வெப்ப நிலைகளுக்குத் தகுந்தாற்போல் நிலங்களைப் பக்குவப்படுத்தி வளமையான பயிர்களான வாழை, தென்னை, சர்க்கரை வள்ளிக்கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு, நெல் போன்ற பயிர்களைப் பயிர் செய்வதால் நிலத்தின் தன்மை கெடாமல் பாதுகாக்கப்படுவதாகக் கூறுகின்றனர். குறிப்பாகக் கோடைக்காலத்தில் விளையக்கூடிய பயிர்களைக் காலத்தில் பயிர் செய்யவேண்டும் என்றும் அதற்கு மாறுபட்டால் பயிர் விளைச்சலில்லாமல் போவதுடன் நிலமும் பாதிக்கப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். மேலும் இத்தகைய வளமையான பயிர்கள் பயிர்செய்யப்படுவதால் நிலத்தின் இறுக்கத்தன்மை மாற்றப்பட்டு, விரிசல் இல்லாமல் பாதுகாக்கப்படுவதாகக் கூறுகின்றனர். தேவேந்திர குல வேளாளர்கள் உரிய காலத்தில் உரிய நிலத்தில் பயிரைப் பயிர் செய்வதை முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளதைக் கள ஆய்வில் காணமுடிந்தது. (தொ. தங்கச்சாமி தேவேந்திரர், சாமிபட்டி:27.05.98)

### நிலங்களில் உரமிடுவதைப் பற்றிய மரபுவழி அறிவு

நல்ல விளைச்சலைப் பெறுவதற்கும், பயிர்களை நோய் மற்றும் பூச்சித் தாக்குதலிருந்து காப்பதற்கும் இயற்கை உரங்களை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். குறிப்பாக விவசாய நிலங்களில் நிலத்தை உழுவதற்கு முன்பு ஆட்டுக் கெடை அல்லது மாட்டுக் கெடை போடுதல் மூலமாகவும், ஆட்டெரு, மாட்டெரு போன்ற எருக்குப்பைகள் இடுவதின் மூலமாகவும் வேப்பம் புண்ணாக்கு, பசுந்தழை உரங்கள், மக்கிய எரு உரங்கள் இடுவதின் மூலமாகவும் மண்ணின் தன்மை தட்ப வெப்ப நிலைகளால் பாதிக்கப்படாமல் காக்கபடுவதாகக் கூறுகின்றனர். விவசாய

நிலங்களில் இத்தகைய உரங்களை இடுவதால் நிலம் இறுக்கத் தன்மையிலிருந்து மாறி பயிர்கள் செழிப்பாக வளர்வதற்குரியதாகவும், நோய் தாக்காததாகவும் விளங்குகிறது.

பேரையூர் ஊராட்சிக்கு உட்பட்ட கிராமங்களில் வாழ்கின்ற தேவேந்திர குல வேளார்கள் தங்களுடைய ஊரைச் சுற்றியுள்ள நிலங்களை மரபு வழியாக அறிவியல் சிந்தனைகளைக் கொண்டு சுற்றுப்புறச் சூழல் நிலங்களை எவ்வாறு பாதிக்கிறது என்பது பற்றியும், அவற்றை இயற்கை முறையில் மரபு வழியாகச் சீர்திருத்துவது பற்றியும், நிலங்களை இயற்கை முறையில் பாதுகாப்பது பற்றியும், மரபு வழி அறிவியல் சிந்தனைகளிலும் அறிந்து வைத்திருக்கின்றனர். மேலும் அந்நிலங்களை மண்ணின் தன்மைக்கேற்றவாரும் நீரின் தன்மைக்கேற்றவாரும் நிலங்களைப் பிரிக்கின்றனர். இயற்கை உரங்கள் மூலமாக நிலங்களை எவ்வாறு பாதுகாப்பது என்பது பற்றியும் அவற்றின் பயன்களைப் பற்றியும் குறிப்பிடப்படுகிறது. அந்நிலங்களில் பயிர் செய்யும் பயிர்கள் பற்றியும் அவை பயிர் செய்யும் காலங்கள் பற்றியும் இக்கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது.



# தேவேந்திர குல வேளாளர்களின் - பஞ்சாயத்து நிர்வாக முறை

## (கோவை வட்டம்)

**ஜோ. சரவணன்,** பிஎச்.டி. ஆய்வாளர்
தமிழ்த்துறை, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை 46

தமிழக வரலாற்றை அறிய உதவும் சான்றுகளைக் கால வாரியாகவும் சான்றுகள் வாரியாகவும் என இரு வகையாகப் பகுக்கலாம். கால வாரியாகப் பகுப்போர் வரலாற்றுக்கு முற்பட்ட காலம், சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், நாயக்கர் காலம், ஐரோப்பியர் காலம் எனக் காலங்களை முறைபடுத்துவர்.

வரலாற்று மூலங்களின் அடிப்படையில் சான்றுகளைப் பகுப்போர் புதைபொருள், இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், நாணயங்கள், பயணக் குறிப்புக்கள், நாட் குறிப்புக்கள், கடிதங்கள், அரசுப் பதிவேடுகள், ஊர்ப் பெயர் வழக்கு, கலைப் பொருள் அமைப்பு என முறைப்படுத்துவர். இவ்வாறு காலவாரியாக, சான்று வாரியாக ஆசிரியர்கள் இருவகை அணுகுமுறைகளைக் கொண்டுள்ளனர்.

தேவேந்திர குல வேளாளர் பஞ்சாயத்து முறை பற்றி மேற்கொண்ட கள ஆய்வில் கிடைத்த தரவுகளின் அடிப்படையில் இக்கட்டுரை அமைகின்றது. தேவேந்திர குல வேளாளர் சமூக பஞ்சாயத்து முறை கட்டமைப்புடன் காணப்படுகிறது என்று தெளிவுறுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

கோவை நகரிலும் அதனைச் சுற்றிலுமுள்ள நாற்பது கிராமங்களிலும் நான்கு விதமான தேவேந்திர குல வேளாளர் வம்சா வழியினர் வாழ்ந்து வருகின்றனர்.

அவர்கள்

1. கொங்கு தேவேந்திர குல வேளாளர்
2. சோழியத் தேவேந்திர குல வேளாளர்
3. பாண்டியத் தேவேந்திர குல வேளாளர்
4. கடையத் தேவேந்திர குல வேளாளர் ஆகியோர் ஆவர்.

இந்நான்கு பிரிவினரும் தனித்தனியாக நான்கு பட்டக்காரரர் தலைமையில் தமக்கென ஒரு தனியான சமூக ஆட்சி முறையை பல்லாண்டுகளாக நடத்தி வருகின்றனர். இவ்வாட்சிமுறை பட்டக்காரர் சமூக ஆட்சி என்று இச்சமூக மக்களால் அழைக்கப்படுகிறது.

### பட்டக்காரர்

பட்டக்காரர் என்றால் ஆட்சி செய்யும் உரிமையுடையவர், பட்டத்திற்குரியவர் என்ற பொருளாகும். பட்டக்காரர் இச்சமூகத்தின் அனைத்து மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட தலைவராக விளங்குகிறார். இவரை பண்ணாடி என்று அழைக்கிறார்கள். இச்சொல்லே தேவேந்திர குல வேளாளர்க்குரிய சாதி பெயர்களுள் ஒன்றாகவும் அமைந்துள்ளது[1].

பட்டக்காரர் என்றச் சொல் மூவேந்திரர்கள் ஆட்சி செய்த போது வழக்கிலிருந்த ஊராட்சி மன்றம் என்ற அமைப்பினின்று உருவாயிற்று. அந்த வகையில் தமிழ் நாடு முழுவதும் சாதி, இனம், குலம் வாரியாக பட்டக்காரர் முறை ஏற்பட்டது. மள்ளர் எனப்படுகின்ற தேவேந்திர குல வேளாளர்களின் பஞ்சாயத்து முறையும் இவ்வாறே பழங்காலத்திலிருந்தே பரம்பரை பம்பரையாக தொடர்ந்து வந்திருக்க வேண்டும்.

### குடும்பு என்ற அமைப்பு

தேவேந்திர குல வேளாளர்கள் குடும்பு முறையிலிருந்து தங்களது பட்டக்காரர்களை தேர்வு செய்கிறார்கள். இது வாரிசு அடிப்படையில் அமைகிறது. பட்டக்காரர் ஆவதற்கு ஒருவர் அக்குடும்பத்தின் மூத்த வாரிசாக இருக்க வேண்டும். மூத்தவருக்கே பட்டம் கட்டப்படுகிறது. இளையவர்களுக்குப் பட்டம் கட்டுவதில்லை.

பட்டக்காரர்கள் அவர்களின் சான்றாண்மை தகுதியின் அடிப்படையில் தேர்வு செய்யப்படுகிறார்கள். கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம் ஆகியவற்றுடனும், பொய், கோள் சொல்லாதிருத்தலும், பிறர் மனைவியுடன் தொடர்பு கொள்ளாமல் இருத்தலும், உடல் ஊனமுற்றவராக இல்லாமல் இருத்தலும் பட்டக்காரர்களுக்கு உரிய தகுதிகளாகும். பட்டக்காரர் குடும்பில் மூத்தவர். சமூக ஒழுக்கங்கள் மீறியவராகவும், இரண்டு மூன்று தண்டனை பெற்றவராகவும் கல்வி, கேள்வி, ஒழுக்கம் அற்றவராகவும், உடல் ஊனமுற்றவராகவும் இருந்தால் அவர் பட்டத்திற்கு வரமுடியாது. இவ்வாறான சூழ்நிலைகளில் அவரது அனுமதியுடன் ஊர்ச்சபை கூடி அவரது குடும்பிலிருந்து அடுத்தவரை பட்டக்காரர் ஆக நியமிப்பார்கள்[2].

### பண்ணாடி

ஊர்ப் பண்ணாடிகள் தொடக்கக் காலத்திலிருந்தே மரபு வழியாக வந்தவர்கள் ஆவார்கள். இவர்களும் கல்வி, அறிவு, ஒழுக்கம் மேலான மக்கள் தொண்டு இவற்றின் அடிப்படையிலேயே தேர்வு செய்யப்படுகின்றனர். இவர்களில் வாக்குரிமை உள்ளவர்கள் தமது நேரத்தைப் பொதுப் பணிக்கு ஒதுக்கி அதிகமாக இணைந்து

செயல்படுகிறவர்கள் நாடுகளுக்கு பிரதிநிதியாக அனுப்பபடுகிறார்கள். அவர் நாட்டுப் பண்ணாடி என அழைக்கப்படுகிறார்.

**அதிகாரம்**

ஒவ்வொரு ஊரிலும் உள்ள பிரச்சனைகள், நடவடிக்கைகள், கோயில் காரியம், திருமணம், ஊர் வழக்கம், அரசாங்க கூட்டங்களில் கலந்து கொள்ளுதல், நன்மை தீமைகளில் பங்கு எடுத்தல் என்பன பண்ணாடிகளின் பொறுப்பாகும். ஊரில் நடக்கும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் பொறுப்பு ஏற்கிறார். ஊரிலுள்ள பண்ணாடிகள் பட்டக்காரரின் தலைமையில் செயல்படுகின்றனர். தேவேந்திர குலத்தில் பண்ணாடிகள் தவறாக நடந்தால் அல்லது கூட்டங்களுக்கு வராமல் இருந்தால், அவர்கள் செயல்களை செம்மையாகச் செய்யாவிட்டால் அந்த ஊர்ச் சபையில் இருப்பவர்கள் ஒன்றாகக் கூடி அவர்மீது விண்ணபப்பத்தைக் கொடுக்க வேண்டும்.

அந்த விண்ணபப்பத்தை ஊர்ச்சபையில் இருக்கிறவர்களும் பண்ணாடிமார்களும், உறுப்பினர்களும் கூடி கலந்து ஆலோசித்து அவர்களுக்கு இணையான அல்லது குடும்பத்தில் இருக்கும் ஒருவரைத் தேர்ந்தெடுப்பார்கள். பதினெட்டு கிராமங்களைக் கூட்டும் அதிகாரம் பட்டக்காரர்களுக்கு மட்டுமே உண்டு. பதினெட்டு கிராமப் பண்ணாடிகளும் வந்திருந்து ஆலோசித்து எடுக்கிற முடிவுகள் எழுதப்படாத சட்டமாகவும் அச்சமூத்தாயத்தின் சத்திய வாக்காகவும் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

ஊர்ச்சபை உறுப்பினர்களுள் ஒவ்வொரு பிரிவுக்கும் பண்ணாடிகள் இருப்பதைப் போலவே வடக்குவளவுப் பண்ணாடி, தெற்குவளவு பண்ணாடி, கிழக்குவளவு, பண்ணாடி, நடுவுவளவு பண்ணாடி என்ற பிரிவுகளிலும் பண்ணடிகள் உண்டு. இதைப்போல ஒவ்வொரு தெருவிற்கும் ஒவ்வொரு பண்ணாடிகள் இருப்பார்கள். ஒரு பண்ணாடி தனது செயல் நடவடிக்கையை நிறைவேற்ற உறுதுணையாக வேறு நபர் உதவி வேண்டுமானால் பண்ணாடிகள் தலைமையகத்தில் கூடி ஒருவர் அல்லது இருவரை சேர்த்துக் கொள்வார்கள். உறுப்பினர்களைத் தேர்வு செய்யும் பொழுது பண்ணாடிகளின் கருத்துக்களையும் குடும்ப சூழல், நன்னடத்தை, நல்லெண்ணம், ஒழுக்கம், பொதுச்சபை நாட்டம் ஆகியவற்றையும் கருத்தில் கொண்டு தேர்வு செய்கிறார்கள்[4].

**உறுப்பினர்களின் கடமை**

ஊரில் நடக்கும் பஞ்சாயத்து முடிவுகளை அறிவித்தல், ஒவ்வொரு தெருவில் பிரச்சனைகள் ஏற்பட்டால் அந்த வீட்டிற்கு சென்று வழக்குகளை விசாரித்து திர்மானித்தல், ஊர்மக்களிடம் ஒற்றுமையையும்,

நல்லெண்ணத்தையும் வளரவைப்பது, தவறான வழியில் செல்பவர்களை தடுத்து நிறுத்துவது, ஊரில் மாங்கல்ய வரி வசூலிப்பது, பொதுப்பணிக் காரியங்களை செய்வது என்பவை உறுப்பினர்களின் கடமையாகும்.

தேவேந்திர குல வேளாளர்களுக்கிடையே மேல்சபை என்ற அமைப்பும் உண்டு. அது கொங்கு நாட்டில் கோவை நகரில் பேரூரில் உள்ள பட்டீஸ்வரர் கோயிலில் உள்ளது. அவ்வுறுப்பினர்கள் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள மடங்களில் கூடி ஆலோசிக்கின்றனர். பட்டக்காரர்களின் கீழ் செயல்படும் பதினெட்டு கிராமங்களிலிருந்து கிராமம் ஒன்றிற்கு இரண்டு பேர் பிரதிநிதிகளாக மேல்சபையில் அங்கம் வகிக்கின்றனர். இவர்களும் ஆலயப்பணிப் புரிதல், கிராம நலனைப் பாதுகாத்தல் போன்ற பொதுப்பணிகளில் ஈடுபடுவர்.

மேல் சபையில் சடங்கு வழிமுறைகளைக் கவனிக்கின்றனர். இவர்கள் சமூக மடங்கள், கட்டடம் கட்டுதல், வாடகை வசூல் செய்தல், பழுது பார்த்தல் போன்ற காரியங்களில் ஈடுபடுவர். மேலும் நாற்று நடவு உற்சவம், திருமஞ்சன மரசெப்பு உற்சவம், இந்திரவிழா போன்ற விழாக்களை அதன் சடங்குகளின்படி இவர்களது ஆலோசனையின் பேரில் நடத்தப்படுகின்றன[5].

### சமூகப் பஞ்சாயத்துச் சபை

புலியகுளத்தில் தேவேந்திரர்களின் பஞ்சாயத்துச் சபை மாரியம்மன் கோயில் வளாகத்தில் உள்ளது. இக்கட்டிடம் சுமார் ஒரு லட்சம் ரூபாய் அளவில் கட்டப்பட்டுள்ளது. ஞாயிற்றுக் கிழமை தோறும், காலை, மாலையில் பஞ்சாயத்துக்கள் நடக்கும். மாதத்தின் இறுதி ஞாயிற்றுக் கிழமையில் இலக்கியக் கூட்டங்கள் நடைபெறுகின்றன. காலை, மாலையில் ஆசிரியர்களைக் கொண்டு மாணவர் கல்வி மேம்பாட்டிற்கு குறைந்த கட்டணத்தில் கல்வி அளிக்கின்றனர். திருமணங்கள், காதுகுத்தல், போன்ற காரியங்களும் அங்கு நடைப்பெறுகின்றன. எந்தக் கட்டணமும் வசூல் செய்யாமலேயே இலக்கியக் கூட்டம், சமூகக் கூட்டம், தமிழாராய்ச்சிக் கூட்டம் ஆகியவற்றை நடத்துகின்றனர். ஊர்ப் பணத்தை வங்கிகளில் வைத்திருக்கின்றனர். வங்கிக் கணக்கை தலைவர், பண்ணாடி ஒருவர் பெயரில் இணைப்புக் கணக்கில் செலுத்தப் படுகிறது.

பஞ்சாயத்துப் பேசுவதற்காக பண்ணாடிமார்களும் இளந்தாரிப் பண்ணாடிகளும் பொதுமக்களும் கூடுகிறார்கள். வாதி பிரதிவாதிகளாக வருகிறவர்களுக்கு தேநீர் வழங்க வேண்டும். அவர்கள் விதிமுறைகளுக்கெல்லாம் கட்டுப்படுகிறோம் என்று முச்சரிக்கை எழுதிக் கொடுத்து சபைக்கான நூறு ரூபாயைச் செலுத்திய பிறகு பஞ்சாயத்து

ஆரம்பிக்கிறது. பஞ்சாயத்துத் தலைவர் கூட்டத்தில் கலந்து கொள்ளாத சூழலில் அத்தெருவின் பண்ணாடி தலைமை தாங்குவார். பஞ்சாயத்துக்கு வரும் பிரச்சனைகள் முதலில் எழுத்து வடிவில் எழுதப்பட்டு தெருப் பண்ணாடியிடம் இருபத்தைந்து ரூபாயை செலுத்தி சமர்ப்பிக்க வேண்டும். ஊர்ப்பண்ணாடிக்கு அந்த புகார் சென்றடையும்போது அவர் ஒடும்பிள்ளையை அழைத்து ஊர்ப்பண்ணாடிமார்கள், குடும்பர்கள் மற்றும் மக்களுக்கும் அறிவிப்பார்கள். பஞ்சாயத்துக் கூடிய பிறகு வாதி பிரதிவாதிகளை விசாரித்து பிறகு அவர்களை வெளியே அனுப்பிவிட்டு பண்ணாடிகள் எல்லோருமாக சேர்ந்து நியாயமான முடிவுகள் எடுப்பார்கள். இந்த வாதி பிரதிவாதிகள் தீர்வுக்குக் கட்டுப்படும் போது அவர்களது பிரச்சனைகளுக்கு தீர்ப்பு வழங்கப்படுகிறது. நாட்டுச் சட்டத்திற்கு அடுத்த படியான அதிகப் பட்ச தண்டனைகள் வழங்கப்படுவது பஞ்சாயத்துச் 7லையில்தான். தண்டனை பெற்றவர் தண்டனையை குறைக்கும்படி வேண்டிக் கொள்ளலாம். இதை 'அட்டம் விழுதல்' என்று சொல்கிறார்கள். அட்டம் விழுதல் என்றால் பஞ்சாயத்தாரின் காலில் விழுந்து தவறை மன்னித்து தண்டனையை குறைக்க வேண்டுவது ஆகும். ஒவ்வொருமுறை காலில் விழும் பொழுதும் அவரின் தண்டத்தொகை குறைக்கப்பட்டு முடிவில் குறைந்தளவு தண்டம் கட்டினால் போதும் என்று பஞ்சாயத்து முடிவு செய்யும். அட்டம் விழுதலுக்கு விரும்பாதவர்கள் பஞ்சாயத்துக் குறிப்பிடும் தண்டத்தொகை முழுவதையும் கட்டவேண்டும்.

"அட்டம் விழுதல்" என்பது யுவான்சுவாங் என்ற வெளிநாட்டு பயணியின் பயணக்குறிப்பில் காணப்படுகிறது. பாண்டிய நாட்டில் ஒருமுறை ஒருவர் குதிரை வாங்கிய பணத்தை கொடுக்காமல் காலத்தை நீட்டினர். பணம் கிடைக்கப் பெறாததால் ஒரு சிறு கல்லோ ஓடோ எடுத்து வட்டம் போட்டார்கள். வட்டம் போட்ட காரணத்தால் இது பாண்டியனின் ஆணை என தெரிவிக்கப்பட்டது. வட்டம் என்பது ஒரு சட்டத்தை, ஒரு வரையறையை, ஆணையை உள்ளடக்கியதாகும். வட்டம் என்பது இந்தத் தத்துவத்தை உணர்த்துகிறது. சபையில் சபை கூடிய பிறகு வாதி பிரதிவாதிகள் "சத்தியமாகச் சொல்கிறேன், நான் சொல்வதெல்லாம் உண்மை, சத்தியம் தவிர ஒன்றுமில்லை" என்று ஒரு வட்டத்திற்குள் நின்று சொல்கிறார்கள். சொன்ன பிறகு சிறுகல்லை எடுத்து அவர்களின் தலையில் வைத்து விடுவார்கள். கல்லை வைத்துவிட்டால் பொய் சொல்லக் கூடாது என்பது குறிப்பிடத்தக்கதாகும். தீர்ப்புகளுக்குப் பிறகு வழங்கப்படும் தண்டனைகளும் மிக இளமையானவையே. கோயிலுக்கு நொந்தா விளக்கு வைத்தல், மரங்களுக்கு தண்ணீர் ஊற்றுதல் என்பன தண்டனையாக வழங்கப் படுகின்றன. பெரிய தண்டத் தொகைகளும்

செலுத்தப்படுவதும் உண்டு. செலுத்த இயலாது என்றால் "தாளாது, தாளாது" என்று சொல்லி பஞ்சாயத்தார் போதும் என்கிற வரையில் அவர்கள் காலில் விழுந்து எழுகின்ற நிலை முன்பு இருந்து வந்தது.[6]

**பட்டம் சூட்டும் விழா**

தேவேந்திரர்களின் பட்டக்காரர், பண்ணாடிகள் (பதவி ஏற்பு) அதிகாரம் வழங்கும் விழாவானது பட்டம் சூட்டும் விழா என்ற பெயரில் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறுகிறது. இவ்விழா நான்கு பிரிவினரிடமும் தனித்தனியாக நடைபெறுகிறது. பொதுவாக இவ்விழா பேரூர் பட்டீஸ்வரர் கோயிலில் உள்ள சமூக மடத்தில் நடை பெறுகிறது. பேரூரில் உள்ள தேவேந்திர குல சமூகமடம் இக்கோயில் கட்டப்பட்ட சோழர் ஆட்சி காலத்திலேயே கட்டப்பட்டதாகும். இம்மடம் நான்கு பிரிவினருக்கும் பொதுவானது. ஒவ்வொரு ஆண்டும் நான்குப் பிரிவினரும் பட்டம் கட்டிய பிறகுதான் பேரூர் விழாக்கள் தொடங்குகின்றன.

பட்டக்காரர்களுக்கு பட்டம் சூட்டும் விழா வயது முதிர்ந்து செயல்பட இயலாவிட்டாலோ அல்லது மரணம் அடைந்துவிட்டாலோ அவரது வாரிசுக்கு பட்டம் சூட்டுதல் நடைபெறும். ஆனால் பண்ணாடிகளுக்கான பட்டம் சூட்டும் விழா அடிக்கடி நடைபெறும். ஏனெனில் ஒவ்வொரு பட்டக்காரருக்கும் கீழ் பதினெட்டு கிராமங்கள் உள்ளன. பதினெட்டு கிராமங்களிலும் உள்ள ஊர்ப்பண்ணாடிகளில் ஏதேனும் காரணம் குறித்து மாற்றம் இருந்து கொண்டே இருப்பதால் பண்ணாடிகளுக்கான பட்டம் சூட்டு விழா அடிக்கடி நடைபெறுகிறது. பட்டம் சூட்டுதல் என்றால் மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கிரீடத்தை சூட்டி விடுதல் ஆகும். இதன் பின்னர் உறுதிமொழி எடுக்கப்படுகின்றது. முன்பு கூறப்பட்ட நான்கு வம்சா வழியினரில் கொங்கு தேவேந்திர பண்ணாடியாக பொறுப்பு ஏற்பவரின் பதவிப் பிரமாணம் பின்வருமாறு அமைகிறது.

1. கொங்கு தேவேந்திர மக்களின் முன்னேற்றம், கலாச்சாரம், கல்வி, நிர்வாகம், சட்டம், சம்பிரதாயம், நீதி அனைத்துக்கும் மத்திய ஆட்சியின் அதிகாரத்திற்கும் நான் கட்டுப்பட்டு கிராம தனியாட்சி நிர்வாகங்களில் ஒருவராக நிர்வாகம் செய்வேன்.

2. நான் மிராஸ் பொறுப்பேற்று சத்திய தர்மத்தோடு தன்னலமற்ற அற வழியில் நீதி செலுத்துவேன்.

3. நான் உயிர் உள்ளவரை நிபந்தனைகளை மீறி என் பண்ணாடி நிர்வாகத்தை தவறான முறையில் பயன்படுத்தினால் எனது பதவியை மத்திய ஆட்சி ரத்து செய்ய ஒப்புக்கொள்கிறேன்.

**வரைபடம்**




**சோழியத் தேவேந்திர குல வேளாளர்**

சோழ நாட்டிலிருந்து கொங்கு நாட்டிற்குக் குடியேறிய தேவேந்திரர்களை சோழியத் தேவேந்திர குல வேளாளர் என்று கூறுகிறோம். சோழியத் தேவேந்திர குல வேளாளர் குடும்பு முறையில் முதலில் தாய்க் கிராமமாகிய பள்ளபாளையத்தில் உள்ள கருப்புசாமிப் பண்ணாடி என்பவரும் பிறகு அவரது மகன் குப்புசாமிப் பண்ணாடி என்பவரும் பதவி வகித்தனர். தற்போது நடராசப் பண்ணாடி என்பவர் பட்டக்காரராக இருந்து சமீபத்தில் இயற்கை எய்தினார். சோழியத் தேவேந்திர குல வேளாளர் பட்டக்காரர் தலைமையில் பதினெட்டு ஊர்கள் உள்ளன. அவை,

1. பள்ளபாளையம் (செல்வபுரம்), 2. வன்னியம்பாளையம், 3. பூசாரிபாளையம், 4. சொக்கம்புதூர், 5. பனைமரத்தூர், 6. புலியகுளம், 7. இராமநாதபுரம், 8. நஞ்சுண்டாபுரம், 9. கள்ளிமடை, 10. பட்டணம், 11. புதூர் (புதுப்பாளையம்), 12. சூலூர், 13. கணபதி, 14. உப்பிலி பாளையம், 15. மடத்துக்குளம், 16. பீடம்பள்ளி, 17. தெலுங்கு பாளையம், 18. பேரூர் -என்பன.

புலியகுளத்தில் செயல்படும் தேவேந்திரர்களின் பஞ்சாயத்து நிர்வாகத்தில் தாசர் குடும்பத்தைச் சார்ந்த சின்ன மருதாசலச் பண்ணாடியும் அவருக்குப் பிறகு அவரது மகன் சமயதாரர் இராசாமிப் பண்ணாடி தன் பதவியிலிருந்து விலகி அவர் தம்பி முத்துசாமி தேவேந்திரர் என்பவருக்கு பதவி அளித்தார். அவருக்குப் பிறகு இப்பொழுது தமிழண்ணல் புலவர் கி.ஆ. குப்புராசு ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவராக இருந்து வருகிறார்.

பண்ணாடி என்ற வரிசையில்,

1. செட்டி அ. வெங்கட்ராமப் பண்ணாடி
2. இருகுடியான் கூட்டம் ரயிட்டர் ப. தங்கவேல் பண்ணாடி B.A.
3. வடக்கு வளவார் ஆ. பாலகிருஷ்ணப் பண்ணாடி
4. பெத்தான் மு. பொன்னுச்சாமிப் பண்ணாடி
5. பலாடியார் மா. செல்வகுமார்ப் பண்ணாடி
6. துள்ளா து. வேணுகோபால் பண்ணாடி
7. சங்கர இரா. வெள்ளியகிரிப் பண்ணாடி

ஆகிய ஏழுபேர் வளவுப் பண்ணாடிகளாக உள்ளார்கள்.

இராசு தேவேந்திரர், முருகராசு தேவேந்திரர், இளங்கோ தேவேந்திரர், கிருஷ்ணன் தேவேந்திரர், பொன்னுசாமி தேவேந்திரர், ரங்கசாமி தேவேந்திரர், ஆறுமுகம் தேவேந்திரர், சதாசிவம் தேவேந்திரர், விஸ்வநாதம் தேவேந்திரர், சின்னசாமி தேவேந்திரர், ஆகியப் பத்து பேர்கள் ஊர்சபை உறுப்பினர்களாக இருக்கிறார்கள். வேணுகோபால் பண்ணாடியின் கிழ் நாராயணசாமி தேவேந்திரர், தேவராசு தேவேந்திரர், பாண்டியன் தேவேந்திரர், நாகப்பன் தேவேந்திரர் ஆகிய நான்கு பேர்கள் உறுப்பினர் ஆவார்.

செட்டி வெங்கட்ராமப் பண்ணாடியின் கிழ் வீ. மணிவாசகன் தேவேந்திரர், இராமசந்திரன் தேவேந்திரர், சிவகன் தேவேந்திரர், சண்முகம் தேவேந்திரர் ஆகிய ஊர்சபை உறுப்பினர்கள் உள்ளனர்.

வெள்ளிங்கிரிப் பண்ணாடியின் கிழ் -சு. மணி தேவேந்திரர், தேவராசு தேவேந்திரர், முருகராசு தேவேந்திரர், ம. பாலன் தேவேந்திரர் ஆகிய ஊர்ச்சபை உறுப்பினர்கள் உள்ளனர்.

கருப்பசாமிக்கு பின் அவரது மகன் வீ ரபாண்டி பண்ணாடியும் மேல்சபை உறுப்பினராக தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

ஊர்சபை உறுப்பினர்களில் இரண்டு தாசர்கள் உண்டு. அரங்கசாமி பண்ணாடி, லிங்கப்ப தாசரின் மகன் ஆறுமுகம் தேவேந்திரர் ஆகியோர் இப்பொழுது தாசர்களாக இருக்கிறார்கள். தாசர்களின் தலைவராக தர்மலிங்க தேவேந்திரர் என்பவர் நியமிக்கப் பட்டுள்ளார்.

### கடையத் தேவேந்திர குல வேளாளர்

கடையத் தேதேந்திர குல வேளாளர்களின் பட்டக்காரராக இன்று

இருகூர் இராதாகிருஷ்ணன் செயல்பட்டு வருகிறார். அவருக்கு முன்பு அவரது குடும்பத்தைச் சார்ந்த பேச்சிமுத்து பண்ணாடி, பச்சியப்பன் பண்ணாடி, மாரியப்பன் பண்ணாடி, நடராச பண்ணாடி ஆகியோர் தலைவர்களாக இருந்து உள்ளனர். இவர்களின் பஞ்சாயத்து பிள்ளையார் கோவிலில் கூடுகிறது.

குனியமுத்தூர் கடையத் தேவேந்திர குல வேளாளருக்கு ஆறுமுகம் தேவேந்திரர் ஊர்ப் பண்ணாடியாகவும், சீனிவாசன் தேவேந்திரர் ஓடும்பிள்ளையாகவும் இருந்து வருகிறார்கள்.

சொக்கம்புதூரின் ஏ. குமாரவேல் பண்ணாடி தலைவராகவும் இராசமாணிக்கம் தேவேந்திரர், வேணுகோபால் தேவேந்திரர் ஆகியோர் உறுப்பினராக இருந்து வருகின்றனர்[7].

## கொங்கு தேவேந்திர குல வேளாளர்

கொங்கு தேவேந்திர குல வேளாளர்களில் தலைவர் கிருஷ்ண பட்டக்காரர் ஆவார். இவரது தலைமையில் வெள்ளலூர் மற்றும் பதினெட்டு ஊர்கள் செயல்படுகிறது[8].

## தொகுப்புரை

கொங்கு நாட்டில் கோவை வட்டத்தில் வாழ்ந்துவரும் நான்கு வம்சா வழியினர்களான தேவேந்திர குல வேளாளர்களின் பஞ்சாயத்து நிர்வாகம் பற்றி இக்கட்டுரை ஆராய்ந்தது. தேவேந்திர குல வேளாளர்கள் மூவேந்திரர் ஆட்சி காலத்திலிருந்தே தங்களுக்கென்று ஒரு சமூகப் பண்பாட்டையும், அமைப்பையும், நிர்வாகத்தையும் தொடர்ந்து கை கொண்டு வந்திருப்பதை இக்கட்டுரை உறுதிசெய்கிறது.

## குறிப்புகள்

1. தே. ஞானசேகரன, மள்ளர் மலர், பிப்ரவரி- 1998.
2. பேட்டி, நேர்காணல், புலவர் கி.ஆ. குப்புராசு, புலியகுளம்
3. மேலது
4. மேலது
5. மேலது
6. மேலது
7. பேட்டி, நேர்காணல் இராதாகிருஷ்ணன் பட்டக்காரர், இருகூர்
8. பேட்டி, நேர்காணல், கிருஷ்ண பட்டக்காரர், வெள்ளலூர்

## தகவலாளர் அட்டவணை

| எண் | பெயர் | வயது | இடம் | நாள் |
|---|---|---|---|---|
| 1. | V. U. கிருஷ்ணபட்டக்காரர் | 50 | வெள்ளலூர் | 8.6.98 |
| 2. | இராதாகிருஷ்ண பட்டக்காரர் (கடைய மன்னர்) | 45 | இருகூர் | 14.6.98 |
| 3. | புலவர் இ. ஆ. குப்புராசு | 63 | புலியகுளம் | 29.6.98 |
| 4. | பே. நடராஜப் பண்ணாடி | 60 | குனியமுத்தூர் | 23.8.98 |





# பள்ளு நூற்களும் மள்ளர்களின் வீழ்ச்சியும்

செ. சௌந்தரராசப் பெருமாள்
எம்.ஏ., பி.எல்., எம்.ஏ., எம்.பில்., பி.எச்.டி.,
பாரதியார் பல்கலைக் கழகம், கோயமுத்தூர் 641 046.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு தோன்றிய மூத்தகுடி தமிழ்க் குடி. அம்மூத்த குடியினரே மள்ளர்கள். மண்ணின் மைந்தர்கள் மள்ளர்கள். மன்னர்களாகவும், வீரர்களாகவும், உழவர்களாகவும் உயர் நிலையில் இருந்தவர்கள் மள்ளர்கள். இவ்வுண்மைகளைப் பறைசாற்றுவன, தமிழர்களின் சமூக பண்பாட்டு வரலாற்றுச் சான்றாக விளங்கும் இலக்கியங்கள் ஆகும். சங்ககால இலக்கியங்களும் இடைக்கால இலக்கியங்களும் இதில் ஒரு சிறிதும் மாறவில்லை. ஆனால் 18ஆம் நூற்றாண்டில் தோன்றிய "பள்ளு" என்ற இலக்கியங்கள் மள்ளர்களைப் "பள்ளர்கள்" என விளிப்பதோடல்லாமல் இழிக்கவும் செய்கின்றன. பள்ளு நூற்கள் எந்த அளவிற்கு மள்ளர்களின் வீழ்ச்சியைப் படம் பிடித்து உள்ளன என்பதனை ஆராய முயல்கிறது இக்கட்டுரை.

## சங்க இலக்கியங்களில் மள்ளர்கள்

கி.பி. 250க்கு முந்திய கால நூல்களைச் சங்க கால நூல்கள் என வகைப்படுத்தி உள்ளனர். சங்க இலக்கியங்களில் மள்ளர்கள் - மல்லர்கள் பற்றிக் குறிப்பிடும் பாடல்கள் புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து, பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணை, பரிபாடல், தகடூர் யாத்திரை, பெரும் பொருள் விளக்கம், புறத்திரட்டு, புறப் பொருள் வெண்பாமாலை ஆகிய நூட்களில் காணப் பெறுகின்றன.

குருசாமி சித்தன், தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) அதிகாரம் 7-இல் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும், குறுநில மன்னர்களும், வேளிர்களும் மள்ளர் - மல்லர் மரபினர் என்றும், திருமால், முருகன் மற்றும் பல்லவ முதல்வன் இளந்திரையன் ஆகியோர் மள்ளர் - மல்லர் மரபினர் என்றும் இந்நூல்கள் (சங்ககாலம்) தெளிவாகக் கூறுகின்றன எனப் பகர்கின்றார். இவற்றிற்கு ஆதாரமாகப் புறநானூற்றின் பாடல்கள் 10, 77, 78, 79, 80, 81, 82, 219, 388, 399 ஐயும் அகநானூற்றின் பாடல்கள் 36, 47, 57, 106, 116, 137, 149, 162, 175, 209, 296, 335, ஆகியவற்றையும் குறுந்தொகை 393-உம் நற்றிணை 39, 298, 340, 387 மேலும் சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய நூல்களிலிருந்தும் மேற்கோள்களை எடுத்துக் காட்டுகின்றார்.

சங்க காலத்தில் மழவர், மல்லர், மள்ளர், மறவர் என்று அழைக்கப்படும் மக்கள் போர் வீரர்களாக இருந்து மன்னர்களுக்கு உதவி புரிந்துள்ளனர். இவர்கள் தொன்மையான மறக்குடியினர் ஆவர். (அ.தட்சிணாமூர்த்தி). மல்லர் என்பது மன்னரைச் சுட்டும் பெயராகவும் உள்ளது. மல்லர் பேரூர்ப் பெருமான் என்பது மன்னன் இளந்திரையனைக் குறிக்கும் அல்லது போர் வீரர்கள் நிறைந்த ஊர் என்பதைச் சுட்டும் என்பார் இரா. தேவ ஆசிர்வாதம் (மூவேந்தர் யார்? ப.90). சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்குப் பெருமாள், மல்லன் என்ற பெயர்கள் வழங்கியதாகக் கூறுகிறார் ஜி.ஒப்பர்ட். மேலும் அவர் மல்லன் என்பது வயல்வெளிகளில் அல்லது குளக்கரையில் வைத்து வணங்கப்படும் நாட்டுப்புறத் தெய்வத்தின் பெயரும் ஆகுமென்பார். (மேலது, ப.94). மேற்கண்ட கருத்துக்களிலிருந்து மல்லர்-மள்ளர் என்ற இனம் போர் வீரராகவும் மன்னராகவும் விளங்கியிருப்பது பெறப்படும் (அ. அறிவுநம்பி, கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு, ப.30).

சங்க இலக்கியங்கள் எதிலும் 'பள்ளர்' என்ற சொல் காணப்பெறவில்லை என்பது தெளிவு.

## இடைக்கால இலக்கியங்களில் மள்ளர்கள்

சங்க காலத்திற்குப் பின்பும் பதிமூன்றாம் நூற்றாண்டிற்கு முன்பும் இயற்றப்பெற்ற இலக்கியங்கள் இடைக்கால இலக்கியங்கள் எனப்பெறும்.

டாக்டர் குருசாமி சித்தன், மேற்குறிப்பிட்ட நூலில் அதிகாரம் 6-இல் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும், குறுநில மன்னர்களும், உழவர்களும், வீரர்களும், மள்ளர் - மல்லர் மரபினர் என்று இடைக்கால இலக்கியங்கள் தெளிவாகக் கூறுகின்றன என உரைக்கின்றார்.

இவரே, கம்பர் கம்பராமாணத்தில் கோசல நாட்டின் வளம் கூறும்போது உழவர்; வேளாண்மையில் ஈடுபட்டுள்ளோர் பற்றிக் குறிப்பிடுகின்றார். அத்தொழிலில் அக்காலத்தில் ஈடுபட்டோர் மள்ளர் குலத்தவர் என்கிறார். நாட்டுப்படலம் 32-இல் மள்ளர் குலம் என்றும் வானரர் களம் காண் படலம் 25-இல் மள்ளர் இனம் என்றும் கூறுவதன் மூலம் மள்ளர்கள் ஒரு குலத்தினர், இனத்தினர் என்பதை வெளிப்படையாக உறுதி செய்கிறார்.

பெரியபுராணம் திருமலைச் சருக்கம் நாட்டுச் சிறப்பு கூறும் படலத்தில் இரு செய்யுட்களில் மள்ளர் பற்றிய குறிப்பு வருகிறது. மற்ற செய்யுட்களில் இவரை உழவர் என்று கூறுகின்றார். மருதவளம் கூறும் எல்லா நாட்டுச் சிறப்புப் படலங்களில் எல்லா புராண மற்றும் இலக்கிய நூல்களில் மள்ளர் இனத்தார் பற்றிய செய்திகளே உள்ளன. மள்ளர் இனத்தார் தவிர்த்து வேறு குலத்தினர் எவரும் உழவுத்தொழில் செய்ததாகச் சங்க நூற்களும் இடைக்கால நூற்களும் கூறவில்லை.

# பள்ளு நூற்களும் மள்ளர்களின் வீழ்ச்சியும்

செ. சௌந்தரராசப் பெருமாள்
எம்.ஏ., பி.எல்., எம்.ஏ., எம்.பில்., பி.எச்.டி.,
பாரதியார் பல்கலைக் கழகம், கோயமுத்தூர் 641 046.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு தோன்றிய மூத்தகுடி தமிழ்க் குடி. அம்மூத்த குடியினரே மள்ளர்கள். மண்ணின் மைந்தர்கள் மள்ளர்கள். மன்னர்களாகவும், வீரர்களாகவும், உழவர்களாகவும் உயர் நிலையில் இருந்தவர்கள் மள்ளர்கள். இவ்வுண்மைகளைப் பறைசாற்றுவன, தமிழர்களின் சமூக பண்பாட்டு வரலாற்றுச் சான்றாக விளங்கும் இலக்கியங்கள் ஆகும். சங்ககால இலக்கியங்களும் இடைக்கால இலக்கியங்களும் இதில் ஒரு சிறிதும் மாறவில்லை. ஆனால் 18ஆம் நூற்றாண்டில் தோன்றிய "பள்ளு" என்ற இலக்கியங்கள் மள்ளர்களைப் "பள்ளர்கள்" என விளிப்பதோடல்லாமல் இழிக்கவும் செய்கின்றன. பள்ளு நூற்கள் எந்த அளவிற்கு மள்ளர்களின் வீழ்ச்சியைப் படம் பிடித்து உள்ளன என்பதனை ஆராய முயல்கிறது இக்கட்டுரை.

## சங்க இலக்கியங்களில் மள்ளர்கள்

கி.பி. 250க்கு முந்திய கால நூல்களைச் சங்க கால நூல்கள் என வகைப்படுத்தி உள்ளனர். சங்க இலக்கியங்களில் மள்ளர்கள் - மல்லர்கள் பற்றிக் குறிப்பிடும் பாடல்கள் புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து, பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணை, பரிபாடல், தகடூர் யாத்திரை, பெரும் பொருள் விளக்கம், புறத்திரட்டு, புறப் பொருள் வெண்பாமாலை ஆகிய நூட்களில் காணப் பெறுகின்றன.

குருசாமி சித்தன், தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) அதிகாரம் 7-இல் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும், குறுநில மன்னர்களும், வேளிர்களும் மள்ளர் - மல்லர் மரபினர் என்றும், திருமால், முருகன் மற்றும் பல்லவ முதல்வன் இளந்திரையன் ஆகியோர் மள்ளர் - மல்லர் மரபினர் என்றும் இந்நூல்கள் (சங்ககாலம்) தெளிவாகக் கூறுகின்றன எனப் பகர்கின்றார். இவற்றிற்கு ஆதாரமாகப் புறநானூற்றின் பாடல்கள் 10, 77, 78, 79, 80, 81, 82, 219, 388, 399 ஐயும் அகநானூற்றின் பாடல்கள் 36, 47, 57, 106, 116, 137, 149, 162, 175, 209, 296, 335, ஆகியவற்றையும் குறுந்தொகை 393-உம் நற்றிணை 39, 298, 340, 387 மேலும் சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய நூல்களிலிருந்தும் மேற்கோள்களை எடுத்துக் காட்டுகின்றார்.

சங்க காலத்தில் மழவர், மல்லர், மள்ளர், மறவர் என்று அழைக்கப்படும் மக்கள் போர் வீரர்களாக இருந்து மன்னர்களுக்கு உதவி புரிந்துள்ளனர். இவர்கள் தொன்மையான மறக்குடியினர் ஆவர். (அ.தட்சிணாமூர்த்தி). மல்லர் என்பது மன்னரைச் சுட்டும் பெயராகவும் உள்ளது. மல்லர் பேரூர்ப் பெருமான் என்பது மன்னன் இளந்திரையனைக் குறிக்கும் அல்லது போர் வீரர்கள் நிறைந்த ஊர் என்பதைச் சுட்டும் என்பார் இரா. தேவ ஆசிர்வாதம் (மூவேந்தர் யார்? ப.90). சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்குப் பெருமாள், மல்லன் என்ற பெயர்கள் வழங்கியதாகக் கூறுகிறார் ஜி.ஒப்பர்ட். மேலும் அவர் மல்லன் என்பது வயல்வெளிகளில் அல்லது குளக்கரையில் வைத்து வணங்கப்படும் நாட்டுப்புறத் தெய்வத்தின் பெயரும் ஆகுமென்பார். (மேலது, ப.94). மேற்கண்ட கருத்துக்களிலிருந்து மல்லர்-மள்ளர் என்ற இனம் போர் வீரராகவும் மன்னராகவும் விளங்கியிருப்பது பெறப்படும் (அ. அறிவுநம்பி, கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு, ப.30).

சங்க இலக்கியங்கள் எதிலும் 'பள்ளர்' என்ற சொல் காணப்பெறவில்லை என்பது தெளிவு.

## இடைக்கால இலக்கியங்களில் மள்ளர்கள்

சங்க காலத்திற்குப் பின்பும் பதிமூன்றாம் நூற்றாண்டிற்கு முன்பும் இயற்றப்பெற்ற இலக்கியங்கள் இடைக்கால இலக்கியங்கள் எனப்பெறும்.

டாக்டர் குருசாமி சித்தன், மேற்குறிப்பிட்ட நூலில் அதிகாரம் 6-இல் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும், குறுநில மன்னர்களும், உழவர்களும், வீரர்களும், மள்ளர் - மல்லர் மரபினர் என்று இடைக்கால இலக்கியங்கள் தெளிவாகக் கூறுகின்றன என உரைக்கின்றார்.

இவரே, கம்பர் கம்பராமாணத்தில் கோசல நாட்டின் வளம் கூறும்போது உழவர்; வேளாண்மையில் ஈடுபட்டுள்ளோர் பற்றிக் குறிப்பிடுகின்றார். அத்தொழிலில் அக்காலத்தில் ஈடுபட்டோர் மள்ளர் குலத்தவர் என்கிறார். நாட்டுப்படலம் 32-இல் மள்ளர் குலம் என்றும் வானரர் களம் காண் படலம் 25-இல் மள்ளர் இனம் என்றும் கூறுவதன் மூலம் மள்ளர்கள் ஒரு குலத்தினர், இனத்தினர் என்பதை வெளிப்படையாக உறுதி செய்கிறார்.

பெரியபுராணம் திருமலைச் சருக்கம் நாட்டுச் சிறப்பு கூறும் படலத்தில் இரு செய்யுட்களில் மள்ளர் பற்றிய குறிப்பு வருகிறது. மற்ற செய்யுட்களில் இவரை உழவர் என்று கூறுகின்றார். மருதவளம் கூறும் எல்லா நாட்டுச் சிறப்புப் படலங்களில் எல்லா புராண மற்றும் இலக்கிய நூல்களில் மள்ளர் இனத்தார் பற்றிய செய்திகளே உள்ளன. மள்ளர் இனத்தார் தவிர்த்து வேறு குலத்தினர் எவரும் உழவுத்தொழில் செய்ததாகச் சங்க நூற்களும் இடைக்கால நூற்களும் கூறவில்லை.

திருஞானசம்பந்தர் தமது தேவாரத்தில் (2ம் திருமுறை) 11ஆவது செய்யுளில்

"மல்லையார் மும்முடி மன்னர் முக்கீச்சரத்தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்".

என்னுமடிகளில் உறையூர் வேந்தன் செங்கணான் (முக்கிச்சரத்தடிகள்) மல்லர் குலத்தினர் என்று கூறுகின்றார்.

மேலும் ஞானாமிர்தம், கந்தபுராணம், சிலப்பதிகாரம், சிவகசிந்தாமணி, பெருங்கதை போன்ற நூற்களிலிருந்து பலப்பல மேற்கோள்களின் வாயிலாக மேற்குறிப்பிட்ட செய்திகளை நிலைநாட்டுகின்றார் குருசாமி சித்தன் அவர்கள்.

ஆக இதுவரை கண்ட செய்திகளின் மூலம் மள்ளர்.மல்லர் என்பார் உயர்குடி வாழ் மக்களாக இருந்துள்ளனர் என்பதும் இழிவு செய்யப் பெறவில்லை என்பதும் தெளிவு.

**பிற்கால இலக்கியங்களில் மள்ளர்கள்**

தற்காலத்திற்கு முன்பும் 13ஆம் நூற்றாண்டிற்குப் பின்பும் தோன்றிய நூற்கள் பிற்கால இலக்கியங்கள் எனப்படும்.

பிற்கால இலக்கியங்களில் சில மள்ளர் என்ற குலப் பெயர் பள்ளர் என்று பெயர் மாற்றம் பெற்ற பிறகும் பள்ளரை மள்ளர் என்றே அழைக்கின்றன. தேம்பாவணி, பேரூர்ப்புராணம், ஆற்றூர்ப் புராணம், தியாகராச லீலை, குசேலோபாக்கியானம். திருவிளையாடற் புராணம், திருவாரூர்க் கோவை, அரிகேசநல்லூர்ப் புராணம், மருவனப் புராணம், பழனிப் பிள்ளைத் தமிழ் போன்ற நூற்கள் இதனுள் அடங்கும். பள்ளு நூட்களிலேயே பல இடங்களில் மள்ளர் என்ற சொற் பயன்பாட்டினைக் காணலாம்.

இவ்வாறாக இதுகாறும் மன்னர்களாகவும், குறுநில மன்னர்களாகவும், வேளிர்களாகவும், போர் வீரர்களாகவும், உழவர்களாகவும், தலை மக்களாகவும், புலவர்களாகவும், புரவலர்களாகவும் விளங்கிய மள்ளர்.மல்லர் இன மக்கள் 16ஆம் நூற்றாண்டிற்குப் பின்பு தோன்றிய பள்ளு இலக்கியங்கள் வாயிலாகப் பள்ளர் இன மக்களாக அறிமுகமாவதோடு பள்ளர் என்பார் மள்ளர்.மல்லர் இன மக்களுக்கும் இவர்களுக்கும் தொடர்பே இல்லாதது போல் காட்ட முயல்கின்றன. இவ்விடத்தில்தான் இச்சமூக மாற்றம் எப்படி ஏற்பட்டது என்பதனை ஆராயவேண்டியுள்ளது.

**மள்ளர்/மல்லர் பள்ளராதல்**

"ஆதார மாகிய நீரனைத் தையுமே
சார்புறத் தாங்குவது பள்ள மதற்குரிய
தன்மையாற் பள்ளனெனச் சாற்றும் பேர் பெற்றேன்"

(பொய்கைப்பள்ளு, 26)

பள்ளமான நீருக்குப் பஞ்சமில்லாத இடத்தில் தங்கி வயல்களில் உழைத்து வாழ்க்கை நடத்தினபடியால் பள்ளராயினர் வீரமிகு மள்ளர்/மல்லர். இந்நிலைக்கு ஆளானது எப்படி?

"பெருமை மிக்க மள்ளர் சமூகம் தமிழகத்தில் நாயக்கர் ஆட்சிக்காலத்தில் தனது ஆட்சியுரிமையை இழந்ததைத் தமிழக வரலாறு நமக்குக் காட்டும். தமிழில் சாதி என்ற சொல்லே இல்லை. வடமொழியில் உள்ள ஜாதி எனும் சொல்லே தமிழில் சாதி என்ற சொல்லாக அமைந்தது. சங்க காலத்தில் குடி, குலம் என்ற சொற்களாலேயே மக்கள் பிரிவுகள் தொழிலடிப்படையில் அறியப்பட்டன. திணை அடிப்படையிலான தொழிலில் குறிப்பாக உழவுத் தொழிலில் ஏற்பட்ட சாகுபடிப் பிரச்சனைதான் இன்றைய இம்மக்களின் வீழ்ச்சிக்குக் காரணம்." என்று டாக்டர் தே. ஞானசேகரன் 'கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு' (முனைவர் அ. அறிவுநம்பி) நூலின் முன்னுரையில் கூறகிறார்.

"நானுனைப் போற்றவும் நீயெனைக் காக்கவும் நாயடியேன்
தானுனைப் போலும் ஒருமுதலோ நன்மை தத்துபுரப்
பானம்நை வாயெனச் செய்வானும் நீ"

(திருமலை முருகன் பள்ளு, 92)

எப்போது நிலவுடைமையை இழந்து மற்றையோர் நிலத்திலே பணி செய்யப் புகுந்தாரோ அன்றே மள்ளர் பள்ளரானார், எப்போது நில உடைமையாளனை ஆண்டான் என்றும் மன்னரை அடிமை என்றும் புலவர்கள் கருதத் தோன்றியதோ அன்றே மள்ளர் பள்ளர்ரானார் என்பது துணிபு.

**பள்ளு இலக்கியத் தோற்றம்**

பழைய இலக்கண நூட்களில் வரும் துறைகளில் ஒன்றைப் பற்றி விரிவாக நூல் செய்யும் வழக்கம் பிற்காலத்தில் எழுந்தது.

ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும்

என்பது தொல்காப்பிய வாகைப் படலத்தில் வருகின்றது. இந்த "ஏரோர் களவழி" சிலப்பதிகாரத்தில் வரும் "ஏர்மங்கலம்", பன்னிருபாட்டியலில்

வருகின்ற "உழத்திப் பாட்டு" முதலிய துறைகளை நினைத்தும், திணை நிலை வரிப்பாடல்களாகவும், கூத்துக்கேற்ற துள்ளல்களாகவும் நாடு முழுவதும் வழங்கி வருகின்ற பாடல்களின் சுவை கருதியும் இவற்றைப் பின்பற்றியமைந்த இயலிசை நாடக முத்தமிழ் நூலாகப் "பள்ளு" என்ற நூல் தோன்றியது.

## பள்ளு நூற்களின் நோக்கம்

மக்களின் மேன்மைத் தன்மையை விளக்குவதற்காக எழுதப்பட வேண்டியவை இலக்கியங்கள். மேலோட்டமாகப் பார்க்கும்போது பள்ளு நூற்களும் பள்ளர் இன மக்களின் பழக்க வழக்கங்களையும் அவர்களது வேளாண் நுணுக்கங்களையும் சமயப் பரவுதலையும் விளக்க எழுந்த நூல் போன்றே காட்சியளிக்கும். ஆயின் முனைவர் இரா. சந்திரசேகரன் 'பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள்' (சு.வேங்கடராமன்.) எனும் நூலின் மதிப்புரையில் "ஒரு குறிப்பிட்ட சமூக மரபை இழிவு படுத்துவதற்காகவே உருவாக்கப்பட்ட சிற்றிலக்கிய மரபாகப் பள்ளு இலக்கியம் எழுந்ததை தமிழ் இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் பதிவு செய்வதில் தயக்கம் காட்டி வந்துள்ளனர். மள்ளர் மக்களின் மரபுகளைப் பாட வந்ததாகக் கூறிக்கொண்டு அம்மக்களை இழிவு படுத்துவதற்காகவும், அன்றைய அதிகார மேல் வர்க்கக் கட்டமைப்பைப் பாதுகாக்கவும் எழுதப்பட்ட பள்ளு இலக்கியங்களை அறிஞர் சு. வேங்கடராமன், சமூக வரலாற்றுத் தளத்தில் மிகச் சரியாக அடையாளம் கண்டுள்ளார்." எனக் கூறுவதிலிருந்தே பள்ளு நூற்களின் நோக்கம் வெட்ட வெளிச்சமாகும்.

## பள்ளு காட்டும் பள்ளரின் வீழ்ச்சி

பிற்கால இலக்கணப்படி பள்ளென்னும் பிரபந்தத்தின் உறுப்புக்கள் நாற்பத்தெட்டு. அவற்றுள் 25. மூத்த பள்ளி முறையீடு, 26. பள்ளன் கிடையிலிருந்தான் போல் வருதல், 27. அவனைத் தொழுவின் மாட்டல், 28. அவன் புலம்பல், 29. மூத்த பள்ளி அடிசில் கொண்டு வரல், 30. பள்ளன் அவளொடு கூறல், 31. அவன் அவளை மன்னிப்புக் கேட்க வேண்டுதல், 32. அவள் மறுத்தல், 33. அவன் சூளுறல், 34. அவள் அவனை மீட்க வேண்டி பண்ணைத் தலைவனைப் பரவல் எனும் மேற்கண்ட பத்து உறுப்புக்களின் வாயிலாக படம் பிடித்துக் காட்டப்பெறும் பள்ளரின் வாழ்க்கை நிலை பள்ளரின் வீழ்ச்சியை விளக்குவனவாக உள்ளன.

திருமலை முருகன் பள்ளுவில் மூத்த பள்ளி முறையிடுதலாக

"..............-இவனையோ
அடக்கவும் மாட்டீர் - நம்பண்ணைக்

காரியம் பாரீர் - அவன் செய்யும்
விரியந் தீரீர்" (70)

வரும்.

"...............குடும்பன்
அடைவுபட்ட செய்திபண்ணை
ஆண்டவனார் கேளுமென்றே
படைதொடுத்து முக்கூடற்
பள்ளிமுறை யிட்டாளே."

(முக்கூடற்பள்ளு, 84)

இதே போன்று அனைத்துப் பள்ளு நூற்களிலும் மூத்த பள்ளியானவள் இளைய பள்ளியின் மேலுள்ள காழ்ப்பு காரணமாகப் பள்ளனைப் பண்ணைக்காரனிடம் பல விதமான குற்றங்களைக் கூறித் தண்டிக்க வேண்டிக் கொள்வாள். பண்ணைக்காரன் பள்ளனைத் தண்டிப்பதுகூடப் பள்ளியின் வேண்டுகேளின்படித்தான் என இலக்கியம் படைத்திருப்பதில் ஆதிக்கச் சாதிக்காரர்களின் உத்தியைப் பாராட்டியேயாக வேண்டும்.

பள்ளியின் சொற்படி பண்ணைக்காரன் பள்ளனைத் தொழுவிலடைக்கின்றான்.

........................சங்காத்தி வீட்டுறக்கம்
சிந்தைதொட்டுப் பாரெனக்கன் சிவந்துபண்ணைக் காரனங்கே
வந்தபள்ளன் தன்காலில் மரக்குட்டை சேர்த்தானே.

(முக்கூடற்பள்ளு, 93)

"............. பண்ணையாள் தச்சனைக் கூப்பிட்டே - பள்ளன்
ஏங்கிடக் குட்டை யடித்தனன் சிக்கெனவோர் ஆப்பிட்டே"

(திருமலை முருகன் பள்ளு,105)

இவ்வாறாக சிறையிடப்பெற்ற பள்ளனை சிறை மீட்கும் பொருட்டு மீண்டும் பள்ளி பண்ணையாரிடம் முறையிடுகின்றனர், மனம் மாறிய பண்ணைக்காரன் பள்ளனை விடுவிக்கிறான்.

பள்ளன், பள்ளியர் பண்ணைக்காரனுடன் உரையாடும் போது நயினாரே, ஆண்டே, ஆண்டவனார், சாமி, இறைவா என்றெல்லாம் விளிக்கின்றபடி புலவர்கள் எழுதியுள்ளனர். அவனை இறைவனுக்குச் சமமாக மதிக்கின்றனர் என பயில்வோரை உணரவைப்பதில் வெற்றி பெறுகின்றன பள்ளு நூற்களின் ஆசிரியர்கள்.

அச்சமே கீழ்ச்சாதிக் காசாரம் என்பார்கள் ஆருமே - நானும்
அவ்வார்த்தைத் தன்னைப் புதுப்பிக்கி றேனின்று பாருமே

(திருமலை முருகன் பள்ளு, 103)

அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டேல் உண்டாஞ் சிறிது

(திருக்குறள், 1075)

கீழ் மக்களுக்கு இலக்கணமாக வள்ளுவர் வகுத்த வாக்கு இப்பள்ளுவில் மள்ளர்களுக்கு ஆசாரமாக்குதலை கூர்ந்து நோக்குதல் அவசியமாகிறது.

சங்க காலம் முதல் இடைக்காலம் முடியவும் பிற்காலத்திலும் பள்ளு இலக்கிய காலத்திற்கு முன்புவரை மாபெரும் வீரர்களாக, மன்னர்களாக, உழவர்களாக, படைத்தலைவர்களாக, உயர்குடி மக்களாக உன்னத நிலையிலிருந்த மள்ளரின மக்கள் இக்கட்டுரையில் கட்டியதைப் போன்று கடை நிலை மக்களாக மாற்றப்பட்மை "பள்ளு" நூற்களின் வாயிலாக தெளிவாக உணரமுடிகின்றது. இந்நிலைக்கு முக்கியக் காரணம் மளளர்களின் நில உடைமை மாற்றமும் அதன் தொடர் நிகழ்ச்சியான பொருளாதார வீழ்ச்சியுமே ஆகும். இதற்கு மேலும் ஒரு காரணம் உண்டென்றால் அது அதிகார மாற்றத்தின் காரணமாக நில உடைமையைக் கைக்கொண்டு தானே உயர்ந்தவன் என்று நிலைநாட்ட முற்பட்ட அதிகார வர்க்கமே. இம்முயற்சிக்குப் பெரிதும் துணை போகும் நூற்களே "பள்ளு" இலக்கியங்களாகும். மள்ளர்களின் வீழ்ச்சியைத் தெள்ளத் தெளிவாக எடுத்துரைப்பவை "பள்ளு" நூற்களே.



# சாத்தன் வழிபாடும் வாதிரியார் வழக்கமும்

த. செய குமார்
பாரத ஸ்டேட் வங்கி, சென்னை 600 007.

'காலத்தின் கண்ணாடி' எனத் திறனாய்வாளர்களால் பெரிதும் போற்றப்படுகின்றது 'இலக்கியம்' என்பதும் ஒரு சமூகத்தின் பண்பாடும் நடைமுறைகளும் மாறா இருப்பனவன்று காலத்திற்கு காலம் மாறிக் கொண்டே வருவதும் அதை இலக்கியங்கள் எடுத்தியும்புவது என்பதும் தொன்று தொட்டு வரும் நிகழ்வுகள்.

தென் தமிழ்நாட்டில் வாதிரியார்கள் எனும் உட்பரிவுப் பெயர் கொண்ட தேவேந்திர குல வேளாளர் சமூகம் சாத்தன் வழிபாடு நிகழ்த்தும் முறையும் சாத்தன் எனும் கிராமத் தெய்வத்தின் நிலை குறித்தும் இக்கட்டுரை ஆய்கிறது. ஆய்வுக்களம் கன்னியாகுமரிக்கு அருகிலிருக்கும் குண்டல் அருள்மிகு காரிசாத்தா திருக்கோயில் ஆகும்.

**சாத்தன் யார்?**

சாத்தன் எனுஞ் சொல் தொன்மைக் காலந்தொட்டே நமக்கு அறிமுகமான சொல்தான். சீத்தலைச் சாத்தனார் எனும் தமிழ்ப் புலவர் இங்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். மேலும் சாஸ்தா என்றழைக்கப்படும் தெய்வம் தான் தென் தமிழ் நாட்டின் கிராமத் தெய்வங்களுள் முதன்மைத் தெய்வமான சாத்தன். பொதுவாக ஊருக்கு புறத்தே காவல் தெய்வமாக வீற்றிருப்பார்.

எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய 'திவாகர நிகண்டு சாத்தனாரைக் கீழ்க்கண்டவாறு அறிமுகப்படுத்துகிறது.

> **கோழிக் கொடியோன் சாதவாகனன்**
> **காரி சாத்தான்-கடல் நிற ஐயன்**
>
> - (திவாகர நிகண்டு-தெய்வங்கள்)

அதன்பின் பிங்கல முனிவர் எழுதிய அகராதியில் "சாத்தன் வெள்ளையானை வாகனன்" என்று குறிப்பிடுகிறார். இங்கு வேந்தன் எனும் மருத நிலக் கடவுளுக்கும் வெண்யானை வாகனமாய் அமைந்திருத்தல் ஒப்பு நோக்கத் தக்கது.

பெருந் தெய்வ வழிபாடு ஓங்கி இருந்த சிலப்பதிகார காலத்தில் சாத்தன் வழிபாடு மிகச் சிறப்பாய் நடைபெற்றிருந்தமை இங்கு குறிப்பிடததக்கது.

இளங்கோவடிகள் கனாத்திறமுரைத்த காதையில் மாலதி எனும் செவிலித்தாய் பால் விக்கி இறந்த பாலகனின் உயிரைத் திரும்பப்பெறும் பொருட்டு

| | | |
|---|---|---|
| தருக்கோட்டம் | - | கற்பகக் கோயில் |
| வெள்யானைக் கோட்டம் | - | ஐராவதக்கோயில் |
| வெள்ளை நாகர் கோட்டம் | - | பலதேவர் கோயில் |
| உச்சிக்கிழான் கோட்டம் | - | சூரியக்கோயில் |
| ஊர்க்கோட்டம் | - | முருகன் கோயில் |
| வச்சிரக்கோட்டம் | - | வச்சிரப்படைக் கோயில் |
| நிக்கந்தக் கோட்டம் | - | அருகன் கோயில் |
| நிலாக் கோட்டம் | - | சந்திரன் கோயில் |

ஆகிய கோயில்களிலெல்லாம் வேண்டி ஒன்றும் நிறைவுறாததால் இறுதியாக அப்பெண்

"எம் உறுநோய் தீர்மென்று மேவியோர் பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாள்"

தனது கவலை தீர்க்கச் சாத்தன் ஒருவனால் மட்டுமே முடியும் என்றெண்ணி அவனிடம் வரம் கேட்கப் பணிந்தாள். பின் சாத்தனே அப்பெண்ணுக்கு பாலகனாய்ப் போய்க் கிடந்தார் என்றும் நிகழ்வு கூறப்படுகிறது. (சிலம்பு -9வது காதை-பாடல்5-15 மற்றும் 25)

இவ்வாறு சாத்தன் எனும் தெய்வத்தின் சிறப்பு இலக்கியங்களில் பேசப்படுகின்றது. இன்று வரையிலும் வாதிரியார்கள் தங்கள் குல தெய்வமாகக் கும்பிட்டு வருகின்ற சாத்தன் எனும் தெய்வம் காவல் தெய்வமாய் கோழிக் கொடியுடன் கருங்குதிரை மேல் ஊர்வலம் வருகின்றார்.

## ஊர்ப் பெயர்களில் சாத்தன்

குமரி மாவட்டம் தெங்கம்புதூரில் வாதிரியார் பெருமக்கள் வாழ்ந்து வரும் தெரு/ஊர்ப் பகுதிக்குப் பெயர் சாத்தன்கோயில்விளை

அவ்வாறே தூத்துக்குடி பகுதியிலிருக்கும் செந்திகைக்குறையான் கிளையைச் சேர்ந்த வாதிரியாாகள் குல தெய்வம் அமைந்திருக்கும் பகுதி சாத்தன் குளம் என்று அழைக்கப்படுகிறது.

இன்றும் சைவன் மற்றும் அருகப்பணிந்தான் கிளை உள்ளிட்டோர் குலதெய்வக் கோயில் அமைந்திருக்கும் தூத்துக்குடி மாவட்டம் உவரிக் கருகிலிருக்கும் அவ்வூரின் பெயர் காரிகுண்டல்.

அஃதாவது கரிய நிறமுடைய குதிரையின் மேலேறி ஊர்க்காவல் புரியும் சாத்தன் எழுந்தருளியிருக்கும் இடம் எனப் பொருள் கொள்வர். இங்ஙனம் ஊர்ப் பெயர்களில் சாத்தனார் வலம் வருவது அறியப்பெறுகிறது.

**கோயில் அமைப்பு**

ஊரின் புறத்தே கிழக்கு நோக்கி கட்டப்பட்டிருக்கும் கோயிலின் மதில்கள் 6 - 8 அடி உயரத்திலிருக்கும். கருங்கற்களால் கட்டப்பட்டிருக்கும் 10 X 6 அடி கருவறையில் சாத்தன் மூலவராய் வீற்றிருப்பார். அறைக்கும் மதில்களுக்குமிடையிலிருக்கும் பிரகாரம் தேரிமணல் பரப்பபட்டதாய் இருக்கும்.

கோயிலின் முன்முற்றத்தில் வரிசையாக சாத்தனின் படைத் தளபதிகளும் (கருப்பசாமி, மாடன், குளிகன், முண்டன் உள்ளிட்டோர்) நிற்கும் நிலையில் இருக்கின்றனர். கருங்கற்களில் செதுக்கப்பட்ட பெருங் குதிரைகள் வாயில் நேராக நிற்கின்றன.

இரவில் குதிரை மீது அமர்ந்து தனது பரிவாரங்களுடன் ஊர்வலம் வந்து காத்து நிற்பதாக கிராமத்திலிருக்கின்ற வாதிரியார் சமூகம் நம்பிக்கை கொண்டு வணங்கி வருகின்றனர்.

**சாத்தன் சாமி**

மூலவராய் இருக்கும் சாத்தனார் ஐயன் என்றும் அரிகரன் என்றும் சாஸ்தா என்றும் பலவாறு அழைக்கப் பெற்று வருகிறார். குறிப்பாக இவருக்குப் பலியிடுதல் இல்லையாயின் ஓதுவார் என்றழைக்கப்படும் பூசாரி இவருக்கான பூசைகளைச் செய்து வருகிறார்.

மாறாக வெளியில் நின்று கொண்டிருக்கும் பரிவாரத் தெய்வங்களுக்கு இன்றும் பலியிடுதல் நடை பெறுகின்றது. இப்பலி நிகழ்வை ஊரிலிருக்கும் அம்பலகாரர் அல்லது தலைவர் எனப்படுபவர் நிறைவேற்றி வைக்கிறார்.

காலப்போக்கில் இடம் பெயர்ந்த வாதிரியார்கள் தற்போது தங்களது குல தெய்வம் குடியிருக்கும் இடம் வெகுதொலைவில் இருப்பதால் குறிப்பிட்ட ஒரு நாளில் கூடி சாத்தனுக்கு விழா எடுக்கின்றனர்.

அப்போது தான் எண்ணெய் காணாத சிலைகள் எண்ணெய் பூசப்பட்டு அந்த ஆண்டுக்கொருமுறை விழாவில் புதிய உருவம் பெற்றது போல் காட்சியளிக்கின்றன.

**பார்த்தனுக் கருளும் வைத்தார் பாம்பரை யாட வைத்தார்**
**சாத்தனை மகனா வைத்தவர் சாமுண்டி சாம வேதம்**

கூத்தொடும் பாட வைத்தார் ......

- (தேவாரம் 4:32)

என திருநாவுக்கரசர் சாத்தனை சிவனின் மகனாக்கி வணங்கி வருகின்றார். பெருந் தெய்வ வழிபாடு பெருகிநின்ற காலத்தும், பௌளத்த மதம் மிளிர்ந்திருந்த காலத்தும் தமிழகத்தில் இருந்து வந்த சிறு தெய்வங்கள் பெருந் தெய்வங்களோடு தொடர்பு படுத்தப்பட்டன. அவ்வாறே புத்தனுக்கும் மறு பெயராய் ஐயன் எனும் பெயர் வழங்கி வருகிறது.

ஆண்டு தோறும் பங்குனி மாதத்தில் வருகின்ற உத்திர நட்சத்திரத்தன்று சாத்தன் வழிபாடு வாதிரியார்களால் சிறப்புற நடத்தப்பெற்று வருகிறது.

உத்திரத்திற்கு முந்திய நாள் அதிகாலையில் சிறு சிறு கூட்டமாக குடும்பத்துடன் தமது குல தெய்வக் கோயில் நடந்தும், உந்துகளிலும் வரத் தொடங்கி வாதிரியார்கள் காலை 7-8 மணியளவில் கூடுகின்றனர். பின் தாம் கொண்டு வந்திருக்கிற கட்டுச் சோற்றை ஓரிடத்தில் வைத்துவிட்டு உற்றார் உறவினர்களுடன் கடல் நீராடச் செல்கின்றனர். பின் தங்கள் குல தெய்வம் சாத்தனை வணங்கிவிட்டுத் தாம் கொண்டு வந்த கட்டுச் சோற்றைப் பகிர்ந்து உண்கின்றனர்.

அன்றே வெவ்வேறு கிராமங்களிலிருந்து வந்திருக்கும் வாதிரியார்களில் சிலர் கூடி பூசைக்குரிய பொருட்கள் வாங்குவதும், அதற்கான செலவுகளுக்கான தொகையைத் தங்களுக்குள்ளே வரியெனப் பகிர்ந்து கொடையாக வந்த ஆட்டுக்கிடா, சேவல், வாழைத்தார், அரிசி இவற்றையும் கணக்கில் கொண்டு மீதித் தேவைகளை நிறைவேற்றும் பொருட்டு கடைகளுக்குச் செல்கின்றனர்.

வந்திருக்கும் பெண்கள் சமையல் செய்கின்றனர். அப்போதே வெவ்வேறு ஊரிலிருக்கும் பெண் - மாப்பிள்ளை குறித்த செய்திகளும் பரிமாறப்படும். சில நேரங்களில் அங்கேயே திருமணம் பேசி முடிக்கப்படுவதும் உண்டு.

அன்று இரவு 7 மணி அளவில் சாத்தனுக்கு சைவ பூசை கொடுக்கப்படுகிறது. பூ, பழம், சர்க்கரைப் பொங்கல், தேங்காய் இவையே சாத்தனுக்கு படையல் பொருட்களாக வைக்கப்பட்டிருக்கும்.

ஓதுவார்கள் என்று அழைக்கப்படும் பூசாரிகள் கிராம தெய்வத்திற்குத் திப ஆராதனை காட்டி வணங்குகிறார். அதன் பின்பு நடை சாத்தப்பட்டு பரிவாரங்களுக்கு உயிர்ப்பலி கொடுப்பதற்கான காரியங்கள் தொடங்கப்படும். பின் வில்லுப்பாட்டு போன்ற நிகழ்ச்சிகள் ஆரம்பமாகின்றன. பொதுவாக வில்லுப்பாட்டில் இடம் பெறும்

கதைகளான சுடலை மாடன் சுவாமி கதை, இசக்கியம்மன் கதை, பஞ்ச பாண்டவர் கதை போன்றவை பாடப்படுகின்றன.

பௌர்ணமி நாளாய் இருப்பதால் வங்காள விரிகுடா கடலின் அலைகள் பொங்கி எழும்புகிறது. அந்த நிலையிலும் வரிதியார் இளைஞர்கள் கடல் நீராடுவதைக் காணலாம். இந்த நீராடல் நள்ளிரவு பூஜை தொடங்குகின்ற வரையிலும் நடைபெறுகிறது.

பரிவாரங்களுக்கான உயிர்ப்பலி தொடங்கப்படுகிறது. இவ்வாறு பலி கொடுக்கும் நிகழ்ச்சி சங்ககாலம் தொட்டே நிகழ்ந்து வருவதற்குச் சான்றாக பல்வேறு இலக்கியங்களைக் காட்ட இயலும்.

"பல்வேறு கடவுட்பேணிக் கலிசிறந்து" *(நற்:251:8)*

"உயிர்பலி பெறூஉம் உறுகெழு தெய்வம் *(அகநா:166:7)*

"நல்லிறை மெல்விரல் கூப்பி
இல்லுறை கடவுட்கு ஆக்குவது பலியே"
*(அகநா:282:17-18)*

'கணங்கெழு கடவுட் குயிர்பலி தூஉய்ப்
பரவினம் வருகஞ் சென்மோ" *(நற்:358:6-7)*

முதல் உயிர்பலி நிகழ்வாக மாடனுக்கு எதிரில் சிறுகுழி ஒன்று தோண்டப்படுகிறது. அதில் திக்கங்குகளை நிரப்பி அம்பலக்காரர் என்னும் முதன்மை வாதிரியார் சேவற்குஞ்சு ஒன்றை அதனுள் வைத்து மூடி விடுகிறார்கள். பின்னர் பலியான சேவற்குஞ்சை வெளியில் எடுத்து பனை ஓலையால் வனையப்பட்ட பட்டையில் வைக்கப்பட்டு படையல் இடப்படுகிறது. இதே வேளையில் நெல்லை குமரி மாவட்டங்களில் மட்டுமே அடிக்கப்படும் இராஜமேளம் முழங்கப்படுகிறது.

பின் கருப்பசாமிக்கு கடா ஒன்று பலியிடப்படுகிறது. நேர்ச்சியாய் வந்த ஆட்டுக்கடா ஒன்றின் நெஞ்சைப் பிளந்து பட்டையில் இரத்தம் பிடிக்கப்பட்டு படையல் பொருளாக வைக்கப்படுகிறது. இவ்வாறு எல்லா பரிவாரங்களுக்கும் படையல் பொருட்கள் வைத்த பின்பு நள்ளிரவு பிளக்கப்பட்ட ஆட்டுக்கிடா சமைக்கப்படுகின்றது. இப்பொழுது பெண்கள் சமைப்பதற்கும், வந்திருக்கும் ஆண்கள் அதிகாலை பூஜைக்கு ஏற்பாடுகள் செய்யவும் தலைப்படுகின்றனர்.

சமைக்கப்பட்ட கிடாயும் சோறும் கருப்பசாமி உட்பட்ட சாத்தனாரின் பரிவாரங்களுக்கு படைக்கப்ட்டு அதிகாலை பூஜை தொடங்கப்படுகிறது. இப்பூஜையில் சேவல் ஒன்று பனை மட்டையில்

கழுவேற்றப்படுகிறது. பின் ஆட்டுக்கிடாய் ஒன்று நீண்ட அரிவாளால் சாமியாடியால் ஒரே வெட்டில் தலை வீழ்த்தப்பட்டு உயிர்பலி கொடுக்கப்படுகிறது.

அதன்பின் பூஜைகள் நடத்தி முடிக்கப்படுகிறது.

சமைக்கப்பட்ட உணவு அனைவருக்கும் பரிமாறப்படுகிறது. விழா நிறைவாக சாத்தனுக்கு சைவ பூஜை மதியம் கொடுக்கப்படுகிறது.

### தொகுப்பாக

இவ்வாறு ஒரு சமூகம் தனது பண்பட்ட வரலாறுகளை, பழக்க வழக்கங்களை பேணிக் காப்பது இயல்பானதுதான். அவ்வாறே தென்தமிழகத்தின் மள்ளர் பிரிவினரான வாதிரியார்கள் தங்கள் குல தெய்வமான சாத்தனை வணங்கி வருகின்றனர்.

கள்ளும் கண்ணியும் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாய்
நிலைத்துறைக் கடவுட் குட்பட வோச்சி

- (அகநா 156:13-15)

என்னும் அகநானூறுப் பாடல் வழக்கு இன்றுவரை வாதிரியார்கள் வழக்கத்தில் உள்ளது பெருமை மிக்கதாய் இருக்கிறது.



# தேவேந்திரர் வழக்கு மன்றம்

டாக்டர் மா. பாண்டி,
தமிழ் விரிவுரையாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

தொன்மையான தமிழ்க் குடிகளுள் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் இனம் தனித்தன்மை கொண்டது.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழு துண்டு பின்செல் பவர்

எனும் வள்ளுவப் பெருந்தகையின் வாக்கிற்கிணங்க உழவுத் தொழிலைக் குலத் தொழிலாகக் கொண்டவர்கள். ஒரூரில் சேர்ந்து வாழும் குடிகளுக்குள் உளவியல், சமூகப் பொருளாதார அரசியல் காரணங்களால் கருத்து வேறுபாடுகளும் பிரச்சனைகளும் தோன்றி, வழக்குகளாக மாறும் நிலையில், அவற்றிற்குத் தீர்வு காண வழக்கு (பஞ்சாயத்து) மன்றம் ஏற்படுத்திச் செயல்படுத்தி வந்துள்ளனர். இம்மன்றத்தினை வெளிக்காட்டுவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## திருப்புவனமும் தேவேந்தர்களும்

சிவகங்கை மாவட்டம் மானாமதுரை வட்டத்திலுள்ளது திருப்புவனம். பாடல் பெற்ற பாண்டிய நாட்டுத் திருத்தலங்களில் ஒன்றாகும். வையைக் கரையிலமைந்த வயலும் வயல்சார்ந்த மருதநிலப் பகுதியாகும். தேர்வு நிலை பேரூராட்சியாகவும் ஒன்றியமாகும் விளக்கும் இவ்வூரில் கல்வி நிலையங்கள், அரசு அலுவல்கள், அத்தியாவசியப் பொருட்கள் வாங்கல், திருவிழாக்கள் போன்றவற்றால் இப்பகுதி மக்களின் சந்திப்பு மையமாக விளங்குகிறது. இப்பகுதியிலுள்ள தேவேந்திர குல வேளாளர்களுக்கு மேற்கண்ட காரணங்களாலும் உறவு முறையாலும் மைய இடமாக அமைந்துள்ளது. இங்குள்ள வழக்கு மன்றம் இவர்களுக்குள் நடக்கும் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் பஞ்சாயத்து அமைப்பாகத் திகழ்கிறது.

இவ்வூரிலுள்ள தேவேந்திரர்கள் நான்கு பிரிவுகளாகவுள்ளனர். அவை காலாடி, குடும்பன், முருகன் கூட்டம், உதிரி என்பனவாகும்.

### காலாடி

காலாடி என்பதற்கு முயற்சியுடையவன் சாதித் தலைவர்களின் பட்டப் பெயர் என்கிறது தமிழ் அகராதி[2]. பழையூரின் பூர்வீகக் குடிகள் காலாடி வகையினர். திருப்புவனம் கண்மாய், மடை, நீர் நிர்வாகத்தைக்

கவனித்தாலும் விவசாயமும் இவர்களின் அடிப்படைத் தொழில்களாகும். கிராமப் பணிகள் சிலவும் இவர்களுக்குண்டு.

### குடும்பன்

சமூகத்தின் அடிப்படை நிறுவனம் குடும்பம். ஒரு வீட்டில் வாழும் நெருங்கிய உறவினர்களை விளக்கும் சொல் குடும்பம். பல குடும்பத்தார் ஒரு குடியினராகக் கருத்தப்படுவர்[3] என்பார் ரா.பி. சேதுப்பிள்ளை. குடும்பத்தின் தலைவன் குடும்பன் என்றழைக்கப்பட்டிருக்க வேண்டும். கால நிலையில் குடிகளுக்கும் தலைவனானான். மதுரைப் பள்ளரின் அதிகாரி குடும்பன் எனப்படுவார்[4] என்பது இவண் நோக்கத் தக்கது. இங்குள்ள குடும்பன் வகையினர் அருகிலுள்ள திருப்பாச்சேத்திக்குப் பக்கத்திலுள்ள வெள்ளிக் குறிச்சி எனும் கிராமத்திலிருந்து வந்தவர்கள். அப்பகுதியில் நடந்த சாதிக் கலவரத்தில் பாதிக்கப்பட்டு, மனம் வெறுத்துப் பழையூருக்கு வந்து குடியமர்ந்து விவசாய உபதொழில்களில் ஈடுபட்டனர். ஒரூரில் வாழும் ஒரே இனத்தவர்களாதலால் காலாடி, குடும்பன் இருவரும் மாமன் மைத்துநர் உறவுமுறை கொண்டு பழகி கொள்வினை கொடுப்பினை மேற்கொண்டனர்.

### வாரியன்

வாரி என்பதற்கு நடத்து என்பது பொருள். "குறிபிட்ட சபைப் பணிகளைச் செய்தவர்கள் வாரியர் என்று அழைக்கப்பட்டனர்"[3] என்பர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி. இங்குள்ள வாரியன் வகையினர் மானாமதுரை வட்டத்திலுள்ள இடைக்காட்டூர், கானூர் போன்ற ஊர்களிலிருந்து வந்து குடியேறியவர்கள். வீரக்குடி முருகனைக் குலதெய்வமாக வழிபடுபவர்கள். இவர்களும் காலநிலையில் குடும்பன், காலாடி, இனத்தவர்களுடன் திருமண உறவுகளை ஏற்படுத்திக் கொண்டனர். வாரியனை ஒடும்பிள்ளை எனவும் அழைப்பர்.

### வழக்கு மன்றம் தோற்றம்

குடும்பங்கள் பல ஒரு சமூகமாகச் சேர்ந்து வாழும் சூழலில் கருத்து வேறுபாடுகள், பிரச்சனைகள், சண்டைகள் சச்சரவுகள் ஏற்படுவது இயல்பாகும். இப்பிரச்சனைகளுக்குத் தீர்வுகாண சமூகங்கள் தங்களுக்குள் அமைப்பை உருவாக்கிக் கொள்வதுண்டு. வேட்டைக்காலச் சமுதாயத்தில் இனக்குழு மக்கள் உணவு தேடச் சென்ற பொழுது வீரம் மிகுந்த ஒருவனைத் தங்கள் தலைவனாகத் தேர்வு செய்து அவனது தலைமையில் செயல்பட்டுள்ளனர். அரசர்கள் தங்கள் ஆட்சியில் ஊர்ப் பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்ள பல்வேறு சபைகளை உருவாக்கியுள்ளனர்.

பாண்டிய மன்னர்கள் காலத்தில் இவ்வகைக் குழுக்கள் இருந்துள்ளன. அவற்றை முறையே 'கிராம சபை' அல்லது 'மகா சபை', 'ஊர்ச்சபை', 'நகர சபை', என்று கூறலாம்[6]. "கிராம மக்களுக்குச் சபைகளே ஆட்சியின் ஸ்திரத் தன்மையைக் காக்கும் நிலையங்களாய் விளங்கின. நாட்டின் அமைதிக்கும் கிராம நல்லாட்சிக்கும் ஊர்ச்சபைகளே அச்சாணி போன்று அமைந்தன"[7] என்பன இவண் நோக்கத்தக்கது. சோழர்கள் காலத்தில் "பெரும்பாலான வழக்குகள் கிராம சபைகளின் முன் கொண்டு வரப்பட்டன. அவற்றைக் கவனிப்பதற்கென்று 'நியாயத்தார்' என்னும் குழுக்கள் அமைக்கப்பட்டன"[8] என்கிறார் கே. எ. நீலகண்ட சாஸ்திரி.

மன்னர்கள் காலம் முதல் தற்கால அரசுகள் வரை இவ்வகை மன்றத்திற்கு மதிப்பளித்து வந்துள்ளனர். காவல் நிலையத்திற்குச் சில வழக்குகள் சென்ற நிலையில் 'ஊர்க்காரர்கள் பிரச்சனைகளைத் தங்களுக்குள் பேசித் தீர்த்துக் கொள்கிறோம் எனக் கேட்டுக் கொண்டால் காவல் துறையும் அதற்கு மதிப்பளித்து ஏற்றுக் கொள்கிறது. தற்பொழுது தமிழக அரசு கிராம சபைகளைக் கூட்டச் செய்து, அதில் அரசின் பிரதிநிதிகளாக அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், மாவட்ட ஆட்சித் தலைவர்களைக் கலந்து கொள்ளச் செய்வதைக் காணலாம்.

திருப்புவனம் பழையூர் தேவேந்திரர்கள் தங்கள் ஊர்க் குடும்பச் சடங்கு முறைகள், ஊர்ப் பொது நிகழ்வுகள், விழாக்கள், கண்மாயில் இடப்பகிர்வு போன்ற காரணங்களால் இவ்வகையான பகுப்பு முறையைத் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்டனர் என்கிறார் முத்து என்பவர். இந்நான்கு பிரிவினரும் ஓரிடத்தில் வாழும் சமூக அமைப்பில் குடும்ப, பங்காளிப் பிரச்சனைகள், நில நீர்ப் பங்கீடு, பணிச் சூழல் போன்ற காரணங்களால் கருத்து வேறுபாடுகளும் சண்டை சச்சரவுகளுக்கும் தீர்வுகாணத் தங்களுக்குள் மன்றம் என்ற அமைப்பை ஏற்படுத்திக் கட்டுக்கோப்புடன் செயல்பட்டு நடைமுறைப் படுத்தியுள்ளனர்.

காலக்கிரமத்தில் சுற்றுப்பகுதி தேவேந்திரர்கள், ஆதி திராவிடர், அருந்ததியர்களும் தங்களுக்குள் ஏற்படும் சச்சரவுகளையும் வழக்குகளையும் இத்தேவேந்திரர் வழக்கு மன்றத்திற்குக் கொண்டு வந்து தீர்வு கண்டுள்ளனர். கிராமங்களில் சாதிப் பஞ்சாயத்து, கிராமப் பஞ்சாயத்து என்ற இருவகையான கிராமப் பஞ்சாயத்துகள் நடைமுறையில் இருந்தன. ஒரு குறிப்பிட்ட சாதியைச் சார்ந்த குடும்பங்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தால் அவை அருகிலுள்ள கிராமங்களிலுள்ள அதே சாதிக் குடும்பங்களுடன் சேர்ந்து ஒரு பஞ்சாயத்தின் கீழ் வந்தன[9] என்பது நோக்கத்தக்கது. கால நிலையில் அவர்களும் இவ்வழக்கு மன்றத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் என்ற நிலை உருவாகியுள்ளது.

## வழக்கு மன்ற அமைப்பும் செயல்பாடும்




**செயற்பாடுகள்**

| | |
|---|---|
| சபை கூடுதல் | Assemble |
| வாதி முறையீடு | Plaintiff's Appeal |
| விசாரணை தொடக்கம் | Begining of the Trial |
| பிரதிவாதி முறையீடு | Defendant's Affidavit |
| விசாரணைகள் சாட்சிகள் | Judicial Trials |
| தீர்ப்பு | Judgement |
| தண்டனை | Punishment |

**பஞ்சாயத்து கூடுதல்**

வாதியின் வேண்டுகோளுக்கிணங்க வாரியன், காலாடி, குடும்பன் இருவரிடமும் பஞ்சாயத்தைக் கூட்ட வேண்டுமெனக் கூறுவார். அவர்கள் இருவரும் ஒரு நாளைச் சுட்டி அன்று பஞ்சாயத்தைக் கூட்ட முடிவு செய்வர். வாரியன் பஞ்சாயத்துக் கூடும் நாளை வாதி, பிரதிவாதி, சாட்சிகள், பொதுமக்கள் ஆகியோரிடம் தெரிவிப்பர். பஞ்சாயத்து முறைப்படி பழையூரிலிருக்கும் முனியாண்டி கோயில் ஆலமரத்தின் கிழ் காலை பத்து மணியளவில் கூடும். அனைவரும் கூடி கிழக்கு நோக்கி அமர்வர்.

### விசாரணை தொடக்கம்

அனைவரும் கூடியவுடன் வாரியன் ஒரு சொம்பு நிறைய நீரும் தட்டில் வெற்றிலை பாக்கும், ஒரு தடிக்கம்பும் வைப்பார். வெற்றிலை பாக்கை வாதி, பிரதிவாதி இருவரும் தங்கள் செலவில் வாங்கி வைக்க வேண்டும். இருவரும் ஆளுக்கு ஒன்றேகால் ரூபாய் வைக்க வேண்டும். வாரியன் வாதி, பிரதிவாதி இருவரையும் (ஆணாக இருப்பின்) மேலாடையைக் கழற்றி, துண்டை இடுப்பில் கட்டி, விழுந்து கலையை வணங்கி கைகளைக் கட்டிய வண்ணம் அவரவர் இடத்தில் நிற்கச் சொல்வார். அதன்படி இருவரும் செய்வர். பஞ்சாயத்தின் தீர்ப்புக்குக் கட்டுப்படுகிறோம் என இருவரிடமும் சத்தியப் பிரமாணம் வாங்கிக் கொள்வர்.

### வாதி முறையீடு

காலாடி அல்லது குடும்பன் வாரியனை விளித்துப் பஞ்சாயத்தைக் கூட்டிய காரணத்தை வினவுவர். வாரியன் வாதியை நோக்கி பஞ்சாயத்தைக் கூட்டியதற்கான காரணத்தைச் சொல்லும்படி கூறுவார். வாதி பிரதிவாதியால் தனக்கேற்பட்ட பாதிப்பை முறையிட்டு பஞ்சாயத்தார் நீதி வழங்கும்படி வேண்டுவார். அடுத்து வாரியன் பிரதிவாதியிடம் வாதி முறையிட்டதைக் கூறி நடந்தது உண்மைதானா? ஏற்றுக் கொள்கிறீர்களா எனக் கேட்பார். பிரதிவாதி தன் தவறை ஒத்துக் கொண்டு பஞ்சாயத்தின் தீர்ப்புக்குக் கட்டுப்படுகிறேன் என்று ஆரம்ப நிலையிலேயே கூறிவிட்டால் சாட்சிகளை விசாரிக்காது தவறுக்கேற்பவும், வாதியின் பாதிப்புக்கேற்பவும் தண்டனை தீர்ப்பாக வழங்கப்படும். இந்நிலையில் வழங்கும் தண்டனை குறைவாகவே இருக்கும்.

பிரதிவாதி தன்மேல் தவறில்லை என மறுக்கும் சூழலில், விசாரணைகள் தொடர்ந்து நடைபெறும். சாட்சிகள் இருப்பின் அவர்களையும் விசாரிப்பர். வாதப் பிரதிவாதங்கள் தொடர்ந்து நிகழும். பிரதிவாதி ஒத்துக் கொள்ளாத சூழலில் பஞ்சாயத்து ஒத்தி வைக்கப்பட்டு பிரிதொரு நாளைக்குக் கூட்டப்பட்டு முறைப்படி விசாரணை நடைபெறும். வழக்கு விசாரணையின் போது வாதியோ, பிரதிவாதியோ அல்லது இருவருக்கும் வேண்டப்பட்டவர்கள் யாரேனும் சபை அவமதிப்புச் செய்தால் அதற்கெனத் தண்டனை வழங்கப்படும். எனவே அனைவரும் பஞ்சாயத்துக்குக் கட்டுப்பட்டும் மதித்தும் நடப்பர். சில வழங்குகளில் பஞ்சாயத்து பலமுறை கூடும்.

### தீர்ப்பு

காலாடி, குடும்பன் இருவரும் வாதி, பிரதிவாதி மற்றும்

தேவையான சாட்சிகளை மாற்றி மாற்றி விசாரித்து நடந்தவற்றை உறுதிப்படுத்திக் கொள்வர். பின் இதுபோன்ற முன்னால் நடந்த வழக்குகளையும், புராண நாட்டுப்புற நீதிக் கதைகள் பழமொழிகள், பாத்திரங்கள் செயல்கள், தீர்ப்பு தண்டனை போன்றவற்றையும் தீர்ப்பு வழங்கும் முன் வாதி, பிரதிவாதி பொது மக்கள் அனைவரும் உணரும்படியும், சிந்திக்கும்படியும் இதுபோன்ற தவறுகள் பிரச்சனைகள் எதிர்காலத்தில் நிகழாதிருக்க உதவும் எனக்கருதியும் கூறுவார். வழக்கின் இப்பகுதி சுவையாகவும் சிந்தனையைத் தூண்டுவதாகவும் இருக்கும்.

**தீர்ப்பு வழங்கல்**

திர்ப்பு வழங்கும் முன் வாதி, பிரதி இருவரிடமும் பஞ்சாயத்து எடுக்கும் முடிவுக்குக் கட்டுப்படுகிறோம் என்று மீண்டு உறுதிவாக்கு மூலத்தை தெய்வத்தைச் சாட்சியாக வைத்து வாங்கிக் கொள்வர். நெருங்கிய உறவு, வாதி பிரதிவாதியின் செல்வாக்கு, கையூட்டு என்று எந்தவிதமான சாதக பாதகமின்றி தெய்வத்தைச் சாட்சியாக வைத்து காலாடி திர்ப்பு வழங்குவார்.

**தண்டனை**

வாதியின் பாதிப்பு, பிரதிவாதியின் தவறான செயல், இவர் பஞ்சாயத்தாரிடம் நடந்து கொண்ட நடத்தை போன்றவற்றை அடிப்படையாக வைத்துத் திர்ப்பு அமையும். பெரும்பான்மை தண்டத் தொகையாக பணம் வசூலிக்கப்படும். சிறு பிரச்சனைகள், குறைவான பாதிப்பு எனில் தவறு செய்தவரை மன்னிப்புக் கேட்கச் சொல்லுதல், வருத்தம் தெரிவித்தல், கோயிலுக்கு விளக்கேற்றல் போன்றவை தண்டனையாக விதிக்கப்படும். வாதிக்குப் பெரும் பாதிப்பாக இருந்தால் அதற்கேற்ப பிரதிவாதி பணம் கொடுக்கும்படி திர்ப்பு அமையும்.

திர்ப்பு வழங்கப்பட்ட பின் வாதி, பிரதிவாதி இருவரும் சிறு தொகையினை ஊர்ப் பணமாகக் கொடுக்க வேண்டும். அத்துடன் பஞ்சாயத்து முடிவுறும்.

ஒருவேளை பஞ்சாயத்தின் திர்ப்புக்குக் கட்டுப்படவில்லையெனில், கட்டுப்படாதவர்களின் குடும்பத்தை ஊரைவிட்டே ஒதுக்கி வைத்து திர்ப்பு வழங்கப்படும். அக்குடும்பத்துடன் ஊரிலுள்ள எவரும் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது என்ற தடை விதிக்கப்படும். ஊர் மக்கள் இத்திர்ப்பை மதித்து நடப்பர். மீறிப் பேசுபவர்கள், தொடர்பு வைத்துக் கொள்பவர்களைக் கண்காணித்து அபராதம் விதிப்பர். மீறினால் அவர்களையும் ஊரிலிருந்து ஒதுக்கி வைத்து விடுவர். இவர்களுக்கும் ஊருக்கும் எந்தவித ஒட்டும் உறவும் இருக்காது. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும் என்பது பழமொழி.

அதேபோல் வழக்கு விசாரணையின் போது வாதி, பிரதிவாதியின் மீது பொய்யான குற்றச்சாட்டைக் கூறி வீண்பழி சுமத்துகிறார்கள் என உறுதியாகத் தெரியவரின் வாதியின் மீது கடுமையான நடவடிக்கை எடுத்துத் தண்டனை வழங்கித் தீர்ப்புக் கூறுவர்.

ஊரைவிட்டு ஒதுக்கி வைக்கப்பட்டவர் காலநிலையில் தன் தவற்றை நினைந்து வருந்தி ஊருடன் ஒத்து வாழ விரும்பினால்; பஞ்சாயத்தை முறைப்படி கூட்டி, வருத்தம் தெரிவித்து பஞ்சாயத்து வழங்கும் தண்டத் தொகையைக் (அபராதத்தைக்) கட்டி ஊருடன் சேர்ந்து வாழலாம்.

### தொகுப்புரை

அண்மைக் காலம் வரை இப்பஞ்சாயத்து முறை சிறப்பாகவும் வலுவாகவும் இருந்து வந்தது. இன்றைய கல்வி, பொருளாதார வளர்ச்சி, உளவியல் காரணிகள் போன்றவற்றால் எங்கும் எதிலும் தாக்கம் எனும் அடிப்படையில் இப்பஞ்சாயத்திலும் தாக்கம் நிகழ்ந்துள்ளது. வாதி, பிரதிவாதி இருவருமே மேற்கண்ட சூழலால் காவல் நிலையம், நீதிமன்றம் போன்ற அரசு அமைப்புகளை அணுகுகின்றனர்.

என்னதான் மாற்றங்கள் நிகழ்ந்தாலும் இன்றும் காலாடி, குடும்பன், வாரியன் மூவருக்கும் ஊர்க் கட்டுப்பாட்டிற்கும் மரியாதை உண்டு. குடும்பச் சடங்கு முறைளகள், ஊர்ப்பொது நிகழ்வுகள், வழிபாடு, திருவிழாக்கள் போன்றவற்றில் இவர்கள் முன்னிருத்தப்பட்டு இவர்களின் வழிகாட்டுதலில் நடைபெற்று வருகின்றன. இக்கட்டுப்பாடுகளும் மரியாதைகளும் இன்றும் இவர்களிடையே இருந்து வருவது இவர்களின் ஒற்றுமைக்குச் சான்றாகும். இதனால் இப்பகுதியிலும், தென் மாவட்டங்களிலும் தேவேந்திரர்களுக்கு பிற சமூகத்தினரிடம் மதிப்பும் மரியாதையும் அதிகரித்து வருவது வெள்ளிடை மலை.

### அடிக்குறிப்புகள்

1. திருக்குறள் எண் 1034
2. தமிழ் அகராதி, ப. 187
3. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், பக். 60, 199.
4. ந.சி. கந்தையா பிள்ளை, தென்னிந்திய குலங்களும் குடிகளும், ப. 85.

5. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள், ப. 663.
6. கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு, ப. 169.
7. மேலது ப. 170
8. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள், ப. 639.
9. இந்தியச் சமுதாயம், சியாமா சரண் துபே, ப. 109. (தமிழாக்கம் என். ஸ்ரீதரன்)





# இந்திய சுதந்திரப் போரில் கோவை மாநகர தேவேந்திரர்களின் பங்கு

**புலவர் கி.ஆ. சுப்புராசு சரோசினி**

இலக்குமி இல்லம் பெரியார் நகர், புலியகுளம்,
கோயமுத்தூர் 641 045

கோயம்புத்தூர் புலியகுளம் என்னும் பேரூர் - கொங்கு நாட்டின் மகுடம் என்னும் புகழமைந்த ஓர் ஊராகும். இவ்வூரில் வாழும் மக்கள் உழைப்பால் உயர்ந்து, உயர் எண்ணத்தால் வளர்ந்து நானிலமே போற்றும் ஏற்றம் பல பெற்ற மக்களாவார்கள்.

பழைய கோவையின் கிழக்கு எல்லையாகவும் நவீன கோவையின் நடுநாயகமாகவும் விளங்குவது புலியகுளம் என்ற புகழ்மலிந்த பேரூர்.

புலியகுளத்தின் கிழக்கு எல்லை சங்கனூர் ஆறு, சிங்காநல்லூர் குளத்தில் சங்கமிக்க ஓடும் காட்டாறாகும். மேற்கு எல்லை ஆளவந்தார்கள், ஆலை அரசர்கள், அரசியல் விற்பன்னர்கள், ஆட்சி அதிகாரத்தை செயல்படுத்தும் கருமத்தலைவர்கள் வாழ்ந்து வரும் பகுதியாகும். குதிரைச் சவாரி செய்யும் செங்காடு (Red Fields) என்ற ரேஸ்கோர்ஸ்.

தெற்கே எல்லைக் கோடு வகுத்தது போல், வாலாங்குளத்தில் கடை விழுந்து வழிந்தோடும் நொய்யல் ஆற்றின் எச்ச சொச்சம் கொங்கதுறை என்ற சிற்றாறு, புலியகுளத்தின் முந்திவிநாயகர் ஆலயத்தின் பாதந்தொட்டு, மாரியம்மன் - சிறுகாளியம்மன் திருவிழா - அம்மன் திருநீராடல், கம்பம் தூளிக்கும் "அம்மன் குளத்தில் அமைதியுறும். வடக்கே லட்சுமி பஞ்சாலை - தென்கிழக்கே பங்கஜா நூற்பாலை. மேற்கே ஒட்டிய உறவாக திரைப்படம் பிடிக்கும் கந்தன் ஸ்டுடியோ...(பச்சிராசா)

உலகுதொழ நெல்விதைத்துக் கதிரடித்து நெல்லளக்கும் வள்ளல்கள் மல்லாண்டை படைக்கும் பண்ணாடிகள், ஏர்க்கள மள்ளரும் போர்க்கள மள்ளரும் ஒன்றே என்ற தொல்குடி உழவர் வாழும் மூதூராகும்.

இவ்வூரில் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு காடழித்து நாடாக்கி, குளந்தொட்டு வளம் படுத்தி, சோழ நாட்டினின்று வந்த சோழிய மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்கள் இன்று ஆயிரக்கணக்கான குடும்பங்கள் பல்கிப்பெருகி வாழ்ந்து வருகிறார்கள்.

ஏரும் போரும் இருகண்ணெனக் கொண்ட இம்மக்கள் வேளாண் தொழிலை விரிவாக்க மந்தியும் அறியா மரம் செறி இருட்காட்டை அழித்து, குளம் வெட்டி, வயல்வள மள்ளராக வாலாங் குளத்தைச்

சுற்றிய நெஞ்சை அள்ளும் நஞ்சை வயல்களை உழுது, பண்படுத்தி, நெல்விதைத்து, வளர்த்து, வளர்ந்த நெற்கதிரின் நீழலில் நின்றார்கள்.

புகழ்மிகுந்த மாரியம்மன் கோயிலை, கலைமலிந்த ஆசியக் கண்டத்திலேயே ஒப்பரிய மா பெரிய முந்தி விநாயகர் கோயிலை, சிறுகாளியம்மன் கோயிலையும், குல தெய்வங்களாக மருதநிலத்தின் மக்கள் தம் ஒப்பரிய வீரனாம் மருதவீரனை காமாட்சி அம்மனை, கருப்பராயனைக் கொண்டு விழவு மலிந்திருப்பதோடு, புகழ் மிகுந்த புனித அந்தோணியார் ஆலயத்தை 1824-ஆம் ஆண்டே கட்டி, கிருத்துவ தேவேந்திரர்கள் என்ற கிரீடத்தைப் புனைந்தார்கள்.

புலிகள் வாழ்ந்த புலியகுளத்தில் விடுதலைப் போராட்டத்தில் அவர்கள் வகித்த பங்கு என்ன என்ற கேள்வி எழுந்தது. போர்க்குறி காயமே புகழின் காயம்' என்ற கொள்கையை நடைமுறை வாழ்வில் நன்கறிந்த இவ்வினத்தார் பாதகம் செய்பவரைக் க்ண்டு நடுங்கவோ, பயங்கொள்ளவோ எள்ளளவும் எண்ணாது, அவர்களை மோதி மிதித்து முகத்தில் உமிழ்ந்து, வெஞ்சமர் முடிக்கும் நெஞ்சுரம் பெற்ற மள்ளர்கள். வெள்ளைப் பரங்கியரை எதிர்த்து தேச விடுதலைக்குப் போராடாமல் இருப்பார்களா? விடுதலைப் போராட்டம் நடத்திய தலைவர்கள் பட்டியல்களில் அவ்வினத்தார் பெயர்கள் இடம் பெறக் காணோமே என்ற ஏக்க உணர்வு நெடுங்காலமாக, ஒரு நெருடலாகவே இருந்தது.

வழக்கம் போல் பழைய புத்தகக் கடையில் புத்தகங்கள் தேடும் போது....?

"கொங்கு நாட்டில் இந்திய சுரந்திரப் போராட்டம்" என்றதொரு நூல் கிடைக்கப் பெற்றது. தொல் பொருள் ஆய்வுத் துறையால் அகல் வாய்வு செய்தபோது பன்னூறு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கிடைத்த ஒரு வரலாற்றுக் குறிப்பு கிடைத்ததைப் போல் 138ஆம் பக்கம் ஒரு செய்தி காணப்பெற்றது. "பழைய கோவையின் கிழக்கு எல்லையில் இருந்தது புலியகுளம். இது புலியகுளம் என்ற குளத்தை ஒட்டி ஏற்பட்ட ஊர். எனவே புலியகுளம் எனப்பெயர்ப் பெற்றது. இவ்வூர் சமுதாயத்தால் மிகமிகப்பின்தள்ளப்பட்ட பெருமக்களின் வாழ்விடமாக இருந்தது. அம்மக்கள் அன்புக்காக தங்கள் உயிரையும் கொடுக்கும் தன்மை உடையவர்கள். அவர்களில் பலர் நாட்டின் பால் கொண்டிருந்த அன்பால் சுதந்திரப் போராட்டங்களில் ஈடுபட்டுள்ளனர்." என்ற காரிருளில் ஒரு மின்மினிப் பூச்சிபோல் வெளிச்சம் கிடைத்தது.

ஒடுக்கப்பட்ட மக்கள் சுதந்திரப் போராட்டத்தை ரோட்டோரமாக நின்று வேடிக்கை பார்த்தவர்கள். நேரடியாக அவர்களுக்கு சுதந்தரப் போராட்டத்தில் எந்தப் பங்கும் பாத்தியமும் கிடையாது. இராணுவத்தில், காவல்துறையில் இவர்களுக்கு எந்த விதமான பங்கு பாத்தியதையும் கிடையாது. உழுவது, உண்பது, உறைவது, மக்களைப் பெறுவது

என்பதே இவர்கள் நித்தியக் கடன் என்ற கட்டுக் கதையைப் பரப்பினார்கள்.

"இராணுவத்தில் ஆதிக்கச் சாதியினரே அதிகமாக இருந்ததால், அவர்களின் ஆதிக்கமே மேலோங்கி நின்றது. ஒடுக்கப்பட்டோரின் எண்ணிக்கை குறைவாக இருந்ததாலும், உயர்சாதியினரே ஆதிக்கம் செலுத்துபவராக இருந்ததாலும், ஒடுக்கப்பட்டவர்கள் புறக்கணிக்கப்பட்டதோடு, ஒதுக்கி வைக்கப்பட்டார்கள். அப்போது சமுதாயத்தில் ஆதிக்க சாதியினரும், அடாவடிச் சாதியினரும் ஒடுக்கப் பட்டவர்களை ஒதுக்கி வைத்திருந்ததைப் போலவே இராணுவத்திலும் இந்நிலை எதிரொலித்தது. இந்தச் சூழ்நிலையால் சமுதாயத்திலும், இராணுவத்திலும் ஆதிக்கச் சாதிப் பிரிவினரிடமும் இருந்து ஒடுக்கப்பட்டோர்கள் ஆற்றிய பணிகளும் புறக்கணிக்கப்பட்டதோடு மறைக்கவும் பட்டது.

1750- இல் நடந்த விடுதலைப் போரில் தேவேந்திர குல வேளாளர்கள் கலந்து கொண்ட வீரவரலாறு மறைக்கப்பட்டது. 1857 - இல் நடைபெற்ற விடுதலைப் போரை மையமாக வைத்து தேவேந்திர குலமக்கள் பற்றிய கருத்துக்கள் உண்மைக்கு மாறாக திரிக்கப்பட்டது. பூலித்தேவன், கட்டபொம்மன், ஊமைத்துரை, சின்னமருது, பெரியமருது போன்றோர் மட்டும் வெளிச்சத்திற்கு கொண்டு வந்த விடுதலை வீரராக வரலாற்று ஆசிரியர்கள் எழுதி வைத்தனர்.

நாட்டுப்புற பாடல்கள், செவி வழிச் செய்திகள், கர்ணபரம்பரைக் கதைகள், வீர நடுகற்கள் பல்வேறு செய்திகளை வெல்லற்கரிய மள்ளரின மக்களின் வீர திர சாகசங்களை மறைக்கப்பட்ட உண்மைகளை வரலாறுகளை கொண்டு வருகின்றன.

பேராசிரியர் நா. இராசையா அவர்கள் "உண்மையான தியாகிகள் மாவீரர்கள் ஆகியவர்களின் செயல்கள் இருட்டடிக்கப்படுவதுடன் போராளிகள் புகழ் வெளிவராமல் போலிகளின் புகழ் வெளிச்சம் பெறுவதும் என்றுமே பெரும் பிழை" எனக்கூறி, கட்டப் பொம்மன் தளபதியாகத் திகழ்ந்த தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார், பூலி த்தேவனோடு, தோளோடு தோள் கொடுத்து, வெள்ளைப் பரங்கியரை எதிர்த்துப் போராடிய தேவேந்திர வேளாளர் இனத்தைச் சார்ந்த தலைமைத் தளபதி வெண்ணிக்காலாடியும் தளபதி கட்டைக் கருப்பன் சுந்தரலிங்கக் குடும்பன், பெரிய காலாடி, சின்னக் காலாடி, காலாடிக் கருப்பன், சங்கரலிங்கக் குடும்பர், கனத்த சோபன், பழனியாண்டி, சாத்தன் காலாடி, மொட்டைச் சங்கரன் காலாடி, குட்டைக் கூத்தன் காலாடி, மாடக் குடும்பனும், பள்ளக் கருப்பன் காலாடியும் என்று எண்ணற்ற தேவேந்திர குல வேளாளர்கள் கலந்து கொண்ட வரலாற்றை விரிவாக "விடுதலைப் போரில் தாழ்த்தப்பட்டோர் பங்கு" என சேதுபதி 'செந்தமிழ் திரட்டு' என்ற நூலில் கோடிட்டுக் காட்டுகிறார்.

ஆனால் தமிழக அரசோ தேவேந்திர குல வேளாளர் என்ற மக்களின் தியாகத்தை வெளிக்கொணர விரும்பவில்லை. என்ன காரணம்? ஒரு அரசே இவ்வாறு செய்யலாமா?

"கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம், என்ற 454 பக்கங்களை உள்வாங்கிக் கொண்ட நூலில் கோவை சுதந்திரப் போராட்ட தியாகிகள் மன்றம், 6 - நேரு நகர், கோவை - 641 016 என்று நூலில் குறித்த சில சத்திய வாக்கைக் காண்கின்றோம்.

"ஆனால் அவர்களின் (தேவேந்திர குல வேளாளர்கள்) ஈடுபாட்டினை வெளிக்கொணர அரசு விரும்பவில்லை. தியாகிகள் எண்ணிறந்தவர்களாக உள்ளனர் என்ற கருத்து இன்னும் பலரை ஈர்க்கும் என்ற அச்சமே காரணம். இவ்வாறுதான், கோவை இராமநாதபுரம், செல்வபுரம் (பள்ள பாளையம்) கோவை கோட்டை போன்ற ஊர்மக்களின் சேவை வெளிச்சத்திற்கு வராமலே இருட்டடிப்பு செய்யப்பட்டது என்ற ஒப்புதல் வாக்குமூலம் ஆவண வடிவில் தந்ததோடு மேலும் விளக்குகிறார்.

அவர்களின் (பள்ளரல்ல மள்ளர், ஆம் மன்னர்) உணர்ச்சி வசப்படும் தன்மை அதற்கு உறுதுணையாய் நின்றது. அவர்கள் சுதந்திரத்திற்காக உழைத்த உழைப்பானது, உணர்ச்சி, ஏழ்மை, அறியாமை ஆகிய காரணங்களால் திசை திருப்பி விடப்பட்டு கிரிமினல் குற்றங்களாக மாற்றப்பட்டன. எனவே பலரின் பெயர்கள் தெரியாமலே மறைந்தன. இவ்வாறு பெயர் தெரிந்த சில செய்திகள் அறிய பட்டவர்களின் புலியகுளத்தைச் சார்ந்த மூவர் நாராயண சாமிநாயுடு மகன் பி.என். இராமச்சந்திரன், பழனியப்ப முதலியார் மகன் பி. இராமசாமி முதலியார், சின்னப்பன் மகன் தேவ சகாயம் என்று மூவரைக் குறிப்பிட்டு ஒருவர் நாயுடு, இரண்டாமவர் முதலியார் மூன்றாமவர் பெயரைக் குறிப்பிட்டு சாதியைச் சுட்டவில்லை. தேவ சகாயம் என்ன சாதியைச் சார்ந்தவர்? உயர் சாதியார்கள் என்போர் தத்தம் சாதியை குறிப்பிடுவதும் ஒடுக்கப்பட்டோர் என்போரின் சாதியைப் போடாது விடுவதும் ஒருவகையான சூதாகும். ஒவ்வொருவருக்கும் முகமும் முகவரியும் அவசியம் வேண்டும். முகமில்லாதவர்க்கு முண்டன் என்று பெயர். முகவரியில்லாதவர் வாழ்வது தண்டம் என்று கொள்வர். ஒவ்வொருவருக்கும் தத்தமக்குரிய முகவரி தேவை என்பார் R.C. காந்தி I.A.S.(மள்ளர்) குறிப்பிடுவதின் கூற்று சரியான பொருள் பொதிந்த சொல்லாகும்.

இனி புலியகுளத்தில் தேவ சகாயப் பண்ணாடியோடு விடுதலைப் போராட்டத்தில் சிறை புகுந்த சிங்கங்கள். புலிப் போத்துக்கள், மதம் பொதிந்த யானைகள், பெண் சிறுத்தைகள் 18 பேர்களின் பட்டியலைப் பாருங்கள். ஒரே குடும்பத்தின் அண்ணன் தம்பியர்கள் - இரு குடும்பத்தைச் சார்ந்தவர்களாவார்கள். அவர்தம் நாட்டுப்பற்று நாநிலமே

போற்றும், கைதொழுது வாழ்த்தும், எத்துணை ஈடுபாடு.

1. சின்னப் பண்ணாடி மகன் தேவசு என்ற தேவசகாயம் என்பவர் தமது இருபதாவது வயது முதல் காங்கிரசில் ஈடுபாடு கொண்டு கைமாறு கருதாது உழைத்து 1942ஆகஸ்ட் பேராட்டத்தில் பங்குற்று, யுத்த எதிர்ப்பு பிரச்சாரம் செய்து கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டுப் போலிசாரின் துன்பத்திற்கு ஆளாகி ஆறுமாதம் கடுங்காவல் தண்டனை வழங்கப்பெற்றார்.

2. பேரூரார் பேரன் அருணாசலப் பண்ணாடியின் நடுமகன் சண்முகம் தேவேந்திரர் பங்கசா மில்லில் வேலை பார்த்த தொழிலாளி. காங்கிரஸ் இயக்கத்தால் கவரப்பட்டு, கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டு போலீஸ் தடியடிப்பட்டு 6 மாதம் கடுங் காவல் தண்டனை ஏற்றவர்.

3. பேரூரார் பேரன் அருணாசலபபண்ணாடியின் கடைக்குட்டி தியாகி ஆறுமுகப் பண்ணாடி காந்திய நெறியில் ஈர்க்கப்பட்டு கைராட்டையே ஆயுதம் கதராடையே பூணுவோம் என்று வீதி எங்கும் பிரச்சாரம் செய்தவர். அகிம்சை அவர் ஆயுதம். கள்ளுக் கடை மறியல் அவர் பொழுதுபோக்கு. 6 மாத காவல் தண்டனை ஏற்றவராவார். தன் அண்ணன் காலமானபின் திராவிடக் கழகத்தில் இணைந்து இன்று கதராடையும் கதர்க் குல்லாயும் பூண்டு தியாகி ஆறுமுகப் பண்ணாடி கோயில் குளங்களில் வலம் வருகிறார்.

4. பட்டாணி மாரியப்ப பண்ணாடி பங்கஜா மில் தொழிலாளி. இவர் சாந்தமும் அன்பும் இரக்கமும் கொண்ட காந்தியவாதி. காந்திய நிர்மானத் திட்டத்தில் ஈடுபட்டு 1942ஆம் ஆண்டு கைது செய்யப்பட்டு 6 மாதம் தண்டனை ஏற்றவர். கோவை மத்திய சிறைச்சாலையில் இருந்தவர்.

5. பட்டாணி பேரன் - மாரியப்ப பண்ணாடியின் ஒரே தம்பி, டெய்லர் கருப்புசாமிப் பண்ணாடி, இவர் திவிர நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் கொண்டவர். தம் தையல் கடையில் இருந்து கொண்டே இயக்கத்தை வளர்த்த இரும்பு மனிதர். விடுதலைப் போராட்டத்தில் தன் அண்ணனோடு சேர்ந்து தேச நிர்மானத் திட்டத்தில் பங்கு கொண்டு கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டு 6 மாத தண்டனை பெற்று கோவை மத்திய சிறைச்சாலையில் இருந்தவர். பெரியாரின் சாதி மறுப்புப் போராட்டம், மொழி உரிமை போராட்டத்தில் கலந்து பல முறை சிறை சென்று வந்தவர். சிறை சென்ற செம்மல்களில் வாழ்கின்றவர் இவர் ஒருவரேயாம்.

6. மூக்கன் முனுசாமிப் பண்ணாடி என்ற ப. கருப்புசாமிப் பண்ணாடி. கண்ணிரண்டும் இழந்த பரமேஸ்வரப் பண்ணாடி என்பவரின் செல்லமகன். இவரோடு பிறந்தவர் இரண்டு

தங்கையராவார். பங்கசா மில்லில் பணியாற்றி தொழிலாளர் தலைவராக வளர்ந்து, தூப்பாக்கிச் சூட்டில் இணைத்து ஒரு ஆண்டு கோவை மத்தியச் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டவராவார். பின்னாளில் திராவிட இயக்கத்திலும் பொதுவுடமை கட்சியிலும் பணியாற்றிக் காலமானார்.

7. குருவம்மாபேரன் இராமசாமிப் பண்ணாடியின் தந்தை இளமையிலேயே காலமாகி விட்டார். ஒரே மகனைச் செல்லமாக வளர்த்து, மாமல்லனாக வளர்ந்து ஆசானுபாவனாக உலா வந்தவர். பங்கசா மில் புலியகுளத்தில் இருப்பதால் குண்டு வெடிப்பில் சம்பந்தப்படுத்தி ஒரு ஆண்டு கடுங்காவல் சிறையில் இருந்தவர்.

8. நஞ்சப்பப்பண்ணாடி. இவருக்கு வாரிசுகளில்லை. அன்பும் அடக்கமும் நிறைந்தவர். வைரம் பாய்ந்த நெஞ்சுரம் கொண்ட காந்தியவாதி. தாம் இறக்கும் வரை காந்திய வாதியாக வாழ்ந்து காட்டியவர். பல சுதந்திரப் போராட்டங்களிலும் கலந்து கொண்டு முன்நின்று போராடியவர்.

9. ஆரோக்கியசாமிப் பண்ணாடி ஞானமும் கல்வியும் நன்கு கைவரப்பெற்றவர். காந்தியப் பாடல்களை மேடைதோறும் பாடி, பேசி கொள்கை விளக்கம் தந்தவர். தாம் மரிக்கும் வரை காங்கிரஸ் எம்.எல்.ஏ. குப்புசாமியோடு தோளோடு தோள் கொடுத்து தியாகிகளுக்குப் பென்ஷன் வாங்கித் தந்தவர். தேசப்பற்றும் தெய்வப்பற்றும் நிறைந்தவர். இவரைப் போன்றே இவர் தம் மக்களும் கொள்கைமாறாத இனப்பற்றும் மதப்பற்றும் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள்.

10. துள்ளான் என்ற துரைசாமிப் பண்ணாடி - துடிதுடிப்பான பேச்சாளர் என்பதைப் போல் நல்ல செயலாளராகவும் விளங்கியவர். புகழ் வாய்ந்த துள்ளாப்பண்ணாடி குடும்பத்தைச் சார்ந்தவர். இவர்தம் மக்கள் கல்வி கேள்வி, அறிவு ஒழுக்கம் பட்டம் பதவியில் உயர்ந்து விளங்குகிறார்கள். இவர்தம் தலைமகன், து. முருகராசு ஐ.ஏ.எஸ். இன்றைய தமிழ்நாடு அரசு தேர்வாணைக் குழுவின் பெருந்தலைவராவார். துரைசாமிப் பண்ணாடி காவலர் கையில் சிறைப்படாது தலைமறைவு வாழ்க்கையில் இருந்த போது, இவர்தம் அருமைத் துணைவியார் அலர்மேலு அம்மாளை சிறையில் இட, இவர் வந்து ஆசராகி, துணைவியாரை விடுவித்தவர். வயல் வளமள்ளராக விளங்கி, வாழ்வில் வளனும் வலனும் சேர்த்தவராவார்.

11. அந்தோணி அம்மாள் : இவர் பேரக்கா பேத்தி என்று அழைக்கப்படுகிறார். இவர் தம்பி எஸ். பாக்கியசாமிப் பண்ணாடி இந்திய தேசிய இராணுவத்தில் சேர்ந்து லெப்டிடென்ட் கர்னலாக இருந்து, கல்கத்தா மாதை கடி மணம் புரிந்தவர்.

அந்தோணியம்மாள் பெண் புலி என்று காவல் துறையால் வர்ணிக்கப்படுபவர். இவர் கோவை மத்திய சிறையில் 1 1/2 ஆண்டுகள் இருந்தவராவார். பங்கஜா மில்லில் பணியாற்றியவர்.

12. ஆரோக்கியசாமிப் பண்ணாடி இவர் ஆர்ப்பறிப்பின்றி அமைதியின் வழியில் போர்க்குரல் கொடுக்கும் புரட்சிப் புயலாவார். காந்திய வழியும், ஏசுவின் நெறியும் வாழ்வில் கைக் கொண்ட கிருத்துவ தேவேந்திரச் சாதியைச் சேர்ந்தவர். மேற்கொண்டு விளக்கம் கிடைக்கவில்லை.

13. ஆரோக்கிய மேரி : இவர் கிருத்துவ தேவேந்திர சாதியில் பிறந்தவர். ஸ்டேன்ஸ் மில்லில் பணியாற்றி 1942 விடுதலைப் போராட்டத்தில் கைது செய்யப்பட்டு கோவைச் சிறையில் 6 மாதம் தண்டனை பெற்றவர்.

14. கோவை இராமனாதபுரம் அருணாசலப் பண்ணாடி

15. கள்ளுமடை மாசாணன்

16. கள்ளுமடை காமாட்சி

17. செல்வபுரம் என்ற பள்ளபாளையம் ந. மருதாசலப் பண்ணாடி எம்.எல்.ஏ.

1942-ஆம் ஆண்டு "வெள்ளையனே வெளியேறு" சுதந்திரப் போராட்டத்தின் ஒரு கட்டமாக கோயமுத்தூர் சிங்காநல்லூருக்கும் போத்தனூருக்கும் இடையில் இரயில் தண்டவாளங்களுக்கும் இதர இரயில்வேக்கும் சொந்தமான சொத்துக்களுக்கும் சேதம் விளைவித்ததாக கோயமுத்தூர் தனிநீதிமன்றம் தனிநீதிபதி திரு. சி. சத்திநாராயணா சௌத்திரி பி.ஏ., பி.எல். அவர்கள் முன் ஒரு குற்றவியல் வழக்கு பதிவு செய்யப்பட்டு விசாரித்து தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது (மள்ளர் மலர், அக்டோபர், 1997).

தனி வழக்கு எண் 2/1942

குற்றம் செய்த நாள் : 13.8.1942

குற்றம் சாட்டப்பட்ட 58 பேர்கள் 3.9.1942 முதல் 26.9.1942 தேதிகளில் கைது செய்யப்பட்டார்கள். யாரும் ஜாமீனில் வெளிவிடப்படவில்லை. விசாரணை துவங்கிய நாள் 1.12.1942. விசாரணை முடிந்த நாள் 18.12.1942 தீர்ப்புக் கூறிய நாள் 21.12.1942.

குற்றம் சாட்டப்பட்ட 58 பேர்களின் சாதி விவரம் (தீர்ப்பில் உள்ளபடி)

| | | |
|---|---|---|
| மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் | : | 16 |
| கவுண்டர் | : | 9 |
| நாயக்கர் | : | 8 |

| | | |
|---|---|---|
| தேவர் | : | 6 |
| நாயுடு | : | 4 |
| செட்டியார் | : | 4 |
| கோனார் | : | 2 |
| முதலியார் | : | 2 |
| நாவிதர் | : | 2 |
| வண்ணார் | : | 1 |
| பிள்ளை | : | 1 |
| பண்டாரம் | : | 1 |
| நாயர் | : | 1 |
| சாதி குறிக்கப்படாதவர் (மள்ளர் என்று தெரிகிறது) | : | 1 |
| மொத்தம் | : | 58 |

குற்றம் சாட்டப்பட்ட 58 பேர்களில் ஒருவர் 50 வயது, ஒருவர் 38 வயது, இருவர் 35 வயது மற்ற 54 பேர்கள் 19 முதல் 30 வயதிற்குட்பட்டவர்கள் (1942 - இல்)

இவர்களில் மள்ளர்களின் விவரம்

1. திரு. நாச்சிமுத்து பண்ணாடி 25 வயது
2. திரு. முனியப் பண்ணாடி 30
3. திரு. அவநாசிப் பண்ணாடி 24
4. திரு. காமாட்சிப் பண்ணாடி 20
5. திரு. ஆறுமுகப் பண்ணாடி 20
6. திரு. வெள்ளியங்கிரிப் பண்ணாடி 22
7. திரு. ராஜாப் பண்ணாடி 20
8. திரு. ராமசாமிப் பண்ணாடி 21
9. திரு. கன்னிப் பண்ணாடி 23

(1 முதல் 9 சிங்காநல்லூரைச் சேர்ந்தவர்கள்)

10. திரு. காமாட்சிப் பண்ணாடி 50 வயது
11. திரு. சண்முகம் பண்ணாடி 29 வயது
12. திரு. ராஜூப் பண்ணாடி 35
13. திரு. கன்னிப் பண்ணாடி 19

(10 முதல் 13 வெள்ளலூரைச் சேர்ந்தவர்கள்)

14. திரு. வெங்கட்ராமப் பண்ணாடி 29
15. திரு. சின்னப்ப பண்ணாடி 35
16. திரு. சின்ன மாசானம் பண்ணாடி 20

(14 முதல் 16 கல்லுமடையைச் சேர்ந்தவர்கள்)

சாதி குறிக்கப்படாத திரு. பொன்னுச்சாமி சிங்காநல்லூரைச் சேர்ந்த தேவேந்திரர் என்று நம்பப்படுகிறது.

இவர்கள் மீது சாட்டப்பட்ட குற்றங்கள்

1. ஆர்ப்பாட்டம் (Rioting) - செக்சன் 147 குற்றவியல் சட்டத்தில் - 58 பேர்கள் மீதும்

2. இரயில்வே சொத்துக்கு சேதம் விளைவித்தல் செக்சன் 126 இந்திய ரயில்வேச் சட்டம் (Act IX of 1890) மற்றும் விதி 35 (1) (b) & (c) இந்திய பாதுகாப்பு விதிகள் - 3 பேர்கள் மீது. திரு. ராமராஜ் செட்டியார், திரு. நாராயணசாமி செட்டியார். திரு. வி.எஸ். ராமசாமி பிள்ளை.

3. இரயில் தண்டவாளங்களைச் சேதப்படுத்தியதற்கான கூட்டுப் பொருப்பு. செக்சன் 126 (b) இரயில்வே சட்டம் 1890 மற்றும் விதி 35 (1) a & b இந்திய பாதுகாப்புச் சட்டம். இரண்டாவது குற்றத்தில் உள்ள மூன்று பேர் தவிர மற்ற 55 பேர்கள் மீதும்.

தீர்ப்பு 1. முதல் குற்றத்தில் 14 தேவேந்திர குல வேளாளர்கள் உட்பட 43 பேர்களுக்கு 2 ஆண்டு கடுங்காவல் தண்டனை.

2. இரண்டாவது குற்றத்தின்படி குற்றம் சாட்டப்பட்ட மூவருக்கும் ஆயுள் தண்டனை.

3. மூன்றாவது குற்றத்தின்படி குற்றம் சாட்டப்பட்டவர்கள் மீதான குற்றம் நிரூபிக்கப்படவில்லை.

குற்றம் நிரூபிக்கப்படாமல் விடுதலை ஆனவர்களில் 15 பேர்களில் தேவேந்திர 2 பேர்கள், கவுண்டர் 6, தேவர் 1, நாயக்கர் 1, நாயுடு 3, செட்டியார் 1, வண்ணார் 1.

குற்றம் நிரூபிக்கப்பட்டு 2 ஆண்டு கடுங்காவல் தண்டனை பெற்ற 40 பேரில் தேவேந்திரர் 14, நாயக்கர் 7, தேவர் 5, கவுண்டர் 3, செட்டியார் 1, நாவிதர் 2, கோணார் 2, முதலி 2, நாயுடு 1, பண்டாரம் 1, நாயர் 1, சாதி குறிக்கப்படாதவர் 1, மொத்தம் 40.

குற்றம் சாட்டப்பட்டவரில் ஆயுள் தண்டனை பெற்ற 3 பேரில் செட்டியார் 2, பிள்ளை 1, மொத்தம் 3.

இந்த 1942 ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்ட கால வழக்கில் குற்றம் நிரூபிக்கப்பட்டு தண்டனை அடைந்த 43 பேர்களில் மள்ளர் எனும் தேவேந்திர குல வோளாளர் 14 பேர்கள் அதாவது மூன்றில் ஒரு பங்கினர். தேவேந்திரரை அடுத்து வருகிற நாயக்கர் தேவேந்திர எண்ணிக்கையில் பாதி, அதாவது 7 பேர்கள் மற்ற சாதிகளில் 1 முதல் 3 பேர்கள் தண்டனை பெற்றுள்ளனர். தேவேந்திரர்கள் சுதந்திரப் போராட்டத்தில் எத்தனை பெரும் பங்கு வகித்தனர் என்பதற்கு இந்த வழக்கு ஒரு சின்ன எடுத்துக்காட்டு.



# தேவேந்திர குல வேளாளரின் உணவுப் பழக்க வழக்கங்கள்

டாக்டர் சி. பரமேஸ்வரி
தமிழ்த்துறை, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-46

தமிழகத்தில் அரிசியே முதன்மை உணவாகும். அதனால் தமிழ்ப் பண்பாட்டை நெல் நாகரிகம் (Rice Culture) என்று குறிப்பிடுவர். தமிழகத்தில் வாழும் தேவேந்திர குல வேளாளர்கள் நெல் உற்பத்தியை முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழ்வதால் இம்மக்களின் உணவுப் பழக்க வழக்கங்களில் பெரிதும் நெல் சார்ந்த உணவு வகைகளே காணப் படுகின்றன. 50 ஆண்டுகளுக்கு முன்னர் தினை, கம்பு, குதிரை வாலி, கேப்பை, வரகு, சோளம், சாமை போன்ற தானிய வகைகள் பெரிதும் உணவுப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டன. இப்பொழுது இதனைப் பயிரிடுதல் அருகி வருவதால் இவர்களின் உணவுப் பழக்க வழக்கங்களிலும் இத்தானியங்கள் அருகியே வருகின்றன. இக்கட்டுரையில் மதுரை, திண்டுக்கல் பகுதி மக்களிடம் வழக்கில் உள்ள உணவு முறைகளையும், பருவநிலைச் சடங்கு உணவு வகைகளையும் முறைப்படுத்தி விளக்குகின்றது.

### உணவு வகைகள்

முதன்மை உணவு வகைகளில் சோறு, களி, கூழ் ஆகியன மூன்று நேரங்களிலும் உணவாக அமைகின்றன. துணை உணவாகக் குழம்பு, ரசம், தயிர், மோர், அவியல் போன்றன அமைகின்றன. இவற்றை இம்மக்கள் தயார் செய்து உண்ணுகின்ற முறையைக் காணலாம்.

### சோறு வகைகள்

நெல் அரிசியில் பச்சை அரிசி, புழுங்கல் அரிசி, என்ற இரு வகைகளில் புழுங்கல் அரிசியையே இம்மக்கள் விரும்பி உண்கின்றனர். புழுங்கல் அரிசி சூட்டைத் தணிக்கும் என்பதனால் உழைக்கும் மக்களான இவர்களுக்கு இதுவே ஏற்ற உணவாக அமைகின்றது. புழுங்கல் அரிசியில் தயாரிக்கப் படுவதையே சோறு என்று இம்மக்கள் அழைக்கின்றனர்.

பச்சை அரிசியில் தயாரிக்கப்படும் உணவை பச்சை நெல்லுக் கஞ்சி என்கின்றனர். இதல்லாமல் வரகு, குதிரை வாலி, இருங்குச் சோளம், சாமை, போன்ற தானியங்களையும் புழுங்கல் அரிசியாக்கி சோறாக்கி உண்ணுகின்ற வழக்கமும் இருக்கிறது. இவற்றிலும் பச்சை அரிசியில் கஞ்சியாகச் செய்து உண்பதும் உண்டு. பெரும்பாலும் இரவு உணவைத்தான் இவர்கள் சூடாக உண்பர். இரவில் மீதம் உள்ள

சோற்றை சோற்றுத் தட்டில் ஆறச்செய்து புளித்த நீர் விட்டு பழைய சோறு என்னும் பெயரில் காலையிலும், மதியத்திலும் உண்ணுகின்றனர். பச்சை அரிசிச் சோற்றில் உண்டது போக மீதம் உள்ளதை அகப்பையில் முகர்ந்து சோத்துத் தட்டில் உருண்டை வடிவில் ஆறவைத்து புளிநீர்ப் பானைக்குள் போட்டு பாதுகாத்து மறுநாள் உண்ணும் வழக்கமும் காணப்படுகிறது. இருங்குச் சோறச் சோளச் சோற்றில் பயறு வகைகளைச் சேர்த்து ஒருவகைச் சுவையான சத்துள்ள உணவு தயாரிக்கும் வழக்கமும் காணப்படுகிறது. இந்த உணவு வேளாண்மையில் அதிக வேலை இருக்கும் காலங்களில் தயார் செய்கின்றனர். இவ்வாறு தயார் செய்யப்படும் சோற்றில் இருக்கும் நீர் மிகச் சுவையாகவும் சத்துள்ளதாகவும் அமைகிறது.

**களி வகைகள்**

கேப்பை, சோளம், கம்பு ஆகிய தானியங்களை மாவாக்கி களியாகக் கிண்டி உண்ணும் வழக்கம் காணப்படுகின்றது. சோளம், கம்பு, ஆகியவற்றை உரலில் இட்டு இடித்து மாவாக்கி உடனே களியாகச் செய்வதால் இவற்றை அத்தக்களி என்று அழைக்கின்றனர். களியையும் சோறு போலவே மீதம் உள்ளவற்றை புளிநீரில் பாதுகாத்து மறுநாள் உண்ணுகின்ற வழக்கம் காணப்படுகின்றது.

**கூழ்**

அப்பொழுதே இடித்து அப்பொபதே புளிநீர் சேர்த்துக் காய்ச்சுவதை அத்தக்கூழ் என்றும், மாவைப் புளிக்க வைத்துக் காய்ச்சுவதைக் கூழ் என்றும் அழைக்கின்றனர். கம்பு, சோளம், கேப்பை, நெல் அரிசி போன்றவற்றை இடித்து புளிநீர் விட்டு கூழாகக் காய்ச்சி மறுநாள் உண்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். இவ்வாறான கூழ் உணவுதான் பெரும்பாலான கிராமங்களில் காலை உணவாக அமைகின்றன. கூழுடன் மோர் அல்லது தயிர் சேர்த்து உண்ணும் ஓர் எளிய உணவுப் பழக்கமாக இது அமைகிறது. கூழை நீர்விட்டுக் கரைத்துக் குடிப்பதுதான் பொதுவாகக் கூழ் அருந்துதல் என்று சொல்லப்படுகிறது. சோறு, களி, கூழ் ஆகிய மூன்று நிலையில் தயார் செய்கின்ற உணவே இம்மக்களிடம் காணப்படுகின்ற முதன்மை உணவாகும். நெல் இவர்களிடம் பெருமளவு இருப்பதால் பச்சரிசி மாவில் அரிசி கூழ் செய்யும் வழக்கம் பெரிதும் காணப்படுகிறது.

**குழம்பு வகைகள்**

இரவு நேர உணவில் குறிப்பாக சோறாக இருந்தால் பருப்புடன் காய் சேர்த்துக் குழம்பு செய்கின்றனர். காய் இல்லாமல் பயறு வகைகள் சேர்த்து வைக்கப்படும் குழம்பு பயறுக் குழம்பு ஆகும். இதல்லாமல் புளிக்குழம்பு, மோர்க்குழம்பு, வெந்தயக்குழம்பு, பச்சை மொச்சைப்

பயறுக்குழம்பு போன்றவையும் குழம்பு வகைகளாகும். கம்மஞ்சோறும் கருவாட்டுக் குழம்பும் ஒரு இணை உணவாகக் (Combination) கிராமங்களில் விரும்பி உண்கின்றனர்.

இதை

கம்மங்கஞ்சி கொதிக்குது
கருவாட்டு ஆனம் மணக்குது

என்ற சிறுவர் பாடல் குறிப்பிடும். களிபோன்ற உணவிற்கு பருப்புக் குழம்பும், கீரையும் இணை உணவாகக் கருதப்படுகின்றன.

"கேப்பக்களியும் கீரையும் ஒன்னு சேர்ந்தது மாதிரி' என்ற வழக்காறு இதனை உணர்த்தும். மழைக் காலங்களில் ஆறுகளில், குளங்களில் மீன்கள் வேட்டையாகக் கிடைத்தால் அவற்றைக் குழம்பாக வைத்து உண்பர். பச்சை அரிசிச் சோறுக்கு மீன்குழம்பு இணையான உணவாகக் கருதப்படுகிறது. கருவாட்டுடன் கத்தரிக்காய், மொச்சைப்பயறு சேர்த்துத் தயார் செய்கின்ற குழம்பு கருவாட்டுக் குழம்பு ஆகும். கருவாட்டுடன் வெங்காயம், மிளகாய் மட்டுமே சேர்த்துத் தயார் செய்யப்படும் குழம்பு கருவாட்டுச் சாறு ஆகும். கருவாட்டுடன் சோளமாவைச் சேர்த்து தயார் செய்வது கருவாட்டு ஆணம் என்று அழைக்கப்படுகின்றது.

### பருவநிலைச் சடங்கு உணவு வகைகள்

பிறப்பு முதல் இறப்பு வரை நடைபெறம் வாழ்வியல் சடங்குகளில் அச்சடங்கின் தன்மைக்கு ஏற்ப பல்வேறு உணவு வகைகளை இம்மக்கள் மேற்கொற்கின்றனர்.

### பிறப்புச் சடங்கு உணவு முறை

குழந்தை பெற்ற தாய்க்கு ஒவ்வொருநாள் காலையிலும் வெறும் வயிற்றில் கொடுக்கப்படும் உணவு காயங்கருப்பட்டி எனும் பேருகால உணவு தனித்தன்மையுடன் விளங்குகிறது. நல்லெண்ணை கலந்த கோழிக்கறிக் குழம்பு குழந்தை பெற்ற பெண்ணின் உடல் வலியைப் போக்கிச் சிராக்குகின்றது. இதல்லாமல் பேருகால ரசம், கருவாட்டுக் குழம்பு, என்ற வகையில் இடம் பெறும் உணவு வகைகளால் தாய்க்கு தாய்ப்பால் ஊறும் என்று நம்பப்படுகிறது.

### பூப்புச் சடங்கு உணவுமுறை

பூப்படைந்த பெண்ணிற்கு ரத்தப் போக்கை ஈடு செய்வதற்காக பால், முட்டை போன்றவற்றையும், உளுந்தங்களியில் நல்லெண்ணை கலந்தும் கொடுக்கின்றனர். சிற்றுணவாக எண்ணை கலந்து புட்டு

போன்றவற்றை சடங்கியல் உணவாகக் கொடுக்கின்றனர். இதல்லாமல் அசைவ உணவு வகைகளில் ஆட்டுக் கறி மற்றும் பல்வேறு உணவு வகைகள் விருந்து உணவாகச் சீராட்டுதல் என்ற பெயரில் உறவினர்களால் கொடுக்கப்படுகின்றன.

### திருமணச் சடங்கு உணவு முறை

திருமணச் சடங்கில் மரக்கறி உணவும், ஊன் உணவும் கொடுக்கப்படும். இப்பொழுது மரக்கறி உணவுகளே பெரிதும் திருமணச் சடங்கில் பரிமாறப்படுகின்றன. திருமண விருந்தில் வாழை (தலை வாழை) இலைப் போட்டு காய், கறி உணவுகளைப் பரிமாறும் போது முதலில் உப்பு, சர்க்கரை வைக்கின்றனர். இதன் பின்னர் பொரியல், அதன் பின்னர் சோறு வைப்பர். முதலில் சாம்பாரும் அடுத்து ரசமும் கடைசியில் மோரும் பரிமாறுவர். இறுதியில் பாயாசம் இடம் பெறுகிறது. வீடுகளில் நடைபெற்ற திருமணம் தற்பொழுது கலியாண மண்டபங்களில் நடைபெறுவதால் காலை, மாலை உணவுகளில் இட்லி, தோசை, ஊத்தப்பம் என்றவாறு நவீன உணவுகளும் விருந்தாக அமைகின்றன.

### இறப்புச் சடங்கு உணவு முறை

இறப்பு நடந்த வீட்டில் மூன்று நாட்களுக்கு உணவு சமைக்கும் வழக்கம் இல்லை. இறந்தவரைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்வதற்கு முன்னர் பயறு அவித்தல் என்ற சடங்கு செய்யப்படுகிறது. இறந்தவருக்கு பச்சை எனும் பெயரில் கொண்டு வரப்படும் நெல்லில் இருந்து அரிசி தயார் செய்து அதனை நீரில் ஊறவைத்து அவித்து கருப்பு மொச்சைப் பயிறு, அகத்திக் கீரை மற்றும் கருப்புக் கானப்பயறு ஆகியவற்றை கலந்து இழவிற்கு வந்துள்ள அனைவருக்கும் கொடுக்கின்றனர். இதனை வாங்கி உண்பதால் இறந்தவருடைய அருள் கிடைக்கும் என்று நம்பப்படுகிறது. இறந்து பட்டவரின் வீட்டார் கட்டாயம் இதனை உண்ண வேண்டும். இறந்தவரை அடக்கம் செய்த மறுநாள் இறந்தவருக்குப் பிடித்தமான உணவு வகைகளைப் படைத்து வழிபடும் வழக்கம் காணப்படுகிறது. இதனை அடுத்து தாய்மாமன் உறவுடையவர்கள் இறப்பு நடந்த வீட்டாருக்கு தலைக்கு எண்ணை தேய்த்துக் குளிப்பாட்டி விட்டு அசைவ உணவு தயார் செய்து படைப்பதைக் காண முடிகிறது. இதன் பின்னர் 11 ஆம் நாள் அல்லது 16 ஆம் நாள் நடக்கும் கருமாதிச் சடங்கில் இறந்து பட்டவரின் வீட்டாரால் கவுச்சி புழங்குதல் என்னும் பெயரில் கருவாட்டுக் குழம்பும், கறிக்குழம்பும் தவறாது இடம் பெறுகின்றன. இக்கருமாதிச் சடங்கில் பாயாசம் தவிர்த்து சோறு, ரசம், போன்றன விருந்து உணவாகும்.

### விழாக்கால உணவு முறைகள்

இம்மக்கள் தைப் பொங்கல், பங்குனிப் பொங்கல் (மாரியம்மன் வழிபாடு) குல தெய்வ வழிபாடு, மற்றும் ஆடி, தீபாவளி, கார்த்திகை போன்றவற்றை விழாவாகக் கொண்டாடுகின்றனர். கார்த்திகை, தைப் பொங்கல் தவிர்த்து மற்ற விழாக்களில் அசைவ உணவையே விரும்பி உண்கின்றனர்.

### உணவு விலக்கு

இம்மக்களிடம் உள்ள உணவு பழக்க வழக்கங்களில் உணவுப் பொருட்களின் இயல்பின் அடிப்படையிலும் உணவிற்குப் பயன்படும் விலங்கு மற்றும் பறவைகளின் குணநலன்கள் குறித்த நம்பிக்கையின் அடிப்படையிலும் பல உணவு விலக்குகள் நிகழ்கின்றன.

வல்லக் கொடியில் இம்மக்களின் மூதாயைர் தோனறினர் என்று நம்புவதால் இக்கிரையை உண்பதில்லை.

மாடுகளை தெய்வமாக வழிபடும் வழக்கமுடையவர்கள், மேலும் வேளாண்மைக்கு மாடுகளையே பல்வேறு வகைகளில் நம்பி வாழ்கின்ற குடிமக்கள் ஆகிய தேவேந்திரர் மாட்டுக்கறி உண்பதில்லை.

பன்றி மாமிசம் அசுத்தமானது என்பதால் உண்பதில்லை. வெள்ளி, செவ்வாய் கிழமைகளில் அகத்திக்கீரையை உண்பதில்லை. விருந்தினர் வருகையின் போது பாகற்காய் சமைப்பதில்லை. விழாக் காலங்களில் பயறுகள் அவிப்பதில்லை. திருமணங்களில் பயறு வகைகள் இடம் பெறுவதில்லை.

### முடிவுரை

இம்மக்களின் உணவு முறைகள் வேளாண்மையில் கிடைக்கும் தானிய வகைகளின் அடிப்படையில் அமைகின்றன. பெரும்பாலும் அரிசியே இவர்களின் உணவாக அமைவதைக் காணமுடிகிறது. அசைவ உணவுகளை விரும்பி உண்ணும் பழக்கமுடையவர்களாக உள்ளனர். மங்கல நிகழ்ச்சிகளில் பயறுவகைகளை பயன்படுத்துவதில்லை. பன்றி, மாடு, இவற்றின் இறைச்சிகளை இம்மக்கள் உண்பதில்லை. இவர்களின் உணவு வகைகள் எளிய முறையில் இருந்தாலும் சத்துள்ள உணவு வகைகளாக அமைவதைக் காணமுடிகின்றது.



## தேவேந்திர குல வேளாளர்களுக்கு உரிமையுடைய

# அழகர் கோயில் மற்றும் 18-ஆம் படிக் கருப்பணசாமி வரலாறு

முனைவர் குருசாமி சித்தர், B.E, M.Sc(Engg), Ph.D. (UConn - USA)
தலைவர், தமிழர் பண்பாடு, சமூக ஆய்வு மன்றம்,
கோயமுத்தூர் - 641 046.

விஷ்ணு, கண்ணன், அழகர், பெருமாள் எனப்படுகிற திருமாலின் தமையன் கருப்பணசாமி, பலராமனின் அவதாரம் ஆவார். சங்க இலக்கியமான பரிபாடலில் மூன்றாம் பாடலாக கடுவன் இளவெயினனார் திருமாலைப் பாடியுள்ளார். இதில் புலவர் திருமால் மள்ளர்/மல்லர் குலத்தவர் என்கிறார். திருமாலுடைய ஆற்றலை வருமாறு புகழ்ந்து பாடுகிறார்.

| | |
|---|---|
| நடுவுநிலை திறம்பிய நயமி லொருகை | வரி |
| இருகை மாஅல் | 35 |
| முக்கை முனிவ நாற்கை அண்ணல் | |
| ஐம்கைம் மைந்த அறுகை நெடுவேள் | |
| எழுகையாள எண்கை ஏந்தல் | |
| ஒன்பதிற்றுத் தடக்கை மன்பேராள | |
| பதிற்றுக்கை மதவலி நூற்றுக்கை யாற்றல் | 40 |
| ஆயிரம் விரித்த கைம்மாய மள்ள | |
| பதினாயிரங்கை முதுமொழி முதல்வ | |
| நூறாயிரங்கை ஆறறி கடவுள்' | |

'கைம்மாய மள்ளன்' திருமால் என அவரை மள்ளர் குலத்தவராகக் குறிப்பிடுவார். அதுமட்டுமல்ல, அவன் பொருதிறன் மல்லன், பெருவிறன் மள்ளனுமாவார் என்று குறிப்பிடுகிறார். திறன், விறன் என்பன மிகுந்த வலிமை மற்றும் மிகுந்த ஆற்றலைக் குறிக்கும் சொற்கள். பொருதிறன் என்பது போர் செய்யும் ஆற்றலையும் வலிமையையும் மிக்கவர் என்பதைக் குறிக்கும். அந்த வரிகள் வருமாறு

| | |
|---|---|
| மாயா மன்ன உலகாள் மன்னவ | |
| தொல்லியற் புலவ நல்லியாழ்ப் பாண | |
| மாலைச் செல்வ தோலாக் கோட்ட | |
| பொலம்புரி யாடை வலம்புரி வண்ண | |
| பருதி வலவ பொருதிறன் மல்ல | |
| திருவின் கணவ பெருவிறன் மள்ள | 90 |

திருமால் இலக்குமியின் கணவர் தோல்வியைக் கண்டறியாதவர். உலகத்தையே ஆளும் மன்னர், மாயோன்.

இந்தத் திருமால் தான் அழகர் என்னும் திருநாமத்துடன் மதுரைக்குப் பக்கத்தில் அழகர் கோயிலில் வீற்றிருந்து அருள் பாலித்து வருகிறார். இவருடைய தமையனான கருப்புசாமி பதினெட்டாம் படிக் கருப்பு என்று கோயிலின் இராஜகோபுரத் தலைவாசலில் இருந்து தமையனைக் காத்து வருகிறார். இக்கோயிலையும் தலைவாசலையும் நிறுவிய மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர் இத்தலைவாசல் பதினெட்டாம் படிக் கருப்பணசாமிக்கும் பூசை புனஸ்காரங்கள் செய்து தலைவாசல் வழியாக உட்சென்று அழகருக்கு வழிபாடுகள் செய்து வந்தனர்.

பதினெட்டாம் படிக் கருப்பன் எனப்படும் இந்தக் கடையர் (தலைவாயில் காப்போன்[2,3]) வரலாறு பற்றிய ஒரு தொன்மக்கதை வருமாறு[4].

சத்திக்கு மக்களாய்த் தவத்தில் உதித்துத் தானே பிறந்தவர்கள் ஏழு கருப்பணர்கள்.

1. சந்தனக் கருப்பன்
2. சங்கிலிக் கருப்பன்
3. காளாங்கிக் கருப்பன்
4. உச்சிக் கருப்பன்
5. ஊமைக் கருப்பன்
6. உருளு தேரடிக் கருப்பன்
7. பெரிய கருப்பன் (ஏழு பெருக்கும் எஜமான்)

கருப்பனருடைய சேனையில் ஐந்து மாடன்கள்,

8. அந்தி மாடன்
9. சந்தி மாடன்
10. ஆகாய மாடன்
11. சுடலை மாடன்
12. லாடனென்ற சன்னியாசி

ஆக மாடன் வகையில் ஐவர் இருந்தனர்.
கருப்பனர் ஏழு, மாடன் வகையில் ஐந்து ஆகப் பனிரெண்டுடன்

13. சங்கன்
14. சமையன்

என்ற இருவர்

15. சப்பாணி

16. சோணை

என்ற சமர்த்தர்கள்

17. வீரபத்திரனென்னும் அக்கினி வீரன்

18. அடங்காத இருளன்

என்ற வீரன் வகை இருவருடன் பதினெட்டுப் பேர்கள் இந்தச் சேனையில் இருந்தனர். இவர்களுக்குப் பெரிய கருப்பன் தான் எஜமான் என்னும் தளபதி. இந்தப் பதினெட்டுப் பேர்களுக்கும் சேர்த்துதான் பதினெட்டாம் படிக் கருப்பு என அழகர் கோயில் இராஜகோபுரத் தலைவாயிலில் மக்கள் வழிபாடு செய்து வருகிறார்கள். இங்கு தேவேந்திரர்கள் முதன்மையாகப் பூசை புனஸ்காரங்கள் செய்து வருகிறார்கள்.

இவர்களுடைய சேனை பதினெட்டுடன் பராசக்தியின் துர்க்கை என்ற ஒன்பது பிறவியிலே மூணு பிறவி ஆத்தாள் படிவாசல் சக்தி வல்லி பராரி ஆகிய அவள்

1. பேச்சி
2. இருளாயி
3. ராக்காயி

என்று பராசக்தியின் பிறவியில் 3 வகை. பதினெட்டும் மூணுங் கணக்கு பந்தி இருபத்து ஒன்று. அஞ்சிரண்டு ஏழு கருப்பணர்களுடன் பந்தி அடங்க மொத்தம் இருபத்தி ஒன்று. இருபத்தொரு பந்திக்கு அறுபத்தி ஒரு சேனை தளம். இவர்களை அடக்கி அரசாள ஐயன் குருநாதன் கருப்பணசாமி கம்மைகளைத் (எல்லை, க்த்வின் கம்பை) தானே வாகுடன் கட்டி கதை காத்து வர பிறந்த மக்களை எல்லாம் கூட்டிக் கொண்டு மலையாள நாடு மந்திர மகாராசன் கோட்டை வந்து தங்கியிருந்தார்கள். அதற்குக் கீழ்நாடு என்று பெயர்.

மலையாள நாட்டில் இருந்த தொட்டியன், தோக்கலியன், பேக்கலியன், கம்பளத்தான், துலுக்கர், காப்புலிய நாட்டார் கருப்பணசாமி சேனையின் ஆளுமை (சக்தி, உக்கிரம்) தாள மாட்டாமல் அவர்களை வேறு நாட்டிற்கு அனுப்ப கருவலப் பெட்டி தயார் செய்தார்கள். (வடுகருக்கும் தேவேந்திரருக்கும் அரசாட்சி செய்வதில் பகை என்று தெரிகிறது).

பன்னிரெண்டு ஆண்டுகள் பாரமழை இல்லாமல் பஞ்சம் போன பதிமூன்றாம் ஆண்டு நல்ல மழை பெய்து குடவனாறு, மலட்டாறு ஆகியவை தண்ணீர் வந்து பெருக்கெடுத்தது.

கருப்பணசாமியையும் அவரது சேனைகளையும் வைத்து ஆளமாட்டாமல் தொட்டியன், காப்புலியன் பழம் தேங்காய் உடைத்து திபதூபங் கொடுத்து பச்சரிசி பொங்கலிட்டு பொங்கல் தளிகை இருபத்தியோர் பேருக்கும் வைத்தனர். இதில் கருப்பனுக்கும் சோணைக்கும் தளிகை சரியில்லை என்று கருப்பனும் சோணையும் காப்புலியைக் கருவறுத்து, மலையாள நாடு கம்பளத்தை வேரறுத்து தோக்கலியனைக் கருவறுத்து தொட்டியனை வேரறுத்து அகரம் கருவறுத்து, மேல் மலையாளத்தில் அக்ரகாரம் கொள்ளையிட்டு பார்ப்பார் குடியைப் பறச்சேரியாக்கி வைத்து சிகரம் கருவறுத்து சிமையெங்கும் கொள்ளையிட்டனர்.

அதனால் பயந்த அவர்கள் கருப்பணசாமி உட்பட இருபத்தியொரு பேரையும் கருவலப் பெட்டியில் வைத்து வருச நாட்டு ஆற்றிலே தள்ளிவிட்டனர். தள்ளி விடப்பட்ட அப்பெட்டி வைகை நதி நீரில் மிதந்து வந்தது. மேற்கு மலை கடந்து, குன்னூர் பாலம் கடந்து, அண்ணஞ்சி தேவாரம், கூடலூர், கம்பம், வீரபாண்டி, பெரியகுளம், தேனி, சின்னமனூர், பேரணை, தேவதானப்பட்டி, சின்னவிளாம்பட்டி, பெரிய விளாம்பட்டி, குருவித்துறை, மண்ணாடி மங்கலம், இரும்பாடிப் பாலமாம் கருப்பட்டி, பண்ணிமூட்டி, பழைய மடைக்கேணி, தென்கரைப்பாறை, அகிலாண்டேஸ்வரி கோயில், ஆத்து வடபாலம், கரைமேடு, முள்ளிப்பள்ளம், இளந்தாரி வாசல், சோழவந்தான், தச்சம்பத்து, தேனூர், திருவேடகம், சமணர் கழுவேற்றப்பட்ட மேலக்கழுவு மேலக்கால் பாலம், கீழ்மாத்தூர், மேல் மாத்தூர், சாலைக்கரை, ரெட்டைவாய்க்கால் மூலை, பல்லவராயன் சேரி, பழைய கீழ் மூலை, படுகைமேல் பொன்னாணை, ஆரியதுபாளையம் (ஆரப்பாளையம்), கீழ்பாரிசம், திருப்பரவை, புட்டு நல்லதோப்பு, பூங்காவனச் சோலை, பொன்னகர மூலை, மணிநகர எல்லை மாதாள் தலைவாசல், மதுராபுரிக் கோட்டை மங்கை மீனாம்பாள் தலைவாசல், ஆனைக்கல்லு மூலை, ராவுத்தன் பேட்டை, அனுப்பானடி, தெப்பக்குள மூலை, அயிலானூர், வெரகனூர், வண்டியூர், கோழிமேடு, சிலைமான் புளியங்குளம், மணலூருக்கோட்டை காளி தலைவாசல், தட்டான் குளம், தில்லைவனம், முல்லை வனம், திருப்புவனப் பூமி, பூவணாலிங்கம், கள்ளி வலசை கழுவேத்தான் பொட்டல், மடப்புறம், லாடனேந்தல், இராமநாதபுரம் ஜில்லா, ராசசிங்க மங்கலம் வழியாக சேதுபதி நாடு, சிவகங்கை பூமி மார்நாட்டு செங்கமடைக் குழியில் பொட்டி தங்கி நின்றது.

"தங்கின மடைக்குழி மார்நாட்டுஎல்லை
ரெண்டு மடைப் பாசனம்
செங்கமடையிலே சேதுபதி நாட்டில்
பொட்டி சிறப்பாகத் தங்கி நிற்க

விலத்தூர் மடையும் கூம்புமடையும்
அந்தப் பெரிய மடையாம் பேர் போன மடையடுத்து
சின்ன மடையாம் செங்கமடைக் குழியில்
பெட்டி தங்கி நிற்க"

அங்கு வயலில் நெற்களை எடுத்துக் கொண்டிருந்த பள்ளிமார்களில் கச்சனேந்தல் பள்ளி கருப்பாயியும் கலப்பை கட்டி ஏர் உழுது கொண்டிருந்த காலாடிக் குடும்பனாரும் ஆளுக்கொரு பக்கம் கைபோட்டு இருபத்தியோர் பேர் கொண்ட கருப்பன் பெட்டியைத் தூக்கி எடுத்தனர். கச்சனேந்தல் பள்ளியும் காலாடிக் குடும்பனாரும் கருப்பனை மார்நாட்டுப் பொன் கருப்பு, வடமுகம் கருப்பு, மார்நாட்டுச் சாமி, மார்நாட்டு வேங்கைசாமி என்று அனுதினமும் தொழுது வளர்த்து வந்தனர். இதுபற்றி கதைப்பாடல் கூறுவது,

தோடாத் திரவியமே கச்சனேந்தில் பள்ளி வளர்த்த
எங்க கடவுளாம் மார்நாடு காணி கருவலமே
உன்னை கடுகி எடுத்து கருணையுடன் வளர்த்த
அல்லும் பகலும் அறுபது நாளிகையும்
வயலோ தலகாணி வாமடையோ பஞ்சுமெத்தை
கதிரோ தலகாணி கலுங்கடியோ பஞ்சு மெத்தை
கலுங்கு மேல் அமர்த்தி வைத்துக் கச்சனேந்தல்பள்ளி கடுகிவளர்த்து
காலாடிக் குடும்பன் தேங்காய் பழம் உடைத்துத் தீபதூபம் கொடுத்து
வணங்கி வரும் நாளையிலே பூமிக்குச் சாமி மார்நாட்டு வங்கை

மள்ளர் என்னும் தேவேந்திரர் கணப்பொதும் மறவாமல் வயலிலும், வாமடையிலும், கதிரிலும், கலுங்கிலும் எங்கிருந்தாலும் மார்நாட்டு கருப்புச்சாமியை மனதில் இருத்தி அவரை வாழ்த்தி வாழ்ந்து வருகின்றனர்.

மருதநில மக்களான மள்ளரில் ஒரு பிரிவினர் இந்தக் கருப்புச்சாமியையும் அவரது சேனையினரையும் அழகர் கோயில் இராஜகோபுரத் தலைவாசலில் நிறுத்தி, அழகரின் வாயில் காப்போராக வைத்து அவர்களுக்கு பழம், தேங்காய், திபதூபங்கள் செய்து வணங்கி பின்பு தலைவாசல் வழியாக உட்சென்று அழகருக்கு வழிபாடு செய்கின்றனர்.

"அழகர் கோயில்" பற்றிய தம்முடைய நூலில் கோனார் சாதியைச் சேர்ந்த ஆய்வாளர் முனைவர் தொ. பரமசிவன் கோனாருக்கும் கள்ளர்களுக்கும் இக்கோயிலில் உள்ள உரிமைகளையும் சிறப்புகளையும் விரிவாகக் கூறுகிறார். இவைகள் மதுரை வடுக மன்னன் திருமலை நாயக்கன் காலத்தில் பெற்றவைகள் என்பதும் புலப்படுத்தப்படுகிறது.

இந்நூலில் மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர் சம்பந்தப்பட்ட கிழ்கண்ட செய்திகள் உள்ளன.

1. இத்தலத்து இறைவனான அழகரை இந்திரனாக உருவகிக்கிறது அழகர் கிள்ளி விடு தூது என்ற நூல்.

2. அழகர் கோயில் நிர்வாக அமைப்பான 'ஆண்டார்' என்ற இருவகைப் பிராமணப் பணியாளர்களுக்கு அடியார் மற்றும் பிரதிநிதிகளாக பதினெட்டு சமயத்தார் உள்ளனர். இவர்கள் ஆண்டாருக்கு மந்திரிகளாகவும், தளபதிகளாகவும் செயல்படுவர். தாம் வாழும் பகுதி மக்களை வைணவ நெறிக்குள் அழைத்து வந்து ஆண்டாரைக் குருவாக ஏற்கச் செய்வதும் அடியாராகச் செய்வதும் 'சமயத்தார்' பணியாகும்.

இவர்கள் பதினெட்டுபேர்கள் எனச் சொன்னாலும் தற்போது 14 பேர்களே உள்ளனர். இவர்களில் நான்கு பேர் மள்ளர் குலத்தினர்.

1. சுந்தரராசன்பட்டி சமயத்தார் (பொக்கன்தாதன்)
2. காரைச்சேரி சமயத்தார்
3. எட்டி மங்கலம் சமயத்தார் (சக்கன் தாதன்)
4. முடுவார்பட்டி சமயத்தார் (கோவிந்தன்)

மற்ற சமயத்தார்களில் ஒருவர் நாயுடு, இருவர் பறையர், ஒருவர் கள்ளர், ஐவர் கோனார் ஆவார்.

முடுவார்ப்பட்டி சமயத்தார்க்குரிய ஊர்கள் : திருப்பாவை, பிள்ளையார் நத்தம், புதுப்பட்டி, ஐயூர், ஏர்ரம்பட்டி, கோணப்பட்டி, பாலமேடு, வலையப்பட்டி, லிங்காவடி, பெத்தாம்பட்டி, மாலைப்பட்டி, வெளிச்சநத்தம், பரளி, சத்திரப்பட்டி, சின்னப்பட்டி, காவனூர், கடுவனூர், சோழனம்பட்டி, குளமங்கலம், வடுகபட்டி, தூதக்குடி, குமாரம், பளஞ்சி, அலங்காநல்லூர், கல்லணை, ஊர்சேரி, மேட்டுப்பட்டி, அம்பட்டபட்டி, சேலார்பட்டி, பூலாம்பட்டி, முடுவார்பட்டி உள்ளிட்ட 48 கிராமங்கள்.

காரைச்சேரி சமயத்தார்க்குரிய ஊர்கள் : வரிச்சியூர், பறையன்குளம், ஆளவந்தான், குன்னத்தூர், வேலூர், களிமங்கலம், சக்கி மங்கலம், உடண்குண்டு, ஆண்டார் பட்டினம், கருப்பாயி ஊரணி, கோயில்குடி, எலமனூர், போட்டப் பனையூர், புதூர், மயிலங்குண்டு ஆகிய ஊர்கள்.

3. பதினான்கு சமயத்தார்களும் ஆடித் திருவிழாவில் கடைசி நாளன்று ஆண்டாரிடம் பரிவட்ட மரியாதை பெறும் உரிமையுடையவர்கள்.

4. கி.பி. 1775-ஆம் ஆண்டுக்குப் பிறகு தான் தேரிழுக்கும் உரிமை கள்ளருக்கு வழங்கப்பட்டது.

5. மதுரை சித்திரைத் திருவிழா விழாவில் கள்ளழகராகக் கள்ளர்

வேடமிட்டு ஆடுவோரின் (1979 கள ஆய்வு) சாதிவாரிக் கணக்கு கோனார் 32%, தேவேந்திரரும் பறையரும் சேர்ந்து 28%, சேர்வை 14%, தேவர் 7%, பிள்ளை 5%, வலையர் 4%, சந்தனக்குறவர் 3%, சக்கிலியர் 3%, ஆசாரி 2%, நாயுடு 2%, நாட்டுக் கள்ளர் 1%, செட்டியார் 1%, நாயக்கர் 1%, வேளார் 1%. இவர்களின் திரியெடுத்தாடுவோர் 32%, திரியின்றி ஆடுவோர் 5%, துருத்திநீர் தெளிப்போர் 63%.

6. அழகர் ஆற்றில் இறங்கிய அன்று இரவு வண்டியூர்ப் பெருமாள் கோயிலில் தங்குவார். ஆண்டார் அங்கு காரைச்சேரி சமயத்தார் (தேவேந்திரர்) அமைத்துத்தரும் கொட்டகையில் தங்குவார்.

7. அழகரின் தெப்பக்குளம் தேவேந்திரர் வாழும் பொய்கைக் கரைப்பட்டியில் உள்ளது.

## பதினெட்டாம் படிக் கருப்பணர்

பதினெட்டாம் படிக் கருப்பணர் பற்றிய விழாச் செய்திகளும் வரலாறும் நூலாசிரியரின் கோனார் சார்பு நிலையத் தெரிவிக்கின்றன. பதினெட்டாம் படிக் கருப்பணர் பற்றிய மூன்று வர்ணிப்புப் பாடல்கள், பதினெட்டாம் படிக் கருப்பன் உற்பத்தி வர்ணிப்பு, கருப்பன் பிறப்பு வளர்ப்பு வர்ணிப்பு, கருப்புசாமி சந்தனம் சாத்தும் வர்ணிப்பு மற்றும் தொடர்புடைய ராக்காயி வர்ணிப்பு ஆகிய நான்கு கதைப் பாடல்கள் "அழகர் கோயில்" நூலில் பிற்சேர்க்கையில் எடுத்துக்காட்டப்பட்டு உள்ளன.

இவைகளில் மூன்று தேவேந்திரர் கருப்பணரை நிறுவிய வரலாற்றை உறுதி செய்கிறது. மலையாளத்திலிருந்து வந்த கருப்பணர் என்கிறது. ஆனால் நூலசிரியர் முனைவர் பரமசிவன் இதை நூலில் சிறிதும் காட்டாமல் ஒவ்வாத கோனார் தொடர்புடைய கதையை மட்டும் உள்ளே கூறுகிறார். பதினெட்டுத் திருடர்களை பலியிட்டு இராசகோபுரம் முன்பு புதைத்ததால் திட்டாக கதவு மூடப்பட்டுள்ளது என்கிறார்[5]. ஆனால் சக்கரத்தாழ்வாருக்கு மட்டும் ஆண்டுக்கு ஒரு முறை கதவு திறந்து வழிவிடப்படும் என்கிறார். தேவேந்திரர் கதவுக்கு பூசை செய்வதை முழுவதுமாக மறைத்துள்ளார்.

மேலும் மற்ற சாதிகளை அடைமொழி இல்லாமல் சாதிப் பெயர் குறிப்பிட்டு கோனார், கள்ளர், வலையர், நாயுடு, சக்கிலியர் என்று அழைக்கும் போது தேவேந்திரர் மற்றும் பறையரை அரிசன் என்று மொத்தமாகவும், தாழ்த்தப்பட்டவர் என்றும் குறிப்பிடுவது ஆய்வு நெறிக்குட்பட்டது அல்ல. தேவேந்திரருக்கும் பறையருக்கும் பண்பாட்டில் எந்தவித ஒற்றுமையும் தொடர்பும் இல்லை.

இக்கோயில் சமணக் கோயிலாக இருந்து அழகர் கோயிலாக ஒரு

காலத்தில் மாற்றப்பட்டது என்று குறிப்பிடுகிறார். தமிழகத்தில் களப்பிரரை விரட்டி மீண்டும் தமிழ் மள்ளராட்சி நிறுவியவர் கடுங்கோன் மள்ளர் என்ற பாண்டியர் (கி.பி. 6-ஆம் நூற்றாண்டு.) பின்பு தமிழகத்தில் தோன்றிய சைவ, வைணவ சமயங்கள் எழுந்து புத்த, சமண சமயங்களை ஒடுக்கி வீழ்த்தியது. நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றி சைவ, வைணவ சமயங்களை நிலை நிறுத்தினர். அறுபத்து மூன்று நாயன்மார்களில் பதினெட்டுப் பேரும்[6], பன்னிரண்டு ஆழ்வார்களில் சிலரும் மள்ளரெனும் தேவேந்திர குல வேளாளர் சமூகத்தைச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள்.

பின்பு 13-ஆம் நூற்றாண்டு தொடங்கி பிறமொழிக்காரர் படையெடுத்து வந்து தமிழரை ஒடுக்கி 16-ஆம் நூற்றாண்டில் தமிழகம் முழுவதையும் கைப்பற்றினர். இந்தக் காலத்தில்தான் மதுரை வடுகர் ஆட்சி காலத்தில் கள்ளரும், கோனாரும், நாயுடுகளும் ஒரு சில உரிமைகளைப் பெறுகின்றனர். இதற்கு முன் உரிமை பெற்றிருந்த தேவேந்திரர் ஒடுக்கப்படுகின்றனர். அவர்களின் இராச கோபுரத் தலைவாசல் கதவுகள் மூடப்படுகின்றன.

அழகர் கோயில் இராச கோபுரக் கதவு போல மதுரை மீனாட்சி கோயில் மேற்கு வாசல், திருவில்லிப் புத்தூர் ஆண்டாள் கோயில் மேற்கு வாசல், திருநெல்வேலி நெல்லையப்பர் ஆலய மேலவாசல், ஸ்ரீவைகுண்டம் கண்ணபிரான் ஆலயத்தில் மேலவாசல் முதலிய பல தமிழகக் கோயிற் கதவுகள் மூடப்பட்டிருப்பதற்கும் தேவேந்திரர்கள் ஆட்சி இழந்ததற்கும் நிறையத் தொடர்புகள் உள்ளன. இந்தக் கோபுர வாசல்கள் மன்னர் மரபினரான மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்களுக்கு மட்டும் பாத்தியப்பட்டு இருந்தது. அவர்கள் வடுக நாயக்கர்களால் ஆட்சி பறிக்கப்பட்ட பிறகு அந்தச் சிறப்பு உரிமையை மறுக்கும் வண்ணம் இந்தக் கோபுர வாசல்கள் மூடப்பட்டுள்ளன[7]. ஆய்வாளர்கள் இனிமேல்தான் இதன் வரலாறுகளை ஆய்ந்து வெளிக் கொண்டு வரவேண்டும்.

## சான்று நூல்கள்

1. பரிபாடல் - மூன்றாம் பாடல் வரிகள் 34-43, 85-90
2. சிலப்பதிகாரம் - கடலாடு காதை வரி 62-63

   "வயலுழை நின்று வடக்கு வாயிலில்
   ஐயிராணி மடந்தை ஆடிய கடையமும்"

3. கொங்கு வேளாளரின் பெருங்கதை உஞ்சைக்காண்டம் கரடு பெயர்த்து வரி 81-82

   "மடையரும் மகளிரும் மள்ளரும் அமைச்சரும்

கடையரும் கணக்கரும் காப்பரும் உள்ப்பட"

மடையர் மள்ளரில் மடைத் தொழில் பார்க்கும் நீராணிக்கர், கடையர் காக்கும் மள்ளர்.


4. "அழகர் கோயில்" என்னும் தலைப்பில் புத்தகமாக வெளியிடப்பட்டுள்ள பேராசிரியர் முனைவர் தொ. பரமசிவன் (தமிழ்த் துறைத் தலைவர், மனோன்மணிம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி) அவர்களின் முனைவர் பட்ட ஆய்வேடு.

5. முனைவர் மு. பாண்டி - "மாறைநாட்ட கருப்பணசாமி" தமிழர் பண்பாடு சமூக வரலாறு, தொகுப்பு 2, 1999, பக்கம் 14-22, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2, நால்வர் நகர், கல்வீரம்பாளையம், கோயம்புத்தூர் 641 0-46.

6. கலா ரத்னவேல், தேவேந்திர வேளாளரும் நாயன்மார்களும், வெளியீடு இராசஇராச சோழன் பேரவை, மதுரை

7. இரா. தேவ ஆசிர்வாதம், பாட்டாளி முழக்கம் ஆகஸ்டு, 1998 பக்கம் 16 - 18.




# நீர் நிலைகளில் மள்ளர்களின் பங்கு

- த. அய்யனார் M.A.
இந்தியன் வங்கி, வெரைட்டிஹால்ரோடு
கோயமுத்தூர் 641 001.

கல்தோன்றி மன்தோண்றாக் காலத்தே வாளோடு
முன் தோன்றிய மூத்தகுடி

என்று உழக்குடியான மூத்த தமிழ்க்குடியை இலக்கியம் கூறும்.

வாள் என்ற சொல்லுக்கு வீர மறவர்கள் போர்க்களத்தில் எதிரிகளின் உடலைக் கிழிப்பதற்கு பயன்படுத்தும் ஆயுதத்திற்கு "வாள்" என்று கூறுவர்.

ஏர்க்களத்தில் உழவர்கள் தம் ஏர்க் கலப்பையில் மண்ணைக் கிழிப்பதற்கு பயன்படுத்தும் ஆயுதத்திற்கு "வாள்" (கொழு) என்று கூறுவர்.

இவ்வாளோடு தோன்றியவர்கள் மூத்த தமிழ் குடிகளே. இலக்கியங்களில் உழக் குடியான மூத்த தமிழ் குடிகள் யார் என்று தேடும்பொழுது 'மள்ளர்களே' (தேவேந்திர குல வேளாளர்களே) என்பது கிழ்காணும் பாடல்களின் மூலம் காண முடியும்.

அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்னி

- திவாகர நிகண்டு

செருமலை வீரரும் திண்ணி யோரும்
மருதநில மக்களும் மள்ளர் என்ப

- பிங்கல நிகண்டு

இலக்கியத்தில் பேசப்பட்ட மள்ளர்கள் தான் இன்றைய 'தேவேந்திர குல வேளாளர்கள்' என பல ஆய்வு நூல்களும் பண்டைய கால கல்வெட்டுக்களும் உறுதி செய்கின்றன.

**கல்வெட்டுக்கள் (மள்ளர் மலர் நவம்பர் 1999 முதல் ஜூலை 2000)**

1. சத்திமல்லி வளநாட்டு பாம்புணிக்கிழான் மல்லாண்டனான சேரகோன் திருநாமத்துக் கணியாகக் குடுத்த நிலம்
2. மல்லர் குல குஞ்சிரமல்லன் பெருவழி, குஞ்சிரமல்லன் காடன், குஞ்சிர மல்லன திருமால், மள்ளர் ஸ்ரீ ராஜேந்திர சோழதேவர் (16-வது - ஆண்டு கல்வெட்டு)
3. கரைகாரர், கரையாளர் பட்டம் பெற்ற தேவேந்திரர்கள்

4. கல்வெட்டில் மள்ளர்/மல்லர் குலம்
5. தொண்டையார் கோன் மலர் குலம்
6. கி.பி. 25.6.1462 கல்வெட்டு
தேவேந்திர குலத்தினரின் பொன் ஏர் விழா

**மள்ளரும் உழவுத் தொழிலும்**

இலக்கிய காலத்து மள்ளர்களின் தொழில் 'உழவுத் தொழில்'. அதேபோல் இன்று உள்ள 'தேவேந்திர குல வேளாளர்களின்' (மள்ளர்), தொழிலும் உழவுத் தொழிலாகவே இருந்து வருவதை நாம் காண்கின்றோம். இம்மக்களுக்கு நீரின் மீது மிகுந்த பாசமும், மரியாதையும் இருந்து வருகிறது.

தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழித்தல் கூடாது என்ற பழமொழி இம்மக்களிடம் காணப்படுகிறது.

இலக்கியத்தில் எட்டுத்தொகை நூல்களுள் முதலாவதாக இடம்பெற்றுள்ள நூல் "நற்றினை". இதில் பழந்தமிழ் நாட்டின் ஆட்சிமுறை, கொடை வளம், மக்களிடையே நிலவிய மொழிப்பற்று, அம்புடைமை, அருள் உள்ளம் முதலியவற்றைப் பற்றியும் ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றது. பண்டைய தமிழ் மன்னர்கள், அதியமான் முதலிய வள்ளல்கள் பற்றிய சிறப்புகளும் இந்நூலில் காணப் பெறுகின்றன. திணைகளில் ஒன்றான மருதத்தை விளக்கும் பொழுது வயலும், வயல் சார்ந்த இடமும் இதனுடைய நிலம் என்பதாக மருதத்தின் கருப் பொருள்களாக

| | | |
|---|---|---|
| தெய்வம் | - | இந்திரன் |
| மக்கள் | - | உழவர், உழத்தியர் |
| ஊர் | - | பேரூர், மூதூர் |
| யாழ் | - | மருத யாழ் |
| பண் | - | மருதப்பண் |
| தொழில் | - | களை பறித்தல், நெல் அறுத்தல் |

இன்றைய தேவேந்திர குல வேளாளர் மக்கள் இந்திரன், தேவேந்திரனுக்கு கோவில்கள் கட்டி வழிபடுகிறார்கள். அன்றைய இலக்கியகால மள்ளர்களும், இன்றைய தேவேந்திர குல வேளாளர்களும் தமது குடியிருப்புக்களை நீர் நிலைகள் உள்ள நதிகள், ஆற்றின் கரைகள், கண்மாய், குளங்களின் ஓரங்களிலும் குடியிருப்புக்களை அமைத்து வாழ்கிறார்கள்.

ஆற்று நீரை கண்காணிப்பதிலும் கண்மாய்களின் நீரை வயல்களுக்குப் பாய்ச்சுதலும் அன்றுமுதல் இன்று வரை இம்மக்களுடைய உரிமையாக இருந்து வருகிறது. இவர்களை நீராணிக்காரர், வாய்க்காரர், மடைக் குடும்பர், குளத்துப் பள்ளர் என்ற பெயர்களில்

அழைப்பார்கள். இதனை ஒர் ஆய்வின் மூலம் விளங்கச் செய்யலாம். ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட இடம் : விருதுநகர் மாவட்டம்

**ஆய்வின் ஆறு : காயக்குடி ஆறு**

இந்த ஆறு மேற்குத் தொடர்ச்சி மலையில் இராஜபாளையத்திற்கும், இடையன்குளம் என்ற ஊருக்கும் இடையே உற்பத்தியாகி கிழக்கு நோக்கி பாய்ந்து வங்கக் கடலில் கலக்கிறது. கடலில் கலப்பதற்கு முன் பல ஊரின் வழியாக பாய்ந்து பல கண்மாய்களை (குளம்) நிரப்பிச் செல்கிறது.

**இந்த ஆறு கடந்து செல்லும் ஊர்கள்**

| ஊர் | கண்மாய் | குடியிருக்கும் மக்கள் | ஊர் மக்கள் தொகையில் மள்ளர் |
|---|---|---|---|
| இராஜபாளையம் | - | மள்ளர் | 75% |
| இடையங்குளம் | இடையங்குளம் | ( ) மள்ளர் | 100% |
| வன்னியம்பட்டி | வன்னியம்பட்டி | மள்ளர் | 100% |
| இலட்சமியாபுரம் | இலட்சுமியாபுரம் | மள்ளர் | 100% |
| அழகு தேவேந்திரபுரம் | துலுக்கன்குளம் | மள்ளர் | 100% |
| பிள்ளையார் குளம் | பிள்ளையார்குளம் | மள்ளர் | 50% |
| இராமகிருஷ்ணாபுரம் | பிள்ளையார்குளம் | மள்ளர் | 100% |
| வேப்பங்குளம் | வேப்பங்குளம் | மள்ளர் | 25% |
| செந்நெல்குளம் | செந்நெல்குளம் | மள்ளர் | 75% |
| கரிசல் குளம் | கரிசல் குளம் | மள்ளர் | 100% |
| அத்தி குளம் | அத்திகுளம் | மள்ளர் | 75% |
| அச்சம்தவி ழ்த்தான் | அச்சம்தவி ழ்த்தான் | மள்ளர் | 50% |
| கோடாங்கிபட்டி | கோடாங்கிபட்டிகண்மாய் | மள்ளர் | 100% |
| பளையாபுரம் | சிறுகுளம் | மள்ளர் | 100% |

**தொகுப்புரை**

இவ்வாறு ஆற்றங்கரைகளிலும் நீர் நிலைகளின் அருகிலும் வாழ்கின்ற தேவேந்திர குல வேளாளர்கள் என அழைக்கப்படும் மள்ளர்கள் நாட்டில் நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்தவர்கள். இம்மள்ளர்கள் முதன்முதலாக ஊர்கள் ஏற்படுத்தி குடும்பு முறையை நாட்டிற்கு அறிமுகப்படுத்தியவர்களாவர். பின்பு ஆட்சி முறைகளை ஏற்படுத்தி குடவோலையின் வாயிலாக நாட்டிற்குத் தேர்தல் முறையை அறிமுகப்படுத்தி நாட்டை சீரும், சிறப்புமாக ஆட்சி செய்து வந்துள்ளார்கள்.



## மள்ளர் குல மாணிக்கம்
# பிச்சைமுத்துத் தேவேந்திரர்

புலவர் மாரிமுத்து மள்ளனார், M.A.
ஆசிரியர், குள்ளம்பட்டி, ஸ்ரீராமபுரம்,
திண்டுக்கல் மாவட்டம்

முன்னுரை

உலகில் மாந்தர் தமக்கு நன்மைகள் செய்து நற்புகழ் அடைபவர் ஒருவகை. மனித குலத்திற்கு தீமைகள் புரிந்தே புகழ் பெறுபவர் இன்னொரு வகை. குறைகள் சொல்லியே புகழ் சேர்ப்பவர் மற்றொரு வகை. ஆக மூன்று வகைகளில் புகழ் ஏணியில் நிற்பவர்களை உலகில் காண்கிறோம்.

இந்த மூன்று வகை மனிதர்களில் முதல் வகை மனிதரால் மாந்தர் பயன்கள் அடைகிறார்கள். அதனால் மானிடர் அவர்களைப் போற்றுகின்றனர். அந்த மாமனிதர்கள் மக்கள் நெஞ்சங்களில் வாழ்கின்றனர். காலப்போக்கில் அவர்கள் குமுகாயத்தால் கடவுளாக வணங்கப்படுகிறார்கள். இந்த இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்பவர்தான் அமரர் தியாகி பிச்சைமுத்து தேவேந்திரர் ஆவார்.

**சுப்பையாத் தேவேந்திரர்**

பிச்சை முத்து தேவேந்திரரின் தந்தையின் பெயர் சுப்பையாத் தேவேந்திரர். தாயின் பெயர் பழனியம்மாள் மள்ளத்தியார். இவர்களுக்கு ஆறு குழந்தைகள் பிறந்தனர். பிச்சை முத்துத் தேவேந்திரர் இவர்களுக்கு மூன்றாவது குழந்தை. இவருக்கு அக்காள் ஒருவர், அண்ணன் ஒருவர். தம்பியர் இருவர். தங்கை ஒருவர் ஆவர்.

சுப்பையா தேவேந்திரர் அவர்கள் மிகச்சிறு விவசாயிகளில் ஒருவர். ஒரு ஏக்கர் தோட்டத்திற்கும் அரை ஏக்கர்க் காட்டுக்கும் சொந்தக்காரர். அவருடைய வீடோ குடிசை, வருமானமோ குறைவு. குழந்தைகளோ அதிகம். தன் தோட்டத்து வேலைகளைத் தவிர வேறு வேலைகளுக்குப் போகமாட்டார். ஆனால் பழனியம்மாள் மள்ளத்தியார் கூலி வேலைக்குச் சென்று தன் குழந்தைகளை கண்ணும் கருத்துமாய் வளர்த்தார்.

சுப்பையாத் தேவேந்திரரின் சொந்த ஊர் செம்பட்டிக்குத் தென்புறத்திலுள்ள கூலம்பட்டியாகும். இது திண்டுக்கல் மாவட்டத்திலுள்ள நிலக்கோட்டை வட்டத்தில் உள்ளது. இந்த ஊரில் கி.பி. 1921 ஆம் ஆண்டு பிச்சை முத்துத் தேவேந்திரர் பிறந்தார்.

## பிச்சை முத்து பிறந்த காலத்தில் அந்த வட்டாரத்தில் உள்ள மள்ளர் குல மக்களின் வாழ்க்கை நிலைமை

கூலம்பட்டியில் மள்ளர் குலத்தைத் தவிர வேறு குலத்தினர் கிடையாது. இங்குள்ள எல்லோரும் நிலங்கள் உடையவராக இருந்தனர். ஆனால் வறுமையாலும் பஞ்சத்தாலும் தங்கள் நிலங்களை ரூபாய் 100க்கும் 200க்கும் விற்றுவிட்டனர். அடுத்து வந்த பரம்பரையினர் சிறுசிறு துண்டு நிலங்களுக்குச் சொந்தக்காரர்களாகவும் பாட்டாளிகளாகவும் விளங்கினர். அவர்களின் நிலங்கள் எல்லாம் ஆதிக்க சாதிகளின் கைகளுக்குள் இருந்தன. அவர்கள் நிலங்களிலேயே அவர்கள் பாட்டாளிகளாக இருக்கும் பரிதாப நிலைக்கு வந்துவிட்டனர்.

கூலம்பட்டி என்றாலே தொழுநோயின் இருப்பிடம் என மற்ற ஊர்களில் உள்ள தேவேந்திரர்களே சொல்லிக் கேள்விப்பட்டு இருக்கிறேன். நேரிலும் பார்த்திருக்கிறேன். பக்கத்திலுள்ள ஊர்களில் உள்ள தேவேந்திரர்கள் இந்த ஊர் மக்களுக்குப் பெண் கொடுக்க மாட்டார்கள்.

பிச்சைமுத்துத் தேவேந்திரர் பிறந்த காலத்தில், அப்பகுதியில் ஆதிக்கச் சாதியினர் தேவேந்திர குலத்தாரை அடக்கி ஒடுக்கி வைத்திருந்தனர். கூலம்பட்டியைச் சுற்றி பாளையங்கோட்டை, செல்லாயிபுரம், பிரான்பட்டி, செல்லம்பட்டி, செங்காட்டம்பட்டி, மேட்டுப்பட்டி, பழைய செம்பட்டி, (புதிய) செம்பட்டி, கோடாங்கி பட்டி, எம். புதுப்பட்டி, எஸ். புதுக்கோட்டை, சிவல்சரகு, ஆத்தூர், மேட்டுப்பட்டி ஆகிய ஊர்கள் தேவேந்திர குலத்தார் வாழுகின்ற ஊர்களாகும். இந்த ஊர்களில் வாழ்பவர்கள் ஆதிக்கச் சாதிகளின் மேலாண்மைக்கு உட்பட்டு இருந்தனர்.

## பிச்சைமுத்துத் தேவேந்திரரின் இளமையும் கல்வியும்

விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பது போல, பிச்சை முத்துத் தேவேந்திரர் இளமையிலேயே கல்வியில் ஆர்வம் காட்டினார். சி.எஸ்.ஐ. பள்ளி ஒன்று சித்தையன்கோட்டையில் இருந்தது. அந்தப் பள்ளியில் அவர் சேர்க்கப்பட்டார். ஆரம்ப கல்வியிலேயே பிச்சைமுத்துத் தேவேந்திரர் ஆசிரியர்களால் பாராட்டப் பட்டார். இதனைக் கண்டு பெற்றோர்கள் பூரிப்படைந்தனர். அவர்கள் நல்ல முறையில் படிக்க வைக்க விரும்பினர். தொழுநோய் கண்ட ஊரில் அந்த நோய் அவரைப் பற்றிவிடாமல் அவர் பெற்றோர் அவரைப் பாதுகாத்து வளர்த்தனர். பிச்சைமுத்துத் தேவேந்திரர் ஆரம்பக் கல்வியை முடித்தார்.

நல்ல இதயம் படைத்த அருள்மிகு கிருத்துவப் பாதிரிமாரின் பரிந்துரையால் திண்டுக்கல் 'St. மேரீஸ்' உயர்நிலைப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். ஆனால் படிக்க இடம் கிடைத்தும் தங்கும் விடுதியில்

இடம் கிடைக்கவில்லை. எனவே வத்தலக்குண்டு, கிருத்துவ நடுநிலைப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். தங்கிப் படிக்க இடமும் கிடைத்தது.

பிச்சைமுதது்த் தேவேந்திரர் ஆசிரியர் வகுப்பில் பாடம் நடத்தும்போது கூர்ந்து கவனிப்பார். அவைகளை மனதில் நன்றாய்ப் பதிவு செய்து கொள்வார். ஆசிரியர் கேட்கும் வினாக்களுக்கு சரியான பதிலைக் கூறி ஆசிரியரின் பாராட்டைப் பெறுவார். ஆசிரியர்கள் கொடுக்கும் வீட்டு வேலைகளை ஒழுங்காகச் செய்து முடிப்பார். பாடப் புத்தகங்களை நன்றாக படிப்பார். சொல்லப்பட்ட கருத்துக்களை தெளிவாய்ப் புரிந்து கொள்வார்.

இதனால் முதல்த்தர மாணவர் வரிசையில் இடம் பெற்றார். எட்டாம் வகுப்பில் உயர்ந்த மதிப்பெண்கள் பெற்றுத் தேரினார். பெற்றோர்கள் உயர்நிலைப் பள்ளியில் சேர்த்துப் படிக்க வைக்க விரும்பினர். பாதிரிமார்களும் ஆசிரியர்களும் ஆதரவளித்தனர். எனவே பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் பசுமலையிலுள்ள கிருத்துவ உயர்நிலைப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். தங்கும் விடுதியிலும் இடம் கிடைத்தது.

எனவே பிச்சைமுத்து தேவேந்திரருக்கு கற்கும் நல்ல சூழ்நிலை அமைந்தது. அதனால் அவர் படிப்பில் மிகவும் ஆர்வம் காட்டினார். இரவும் பகலும் படிப்பிலேயே கவனம் செலுத்தினார். எப்பொழுதும் படித்துக் கொண்டு இருக்கும் பிச்சைமுத்துத் தேவேந்திரரைக் கண்ட பாதிரியார் அவரைக் கூப்பிட்டு "படிப்பு அறிவை வளர்க்கும், விளையாட்டு உடம்பை வளர்க்கும்". இரண்டும் ஒன்று சேர்ந்தால்தான் வாழ்வு வளம் பெறும். சிறிது நேரம் விளையாடு" என அறிவுரை கூறினார். அதனைப் பிச்சைமுத்துத் தேவேந்திரர் ஏற்றுக் கொண்டார். அதன்படி நடக்க உறுதி பூண்டார்.

அதன்படி பிச்சைமுத்துத் தேவேந்திரர் படிக்கும் நேரத்தைச் சிறிது குறைத்துக் கொண்டு விளையாட்டிலும் ஈடுபட்டார். விடுமுறையில் ஊருக்கு வந்த பின்னால் வீட்டில் பெற்றோர்க்குத் துணையாக இருந்தார். தோட்டத்து வேளைகள் செய்வதில் பெற்றோர்க்கு உதவியாக இருந்தார்.

பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் பள்ளி இறுதித் தேர்வில் வெற்றி பெற்றார். "ஊருக்குப் போவதானால் உயர்ந்த நிலையில் செல்ல வேண்டும், அதே சமயம் கூலம்பட்டியில் ஒரு தொழுநோய் மருத்துவ மனையை ஏற்படுத்த வேண்டும், அதற்காக அரசின் அனுமதி பெற வேண்டும்" என்ற முடிவோடு வேலை தேட ஆரம்பித்தார்.

### இராணுவ சேவை

பிச்சைமுத்து அவர்கள் இந்திய இராணுவத்தில் சேர்ந்தார். தனது

திறமையால் இராணுவத்தில் "நாயக்" பதவி உயர்வு பெற்றார். தந்தி, டெலிபோன், தொலை தொடர்புத் துறையில் நாயக்காகப் பணியாற்றினார். அப்பொழுது கலெக்டருக்கு தொழுநோய் மருத்துவமனை ஏற்படுத்த வேண்டி மனுச் செய்தார். ஆங்கிலேயர் ஆட்சியில் 5 ஆண்டுகாலம் இராணுவத்தில் பணியாற்றினார். இரண்டாவது உலகமகாப் போர் முடிந்தவுடன் இராணுவம் களைக்கப்பட்டது. களைக்கப்பட்ட இராணுவ வீரர்கள் வீட்டுக்கு அனுப்பப்பட்டனர். பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்களும் வீடு திரும்பினார். திரும்பும் போது கூலம்பட்டியில் அமையப்போகும் தொழுநோய் மருத்துவமனைக்குரிய ஆணையோடு கூலம்பட்டிக்கு வந்தார்.

## பிச்சைமுத்துத் தேவேந்திரர் செய்த சேவைகள்

### கூலம்பட்டியில் பள்ளிக் கூடம் தொடங்குதல்

பிச்சைமுத்துத் தேவேந்திரர் தன்னூர்க் குழந்தைகள் படிப்பறியாப் பாமரராய் தெருவிலே, குப்பை மேட்டிலே விளையாடித் திரிவதைக் கண்டார். கண்கலங்கினார். மனந்துடித்தார். தன்னைப் போலவே தன்னூர்க் குழந்தைகளும் படித்தவர்களாக மாற வேண்டும் என எண்ணினார். அங்கோர் பள்ளிக் கூடத்தை ஏற்படுத்தினார். தானே ஆசிரியராக இருந்து குழந்தைகளுக்குப் பாடம் நடத்தினார். தம்முடைய மக்கள் படிப்பது கண்டு அவ்வூர் தேவேந்திரர்கள் பூரிப்புக் கொண்டனர். இதன் காரணமாக பிச்சைமுத்துத தேவேந்திரரின் மேல் அன்பு செலுத்த ஆரம்பித்தனர். அவர் சொல்லைக் கேட்கவும் தொடங்கினர். அவர் தொடங்கிய அந்தப் பள்ளிக்கூடம் பஞ்சாயத்து யூனியனில் சேர்க்கப்பட்டு அனுமதியும் பின்னால் அளிக்கப்பட்டது.

### கூலம்பட்டியில் தொழுநோய் மருத்துவமனையில்

தொழுநோய் மருத்துவ முகாம் கூலம்பட்டிக்கு வந்தது. அதுவும் பிச்சை முத்துத் தேவேந்திரர் தலைமையில் துவங்கப்பட்டது. மருத்துவ முகாமிற்கு ஊரின் ஒத்துழைப்பை பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் திரட்டினார். மருத்துவப் பணி ஆரம்பம் ஆனது. பிச்சைமுத்துத் தேவேந்திரர் தலைமையில் நோயால் பாதிக்கப்பட்டவர்கள் ஒன்று திரட்டப் பட்டனர். தொழு நோயாளிகள் மருத்துவ ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டனர். பெருநோய்க்காரர்கள் ஒரே இடத்தில் ஒரு பெரிய பீப்பாயில் சிறுநீர் கழிக்க வேண்டும். சிறு நீர் நிரம்பிய பீப்பாயை தூக்கிச் சென்று ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஊற்ற வேண்டும். ஒதுக்குப்புறமான இடத்தில் மலம் கழிக்கச் செல்ல வேண்டும். பின்பு அவர்களை குளிக்க வைக்க வேண்டும். சுத்தமான ஆடைகளை அணியச் செய் வேண்டும். புண்களுக்கு மருந்து கட்டி ஊசி போட வேண்டும்.

இவ்வளவு காரியங்களையும் கவனிப்பது பிச்சை முத்துத் தேவேந்திரர் அவர்களும் அவருடைய குழுவினருமே ஆவர். இந்தச் சேவையைப் பல ஆண்டுகள் தொடர்ந்து செய்து வந்ததால் இவ்வூர் மக்களுக்கு ஏற்பட்ட பெருநோய் முழுமையாக நீக்கப்பட்டது. அதன் பின்னேதான் அந்த முகாமை காந்தி கிராமம் தன் கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வந்தது, தொழுநோய்க் கட்டுப்பாட்டு மையம் 1956க்குப் பின்னால் செப்பட்டிக்கு வடபுரத்திற்கு மாற்றப்பட்டது.

இந்த இரண்டாவது செயலால் பிச்சை முத்துத் தேவேந்திரர் அவர்கள் புகழ்மிக்க மனிதராக மாறினார். தன் தன்னலமற்ற சேவையால் ஊராரின் நெஞ்சங்களில் வாழ ஆரம்பித்தார். அவர் சொன்னால் ஊரே கேட்கும். அந்த நிலைக்கு அவர் உயர்ந்தார்.

### ஊரில் ஓர் அழகிய கோயிலை அணிபெறச் செய்தல்

"கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பர். அந்த ஊரில் மக்கள் வழிபட ஓர் கோயில் கிடையாது. எனவே பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் அவ்வூரில் ஓர் கோயில் கட்ட விரும்பினார். ஊரில் வீட்டுக்கு வீடு வரிப்போட்டு நிதி வசூல் செய்தார். பக்கத்தூரிலுள்ள தேவேந்திரர்களிடம் அன்பளிப்புப் பெற்றார். இவ்வாறு பெருந்தொகை திரட்டினார். அதன் மூலம் ஓர் அழகிய கோயிலைக் கட்டினார்.

இதனால் மிகவும் மகிழ்ச்சி அடைந்த ஊரார் அவரைத் தலைவராக ஏற்றுக் கொண்டனர். இந்தச் செல்வாக்கைப் பயன்படுத்தி சுகாதாரப் பணிகளையும் விரும்பத்தாகப் பழக்க வழக்கங்களையும் மாற்ற விரும்பினார்.

### கூலம்பட்டியைத் தூய்மைப் பகுதியாக மாற்றுதல்

கூலம்பட்டியில் வாழுந் தேவேந்திரர்கள் ஊரை ஒட்டிய பாதைகளின் ஓரங்களில் மலம், சிறுநீர் முதலியவைகளைக் கழித்து வைப்பர். அதனால் ஊரின் சுகாதாரம் பாதிக்கப்பட்டது. எனவே கூலம்பட்டியை சுகாதாரமுள்ள ஊராக மாற்ற பிச்சைமுத்துத் தேவேந்திரர் விரும்பினார்.

அவர் தினமும் அதிகாலை 5.00 மணிக்கு எழுந்து விடுவார். தான் படிக்க வைக்கும் மாணவர்களையும் எழுப்பி விடுவார். அவரும் மாணவர்களும் சேர்ந்து ஊரின் பாதை ஓரத்தில் நின்று கொள்வர். மலம், சிறுநீர் கழிக்க வரும் ஆண்களையும் பெண்களையும் தடுத்து ஒதுக்குப்புறமான இடத்திற்குச் சென்று கழிக்குமாறு செய்தனர். இப்படிப் பல மாதங்கள் செய்ததால் ஊரார் பாதை ஓரங்களில் மலம், சிறுநீர் கழிப்பதை நிறுத்தி விட்டனர்.

அதேபோல் தினமும் அவரும் மாணவர்களும் சில இளைஞர்களும் ஒன்று கூடுவர். தெருவைக் கூட்டிச் சுத்தம் செய்வர். குப்பைகளை அள்ளி குப்பைகள் கொட்டி வைக்கும் இடங்களில் கொட்டிக் குவிப்பர். தெருவில் ஓடும் கழிவு நீரையெல்லாம் தெருவின் ஓரங்களில் வாய்க்கால்கள் வெட்டி நீரை ஊருக்கு வெளியே கடத்துவர். இதனால் தெருக்கள் சுத்தமாயின.

அவ்வூர்மக்கள் நண்டு நத்தைகளின் கூடுகளை ஊரில் கண்ட கண்ட இடங்களில் போட்டு விடுவர். இதனால் ஒருவித துர்நாற்றம் ஊரெல்லாம் வீசும். இதனாலும் சுகாதாரக் கெடுதி ஏற்பட ஆரம்பித்தது. இதையும் கட்டுப்படுத்த எண்ணினார். ஊராரையெல்லாம் கூப்பிட்டார். அவர்களும் வந்து கூடினர். அவர்களைப் பார்த்து, "உங்களுடைய வீட்டுக்கருகில் போட்டு வைத்திருக்கும் நண்டு, நத்தைக் கூடுகளை அள்ளிக் கொண்டு வந்து இங்கே குவியுங்கள். மேல் நாட்டார் ஆராய்ச்சி செய்யக் கேட்கிறார்கள். அதற்குப் பணமும் தருவதாகக் கூறி உள்ளனர். எனவே அவைகளைக் கொண்டு வாருங்கள்" என்றார். இதனைக் கேட்ட ஊரார் தங்களுடைய வீடுகளுக்கருகில் போட்டு வைத்திருந்த நண்டு, நத்தைக் கூடுகளை ஊரின் பொதுவிடத்தில் கொண்டு வந்து குவித்தனர்.

நான்கைந்து வாலிபர்களைக் கூப்பிட்டு "இதை எல்லாம் அள்ளி குப்பையில் கொட்டுங்கள்" என்றார். அவர்களும் அவ்வாறே செய்தனர். அப்பொழுதுதான் ஊரார் அவைகள் தங்கள் நலத்திற்கு கேடு செய்பவை என்பதை உணர்ந்தனர். அன்றிலிருந்து அவைகளைக் குப்பையில் கொட்ட ஆரம்பித்தனர். ஊரே சுத்தமானது.

## ஊர்ப் பஞ்சாயத்தை பலமுற அமைத்தல்

தளர்ந்து கிடந்த ஊர்ப் பஞ்சாயத்தை நடைமுறைப் படுத்த விரும்பினார். மக்களைக் கூட்டி பொதுக் குழுவை உருவாக்கினார். ஐந்து பேர் கொண்ட சிறப்புக் குழுவை அமைத்தார். அதன் மூலம் ஊரைக் கட்டுப்படுத்த விரும்பினார்.

செம்பட்டிக்கும் கூலம்பட்டிக்கும் இடையில் புல்வெட்டிக் கண்மாய் இருக்கிறது. மழைக் காலத்தில் அது நிரம்பி வழியும். அதில் கூலம்பட்டிப் பெண்கள் எல்லாம் குளிப்பதை கட்டுப்படுத்தினார். ஊர் மக்களின் முழு ஒத்துழைப்பினால் முழுதும் கட்டுப் படுத்தினார். அதிலிருந்து கண்ணியம் காக்கப்பட்டது.

அதே போல் தன்னுடைய ஊருக்குள் நடைபெறும் சண்டை சச்சரவுகளை அமைதியாகக் கேட்டு, நடுநிலைமையோடு நின்று வழக்குகளைத் தீர்த்து வைத்தார். இதனால் அவ்வூர் வழக்குகள் செம்பட்டிக் காவல் நிலையத்திற்குப் போகவிடாமல் தடுத்து நிறுத்தினார்.

இதனால் ஊரில் உள்ள தேவேந்திர குல மக்கள் பிச்சை முத்துத் தேவேந்திரர் அவர்களின் தலைமையில் அமைதியாக வாழ்ந்தனர்.

கூலம்பட்டிக்குள் ஆதிக்கச் சாதியினர் அனாவிசயமாக வந்து பழகுவதை அவர் விரும்பவில்லை. எனவே அதைக் கட்டுப்படுத்த விரும்பினார். ஊரார் சம்மதத்தோடு கட்டுப்படுத்தினார். காலவோட்டத்தில் அந்நியர் நடமாடும் பழக்கம் படிப்படியாகக் குறைந்து அடியோடு நின்று விட்டது. இந்த முறை தேவேந்திரர்கள் வாழும் எல்லா ஊர்களிலும் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது.

கூலம்பட்டியில் ஓர் பால்பண்ணை அரசுச் சலுகையில் ஏற்படுத்தினார். அதன் தலைவராகவும் இருந்து நிர்வாகம் செய்தார். இதனால் வறுமைப்பட்ட தேவேந்திரர்களுக்கு உயரும் வாய்ப்புக் கிடைத்தது.

## படிக்கும் தேவேந்திர குல பெண்களுக்கு உணவும் உறைவிடமும் ஏற்படுத்துதல்

படிக்கின்ற தேவேந்திர குலப் பெண்களுக்குப் பள்ளியில் இடம் கிடைத்து தங்கும் விடுதிகளில் இடம் கிடைக்காமல் திண்டாடுவதைக் கண்டு மிகவும் மனம் வருந்தினார். தான் இளமையில் பட்ட வேதனையை எண்ணிப் பார்த்தார். தனக்கு வந்த கதி தன்குலக் குழந்தைகளுக்கு வரக்கூடாது என எண்ணினார். அவர்களுக்காகத் தங்கிப் படிப்பதற்கும் உணவு உண்பதற்கும் ஓர் தங்கும் விடுதியை ஏற்படுத்தினார். அந்த விடுதியை நிலக்கோட்டையில் நிறுவினார். அதற்குத் "தேவி பெண்கள் உணவு விடுதி" எனப் பெயரிட்டார். அதனைப் பராமரிக்கும் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொண்டார். அன்று வாங்கிய பாத்திரங்கள் சில இன்றும் அவருடைய வீட்டில் இருக்கின்றன. அந்தப் பாத்திரங்களில் "தேவி பெண்கள் உணவு விடுதி" என்ற வாசகம் பொறிக்கப்பட்டு இருந்தது.

இப்படிப்பட்ட நல்ல காரியங்கள் பலவும் தேவேந்திரர்களுக்குச் செய்ததால் அவர்கள் எழுச்சி பெற்றனர். ஊரே ஒன்றுபட்டு நின்றது. இந்த எழிச்சியின் வேகம் மற்ற ஊர்களில் உள்ள தேவேந்திரர்களையும் தட்டி எழுப்பியது. ஒன்றுபட ஆரம்பித்தனர்.

இந்த எழுச்சியால் பிச்சைமுத்துத் தேவேந்திரரின் புகழ் பரவ ஆரம்பித்தது. மற்ற ஊர்களில் உள்ள தேவேந்திரர்களிடையே இவர் பெயர் பிரபலமானது. ஆதிக்கச் சாதிகளும் இவர் யார் என்பதை அறிந்து கொண்டார்கள்.

## காந்தி கிராமத்தோடு தொடர்பு கொள்ளுதல்

1947-ல் சின்னாளப்பட்டிக்கருகில் டாக்டர் இராமச்சந்திரன்,

டாக்டர் சௌந்திரம் இராமச்சந்திரன் ஆகியோர் காந்தி கிராமச் சேவா மையத்தை ஏற்படுத்தினர். சமூகச் சேவை செய்வதற்காக ஊழியர் குழுவை ஏற்படுத்தினர். அந்த நேரத்தில் பிச்சை முத்து தேவேந்திரரின் சமுதாயப் பணிகளைக் கேட்டும் கண்டும் சௌந்திரம் இராமச்சந்திரன் அவர்கள் அவரை ஊழியர் குழுவில் ஒருவராகச் சேர்த்துக் கொண்டார்.

அதன் மூலமாக காங்கிரஸின் தொடர்பும் காந்தியின் மேல் பற்றும் கொண்டார். பலவித பயிற்சி ஸ்தாபனங்கள் காந்திகிராமத்தில் ஏற்பட்டன. அவைகளில் தன்குல மக்களுக்கு இடங்கள் வாங்கித் தந்தார். அதன் வழியாக அவர் கிராம சேவக் பதவியும் பெற்றார். இதற்கு முன்னால் கூட்டுறவு சங்கத்தில் எழுத்தராகவும் சில ஆண்டுகள் பணிபுரிந்துள்ளார்.

வினோபா பாவே அவர்களின் சர்வோதய இயக்கத்திற்கு சௌந்திரம் இராமச்சந்திரன் மிகவும் ஆதரவளித்தார். பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்களின் தொண்டை எதிர்பார்த்தார். அவர்களும் தன்னார்வத்தோடு ஈடுபட்டார். நிலதானங்கள் பெறுதில் ஆர்வம் காட்டி உழைத்தார். தன்குல மக்களுக்கும் வாங்கித் தந்தார்.

**காண்ட்டிராக்டர் பணி**

அரசுத் துறைகளில் (செட்டியூல சாதிகள்) பட்டியல் வகுப்பினர் நலத்துறையும் ஒன்று, பிச்சைமுத்துத தேவேந்திரர் அவர்கள் அதில் தன்னையோர் கான்ட்டிராக்டராக பதிவு செய்து கொண்டார். நலிந்தோர் வாழும் ஊர்களில் பள்ளிக்கூடம் இல்லையென்றால் அந்த ஊர் மக்களைக் கூப்பிடுவார். அவர்களின் சம்மதத்தோடு மாவட்ட ஆட்சியருக்கு விண்ணப்பம் செய்வார். அவர் அளிக்கும் ஆணையைப் பெற்று அந்த ஊருக்குப் பள்ளிக்கூடக் கட்டிடத்தைத் தானே காண்ட்டிராக்டராக இருந்து கட்டி முடிப்பார். மாணவர் தங்கும் விடுதிகளையும் கட்டி உள்ளார். ஊர்களில் குடிநீர்க் கிணறுகளையும் வெட்ட இவரே ஏற்பாடு செய்து வெட்டித் தருவார்.

ஊர்களில் சாலைகள் அமைப்பதானாலும் அவரே ஏற்பாடு செய்வார். மாவட்ட ஆட்சியரிடம் ஆணை வாங்கி அவரே செய்து முடிப்பார். அப்பிரதேசத்தில் பட்டியல் வகுப்பினர் நலப்பணியில் 80 சதவீதம் வேலைகள் அவர் செய்து முடித்தவையே ஆகும். இன்றும் அவைகளைக் காணலாம். அப்பொழுது மாவட்ட ஆட்சியராக இருந்தவர் உயர்திரு இராமதாஸ் அவர்கள் ஆவர்.

**மாவட்டக் கழகத்தில் பங்கு (ஜில்லா போர்டு)**

இவர் மாவட்டக் கழகத்தில் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் நன்கு தேர்ச்சி

பெற்றவர். இந்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் பேசத் தெரிந்தவர். அதனால் மாவட்டக் கழகத்தில் இவருக்கு நல்ல மதிப்பு இருந்தது. மாவட்டக் கழக அலுவலகத்தில் அஜண்டா தயார் செய்தல், கூட்டங்கள் கூட்டுதல் போன்ற பணிகளைச் செய்து வந்தார். கட்சி கொரடாவாகப் பணியாற்றினார்.

ஆத்தூர், சித்தையன்கோட்டை. கன்னிவாடி ஆகிய ஊர்களில் உயர்நிலைப் பள்ளிகளைத் துவக்கிட சகல விதத்திலும் இவர் உதவியாக இருந்தார். சாதிமத பேதமின்றி பலருக்கும் வெலை வாங்கித் தந்துள்ளார். இவரால் பதவி உயர்வு பெற்றவர்கள் அனேகம் பேர்.

எனவே சமுதாய சேவையில் பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் தனி முத்திரையைப் பதித்துள்ளார். "சேவைக்கெனப் பிறந்த செம்மல்", என ஆதிக்கச் சாதிகளால் பாராட்டப்பட்டவர். கிராம காங்கிரஸ் கமிட்டியாலும் போற்றப்பட்டவர்.

**அரசியல் ஈடுபாடும் தலைவர்களோடு கொண்ட தொடர்பும்**

**சௌந்திரம் இராமச்சந்திரன் அவர்களின் தொடர்பால் பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் மெல்ல மெல்ல காங்கிரஸ் கட்சியில் ஈர்க்கப்பட்டார். அக்கட்சிக்காக அவர் தீவிரமாக ஈடுபட ஆரம்பித்தார். அதன் காரணமாக அவருக்குப் பெருந்தலைவர் காமராஜர், கக்கன் போன்ற தலைவர்களுடன் நல்ல அறிமுகமும் தொடர்பும் கிடைத்தது.**

சௌந்திரம் இராமச்சந்திரன் பொதுத் தேர்தலில் திண்டுக்கல் தொகுதியில் நாடாளுமன்ற வேட்பாளராக நின்றார். தேர்தலில் வெற்றியும் பெற்றார். அப்பொழுது அவருக்காக பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் அரும்பாடு பட்டார். தேவேந்திரர்களின் ஒட்டுக்களை அதிகமாக அவருக்குப் பெற்றுத் தந்தார்.

மாவட்டக் கழக உறுப்பினராக இருந்த பொழுது, மாவட்ட கழகத்திற்குத் தலைவர் தேர்தல் வந்தது. சிங்கராயர் என்பவர் தலைவர் பதவிக்கு நின்றார். அவருக்குப் போட்டி உருவானது. சௌந்திரம் இராமச்சந்திரன் அவர்கள் சிங்கராயர் தலைவராக வர வேண்டும் என விரும்பினார். அப்பொழுது அவர் பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்களைப் பார்த்து, "நீங்கள் சிங்கராயரைத் தலைவர் ஆக்குங்கள்" என்ற பொழுது, அவர் வேண்டுகோளை ஏற்று, சிங்கராயரைத் தலைவர் ஆக்கிக் காட்டினார்.

ஒரு காலக்கட்டத்தில் காங்கிரஸ் கட்சியில் பிளவு ஏற்பட்டது. உயர்திரு காமராஜருக்கும் காங்கிரஸில் புகழ்ப்பெற்று விளங்கிய உயர்திரு எஸ்.ஆர். கிருஷ்ணமூர்த்திக்கும் இடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டது. அதனால் எஸ்.ஆர். கிருஷ்ணமூர்த்தி காங்கிரஸைவிட்டு

வெளியேறினார். காங்கிரஸ் கட்சிக்கு எதிராக சீர்திருத்தக் காங்கிரஸ் கட்சியை உருவாக்கினார். பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் கிருஷ்ணமூர்த்தியின் பேச்சைக் கேட்டு காங்கிரஸை விட்டு வெளியேறினார். சீர்திருத்த காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தார். அதற்காகப் பாடுபட ஆரம்பித்தார்.

உயர்திரு பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் காங்கிரஸை விட்டு அச்சமயம் விலகாமல் இருந்திருந்தால் பின்னால் ஒரு சட்டமன்ற உறுப்பினராக வந்திருக்க முடியும். அப்பதவியின் மூலமாக காமராசர் போல, கக்கன் போல மந்திரியாக வந்திருக்க முடியும். அந்த அரிய வாய்ப்பை அவர் இழந்து விட்டார்.

கி.பி.1952 பொதுத் தேர்தலில் பார்வேடு பிளாக் கட்சியின் சார்பில் நாடாளுமன்ற வேட்பாளராக நின்றார். தேர்தலில் தோல்வி அடைந்தார். 1957 பொதுத் தேர்தலில் பழனித் தொகுதியில் வேட்பாளராக நின்றார். ஆனால் காங்கிரஸ் இவருக்கு எதிராக பொன்னம்மாவை நிறுத்தியது. தன் இனத்தைத் தானே எதிர்க்கக் கூடாது என்பதற்காக 'வாபஸ்' வாங்கிக் கொண்டார்.

பாளையங் கோட்டை ஊராட்சித் தேர்தலில் தலைவராக நின்றார். ஆனால் பட்டியல் வகுப்பினர் நலத்துறையில் கான்ட்டிராக்டராக வர விரும்பியதால் தலைவராக நிற்பதைத் தவிர்த்துக் கொண்டார்.

**தேவேந்திர குலத் தலைவர்களோடு தொடர்பு**

பிச்சைமுத்துத் தேவேந்திரர் தன் இனத் தலைவர்களோடு தொடர்பு கொண்டிருந்தார். தேவேந்திர குல மக்களுக்காக தன் உயிரைத் தியாகம் செய்த இமானுவேல் சேகரோடு பழகியும் பேசியும் இருக்கிறார். இவர் தேவேந்திர குல மக்களை எழுச்சி பெறச் செய்தார். அவரின் புரட்சிப் பாதையில் தானும் செல்ல விரும்பியதுண்டு. தன்னால் முடிந்த அளவு தன் பகுதியில் தன் குலத்தாரை எழுச்சி பெறச் செய்தார்.

இதைவிட தேக்கம்பட்டி பாலசுந்தர ராஜுவிடம் பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் மிகவும் நெருக்கமாக இருந்தாராம். பாலசுந்தர ராஜு அவர்கள் தேவேந்திர குலத்து மக்களுக்காக, அவர்களின் சமுதாய உரிமைக்காகப் போராடினார்.

பாலசுந்தரராஜு அவர்கள் 6 அடிக்கு மேல் உயரம் உள்ளவர். சிவப்பு நிறமானவர். கம்பீரமான தோற்றம் உடையவர். வலிமையான மனம் படைத்தவர். இவர் சிலம்பாட்டத்தில் வல்லவர். மல்யுத்தத்தில் பயிற்சி பெற்றர். இவர் ஒரு வலிமையுள்ள படையை வைத்திருந்தார். இப்படிப்பட்ட படையைக் கொண்டு ஆதிக்கச் சாதியரை எதிர்த்து

நின்றார். தேவேந்திர குல மக்களுக்குத் துன்பம் விளைவிப்பவரை எதிர்க்க, ஒடுக்க ஆரம்பித்தார்.

இதனால் கலவரக்காரன் எனப் பெயர் பெற்றார். அரசாங்கக் குற்றவாளியாகவும் ஆனார். அதையெல்லாம் அவர் மிகச் சாதாரணமாகவே எடுத்துக் கொண்டார். அவ்வளவு அஞ்சா நெஞ்சம் படைத்தவர்.

"ஒருநாள் அவர் மதுரை மாவட்ட ஆட்சியரைக் காண வந்தார்.(பிச்சைமுத்துத் தேவேந்திரர் அங்கு இருந்தார்). ஆட்சியர் முன்னால் அவர் 'சிகரெட்' புகைத்த விதமும் அவர் எதிரில் அமர்ந்து பேசிய விதமும் மிகவும் கவர்ச்சியாக இருந்தது" என பிச்சைமுத்துத் தேவேந்திரர் கூறினார். அவரிடம் பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் நன்றாகப் பழகியவர். தலைவர்களுக்குரிய எல்லா அம்சமும் பொருந்தியவர். எனவே மள்ளர் குலத்து மாணிக்கங்களில் இவரும் ஒருவர் ஆவார்.

பிச்சைமுத்துத் தேவேந்திரர் டாக்டர் அம்பேத்கரின் மேல் பற்றுக் கொண்டவர். அவர்தம் தீண்டாமை ஒழிப்புக் கொள்கையை வரவேற்றார். டாக்டர் அம்பேத்கார் கூட்டிய மாநாட்டிற்கு சென்று வந்தார்.

பால்பண்ணை ஏற்படுத்தி (கூலம்பட்டியில்) நடத்தி வரும் பொழுது மின்சாரத் துறை அமைச்சர் ஒ.பி. இராமன், அரிஜனத்துறை அமைச்சர் சத்தியவாணிமுத்து ஆகியோரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது.

**25.2.1955** முதல் **17.8.1956** வரையுள்ள காலத்தில் மாவட்ட கழக உறுப்பினராக இருந்தார். அப்பொழுது இந்திய ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திர பிரசாத்துடன் எடுக்கப்பட்ட குரூப் போட்டோவில் பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்களும் இடம் பெற்று உள்ளார். மாவட்ட ஆட்சிக் கழகம் ஜனாதிபதியை வரவேற்கும்போது மேலே சொன்னபடம் எடுக்கப்பட்டது.

சுபாஸ் சந்திர போஸின் வீரமிக்க கொள்கை அவருக்கு மிகவும் பிடித்திருந்தது, "பாரதப்பூமியில் பச்சை இரத்தம் சிந்தி உரிமை வாங்கினால் தான் அதன் பெருமை சிறக்கும்", என்ற சுபாஸின் கருத்தை பிச்சைமுத்து தேவேந்திரர் அவர்கள் வரவேற்றார். அவர் பரங்கியர் இராணுவத்தில் இருக்கும் போதே இதை ஆதரித்தார். பின்னால் 'பார்வேடு பிளாக்' கட்சியிலும் சேர்ந்தார். அப்பொழுதுதான் பசும் பொன் முத்துராமலிங்கத் தேவருடன் நெருக்கமாகத் தொடர்பு கொண்டிருந்தார்.

**சேவைக்கு வந்த பரிசை ஏற்க மறுத்தல்**

இவருடைய சமூக சேவைக்காகவும் கல்வித் தொண்டிற்காகவும் சுகாதாரத் தொண்டிற்காகவும் இவரை அரசாங்கம் பாராட்ட விரும்பியது. அவருக்கு தியாகிகள் பென்சன் தரமுன் வந்தது. ஆனால் அவர், "என் சேவையை விற்க நான் விரும்பவில்லை", என்று பென்சன் வாங்க மறுத்து விட்டார். இப்படிப்பட்ட மனிதரை "மள்ளர் குல மாணிக்கம்" என அழைப்பதில் தவறேதுமுண்டோ? மனித குல வரலாற்றில் பொன்னேட்டில் பொறிக்கத் தக்கவர் அன்றோ!

உயர்திரு பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் தேவேந்திர குலத்தின் ஒளிவிளக்கு. அந்த ஒளி விளக்கு 1998-ஆண்டு மார்ச்சு மாதம் 24ந் தேதி அன்று அணைந்தது. அப்பொழுது கூலம்பட்டிக் கிராமமே மக்களால் நிரம்பி வழிந்தது. அன்னார்தம் இறுதிச் சடங்கில் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதியிலிருந்தும் மக்கள் வந்து குவிந்தனர். பல்வேறு அரசியல் கட்சி பிரமுகர்களும் தலைவர்களும் வந்திருந்தனர். மாண்புமிகு அமைச்சர் I. பெரியசாமி அவர்களும் சங்கரன் கோயில் திரு. கிருஷ்ணன் அவர்களும் கலந்து கொண்டனர். நூற்றுக்கணக்கான அரசு அதிகாரிகளும் பல்வேறு சாதியினரும் இறுதிச் சடங்கில் பங்கு கொண்டனர்.

**முடிவுரை**

> "தோன்றின் புகழோடு தோன்றுக அஃதிலார்
> தோன்றலின் தோன்றாமை நன்று"

என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாய் பிச்சைமுத்துத் தேவேந்திரர் அவர்கள் வாழ்ந்தார். மள்ளர் குல மாணிக்கத்தின் உடம்பு மண்ணுலகை விட்டு மறைந்தாலும் அவர் புகழ் உடம்பு என்றும் நிலைத்து நிற்கும்.



# அருள்வாக்குச் சித்தர்

# ஸ்ரீமான் கீதாரி கருப்பணன் பூசாரித் தேவேந்திரர்

மூ.க. பரமசிவம் எம்.ஏ, எம்.எட்.
து. சாணார்பட்டி, ம. கல்லுப்பட்டி அஞ்சல்,
பேரையூர் வட்டம், மதுரை மாவட்டம் 625 535.

உலக நாகரீகம் நதி நீர் ஆற்றுப் பள்ளத்தாக்குகளில் தான் முதலில் தோன்றி வளர்ந்துள்ளது. பழந்தமிழ் நாட்டில் வைகை ஆற்றுப் படுகையில் தோன்றிய மருதநிலத்து மள்ளர்குல தேவேந்திரர்களின் நெல் நாகரீகப் பண்பாட்டின் பெருமையினை கருப்பணக் குடும்பனாரின் மகிமையின் மூலம் அறியலாம்.

**பண்பாட்டில் உயர்ந்தோர்**

செந்தமிழ்ச் சங்கம் தோன்றிய கூடல் மாநகர் - மாமதுரை மூவேந்தர் மள்ளர்கள் ஆண்ட பழந்தமிழ் நாடு வைகையாற்றின் தென்-கரையில் அமைந்துள்ளது. "அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும் வருந்தகைத்தாகும் மள்ளர் என்னும் பெயர்" என்று திவாகர நிகண்டும் "செருமலை வீரரும் திண்ணியோரும் மருதநில மக்களும் மள்ளர் என்ப" என்று பிங்கல நிகண்டும் கூறுவதின் மூலம் மருத நில வாழ் மக்கள் மள்ளர் எனும் தேவேந்திரர்களே என தெரிகிறது. நன்நகரம் பொன்நகரம், நான்மாடக் கூடல் நகரம், வெண்கரும்பும் செந்நெல்லும் விளையும் திருநகரம், அண்ணல் அழகேசருடன் அங்கயற்கண்ணி வாழும் நகரம், தென்மதுரை நகரமென்னும் திவ்விய திருநகர், வைகை நதி பாயும் வளமிக்க ஊர், பொய்கையில் உயர்ந்த பொற்றாமரை வளாகம் இருக்கும் ஊர் என்று மதுரையின் சிறப்பு கூறப்படுகிறது. மதுரை நகருக்கருகில் மாடக்குளம், பிள்ளையார் பாளையம், பொன்மேனி, பழங்கானத்தம், அனுப்பானடி, தென்பரங்குன்றம் என்ற திருப்பரங்குன்றம் போன்ற பேரூர்கள் உள்ளன. இதில் வயலும் வயல்சார்ந்த நீர்வளம் நிலவளம் மிகுந்த செந்நெல், கரும்பு, வாழை, விளைவிக்கும் உழவ மள்ளரியரின்ப் பண்பாட்டின் மேண்மையில் உயர்ந்து விளங்கும் தேவேந்திர குல வேளாளர் வாழ்கின்றனர். "வைகை பொருனை நதி என மேவியயாறு பலவோடத் திருமேனி செழித்த தமிழ்நாடு" என்றார் பாரதி. மள்ளரிய வளமகிமைக்கு காரணம் வைகை ஆறு வளம் நிறைந்து விளங்குவதே ஆகும்.

தேவேந்திரர் தோன்றிய இடம் மாடக்குளம் என்று தோற்றக்

கதைகள் கூறுகின்றன. மாடக்குளம் அல்லி மலர் முல்லைப் பூ, தாமரை மலர்கள் பூத்துக் குலுங்கும் பொங்கு மாகடல், கண்மாய் நிறைந்த ஊர். மாடக் கரும்புசாமியின் அருள் சக்தி தென்றலாக வீசும், மாமடைநீர் கிருதுமால் நதியும் மதுரா வாய்க்கால் மூலமாக பாய்வதால் நெல் விளையும் ஊர். மலையக் குவாலியம்மன், கபாலீஸ்வரி அருளால் மள்ளர் இனம் மருத நிலத்து தலைமக்களாக வேந்தன், தேவேந்திரராக வாழும் ஊர். திருமால், அழகர், பொருமாள், சிவன், பார்வதி, முருகன், தேவேந்திரரையும் அவர்களின் பல வடிவங்களையும் தம் குலதெய்வமாக வழிபட்டுப் போற்றுபவர்கள். இவர்கள் சேர, சோழ, பாண்டியர் என்ற மள்ளர் குலத்து வேந்தர்களின் வழித்தோன்றல்கள். தேவேந்திரகுல வேளாளர் மக்கள் பாரில் உயர்ந்தவர் ஆவர்.

## முத்துக் குடும்பரின் முத்து நாகையாபுரம்

தெலுங்கர் ஆட்சிக் காலத்தில் மாடக்குளத்திற்கு அருகில் உள்ள பிள்ளையார்பாளையத்தில் வாழ்ந்த தேவேந்திர மக்கள் ஐந்து பாட்டன் வம்சத்தவர். தேவேந்திரர்களின் மூத்த தலைமகனாக விளங்கியவர் முத்துக் குடும்பனார். மதுரை மாவட்டம் சாப்டூர் ஜமீன் துள்ளுக்குட்டி நாய்க்கனூர் கிராமம் உட்கடையில் முத்துக் குடும்பனாரால் ஏற்படுத்தப்பட்ட முத்துநாகையாபுரத்தில் சீரும் சிறப்புமாக வாழ்ந்த முத்துக்குடும்பர், மாயழகக் குடும்பர், சின்னழகக் குடும்பர் என்ற மூன்று பாட்டன்களின் வழித்தோன்றல்களில் தலைமகன் இவரே ஆவார்.

இவர்களில் பெருமள்ளத்தியார் முத்தக்காள், மாமள்ளர் முத்துக்குடும்பர் தேவேந்திர குடும்பர்களின் தலைக் குடும்பமாக விளங்கிய தம்பதிகளாவர். இவர்களின் மூத்தமகன் செல்லாண்டிக்குடும்பர், இளையமகன் கருப்பணக் குடும்பர். கருப்பணக் குடும்பர்தான் ஆண்மீகப் பண்பாட்டால் சமத்துவமும் ஒற்றுமையும் கண்ட சான்றோர் ஆவர். தம் தெய்வாம்ச சக்தியால் தேவநேந்திரர்களின் வளமான பண்பாட்டை நாட்டு மக்கள் அறிச் செய்த மனித நேயப் பண்பாளர். சாமி மதம் இன பேதமின்றி அனைவராலும் போற்றி வணங்கப்பட்டவர், அன்பாக நேசிக்கும் அருள் சக்தியாளராக விளங்கிய மனித குல மாணிக்கம் கலியுகத்தின் அருள்வாக்குச் சித்தராக திகழ்ந்தார்.

மதுரையை ஆண்ட ராணி மங்கம்மாளின் தளபதிகளாக விளங்கியவர்களில் வீரதிரச் செயல்களைப் பாராட்டி பல கிராமங்கள் வீரதிர தான கிராமமாக வழங்கப்பட்டதில் ஜமீன்தார் அந்தஸ்து பெற்றவர் வீரமல்லத்தேவன் என்கிற வீரமல்லத்தேவேந்திரர். தம் நிலப்பகுதியை செழுமையான நீர்வள, நிலவளப் பகுதியாக்கி மக்களின் நல்வாக்குப் பெறும் மள்ளராக சிறப்புடன் விளங்கியவர். அதே சமயத்தில் வறட்சிப் பிடியில் சிக்கியவர் நத்தம்பட்டி ஜமீன் வீரமருத

வறட்சியைப் போக்க மறவர் ஜமீன்தார் பொறாமை கொண்டு மக்களைத் திரட்டி இரவோடு இரவாக வீரமல்லத் தேவேந்திரரின் ஜமீன் எல்லைப் பகுதி பயிர் வயல் வளங்களை நாசப்படுத்தி விடுகிறார். இதில் இருவருக்கும் நேரிடையாக மோதும் சபதப் போட்டி ஏற்படுகிறது. ஒப்பந்தம், தோற்றவர் ஜமீனை ஜெயித்தவருக்கு விட்டுவிடுவதென்பதே. வீரமல்லு ஜமீனை எதிர்த்தத வீரமருது தேவர் மற்றும் அவரின் உதவிக்கு வந்த தேவதானம் ஜமீன்தார் சாப்டூர் ஜமீன்தார் ஆகிய மூவரையும் மூன்று நாழிகையில் வெற்றிக் கொள்கிறார் வீரமல்லு தேவேந்திரர். சபதப்படியே நத்தப்பட்டி ஜமீன் பகுதியை எழுத்து பூர்வீகமாகப்பெற்று வெற்றி பெறுகிறார். இதனால் வீரமல்லுத் தேவேந்திரர் மூவரை வென்றான் என்ற வீர விருதுப்பட்டம் பெறுகிறார்.

நத்தம்பட்டி, சாணார்பட்டியில் வாழ்ந்த சாணார் சாதியினப் பெண்கள் மீது நத்தம்பட்டி ஜமீன்தார்க்கு ஆசை. கொடுங்கோல் ஆட்சி ஏற்பட்டிருந்த இந்நிலையில் தம் பெண் மக்களின் மானம் காக்க சாணார்கள் நத்தம்பட்டி மறவா ஜமீன் எல்லையை விட்டு வெளியேறி விட்டனர். மள்ளர் இன மக்கள் நல்வாழ்விற்காக ஏற்கனவே மதுரை பிள்ளையார்பாளையத்திலிருந்து வெளியேறி திருங்கலம் தாலுகாவில் சதுரகிரி மலைக்கும் வாசிமலையான் கோயில் மலைக்கும் இடையில் நெறிஞ்சி தூர்த்து முதல் குடியாக குடியிருந்து வந்த முத்துக்குடும்பரின் நாகையாபுரத்தில் சாணார்கள் தஞ்சம் அடைகின்றனர். இப்பகுதி சாப்டூர் ஜமீன் எல்லைக்குள் இருந்தது. குறிஞ்சிப்பூ, நெறிஞ்சிப் பூக்கள் மலர்ந்த, மலையும் மலைசார்ந்த நிலப்பகுதியில் தேன் வளம், மூலிகை வர்க்கம் நிறைந்த, தேக்குமணம் கமழும் பகுதி, இவ்வூருக்குப் புதுப்பெயர் சூட்டி அழைக்க விருப்பம் கொண்டனர். இதன்படியே முதல் குடிமகனாக விளங்கிய "முத்துக்குடும்பர்" பெயரோடு இப்பகுதித் தெலுங்குச் ஜமீன்தார் சதுரகிரி கட்டாரி காமயநாயக்கர் பெயரான நாகையசாமி பெயரையும் சேர்த்து "முத்துநாகையாபுரம்" என்று பெயர் சூட்டி அழைத்து வந்தனர். இந்நாளில் இவ்விரு குழுவினர்களும் வாழ்ந்து வரும் இடம் "சானார்பட்டி" என்றும் "சானார்பட்டி-காந்தி நகர்" (பேரையூர் வட்டத்தில்) என்றும் மருவி புதுமையாக அழைக்கப்பட்டு வருவதை வாக்குத் தவறாத மள்ளரினம் ஏற்றுக்கொண்டது.

இந்நிலையில் தம்மிடமிருந்து தப்பிச் சென்ற சாணார் குடும்பம் முத்துநாகையாபுரத்தில் வாழ்ந்து வரும் செய்தி அறிந்த நத்தம்பட்டி மறவர் ஜமீன்தார், சாப்டூர் தெலுங்கர் ஜமீன்தார் மூலம் அய்யக்குட்டிமுதலி நாடார் குடும்பப் பெண் மக்களை கொலை செய்துவிடும்படி முத்துக்குடும்பனாருக்கு ஆணையாகக் கட்டளை இடச்செய்கிறார்.

**சத்திய வாக்கு**

சகோதரபாசம் கொண்டு வாழும் முத்துக்குடும்பர் நாடார் மகள் நிறை மாதக் கர்ப்பிணியாக இருந்தபடியால் அய்யக்குட்டிமுதலி நாடாரின் வேண்டுதல் படியே பெண்களைத் தப்பிச்சென்று உயிர் பிழைக்க வைத்து விடுகின்றார். மண்குடிசை அமைத்து அதன் மேலுள்ள கூரைக்கு நெருப்பிட்டு விலங்கின் ரத்தம் தோய்ந்த அப்பெண்ணின் சேலையினைக் காண்பித்து ஜமீன்தார் இட்ட ஆணையை நிறைவேற்றிவிட்டதாகக் கூறிவிடுகிறார்.

இதற்காக இவர்க்கு 60 குழி ஜமீன் நிலம் மானியமாக வழங்கி அன்று முதல் வெள்ளைக் குதிரை மீது செல்வாயாக என்று கூறி வெண்குதிரை தானமும் ஜமீன்தார் கொடுத்தார். மேலும் கோட்டுருமால் பரிவட்டமும் கட்டி வெண்கொற்ற முத்துக்குடை பிடித்து செல்லவும் முத்துக்குடும்பருக்குப் "பெரிய குடும்பர்" என்ற பட்டமும் ஜமீர்தாரால் வழங்கப்பட்டு பாராட்டப் பெற்றார். இப்பட்டத்தால் தைப் பெங்கல் காட்ச்சிர் வழங்கும் மிராசைப் பெறுகிறார்.

தானம் பெற்ற நிலம் தனக்கு வேண்டாம், உன் பெண் மகளால் கிடைத்ததை நீயே வைத்துக்கொள் என்று அய்யக்குட்டி நாடாருக்கே தானமாக 60 குழி நிலத்தையும் வழங்கிவிட்டார் முத்துக்குடும்பனார். தன் பெண் மக்களின் உயிரையும் காத்து, தானமாக நிலம் கொடுத்ததிற்கும் நன்றிக் கடனாக முத்துக்குடும்பர்க்கு நாட்டாமைகார நாடார் காராம் பசுவின் பாலில் சத்திய வாக்கு செய்து கொடுத்தாராம். சாணார்களின் வாரிசுகளுக்கு மள்ளர்களின் தலைமகன் பெரிய குடும்பர், முத்துக்குடும்பர் நினைவைப் போற்றும் வகையில் குழந்தை பிறந்தால் தலைமொட்டை போடும் வரை ஆண் மகனுக்கு முத்துக்குடும்பர் என்றும் பெண் மகவிற்கும் முத்துக்குடும்பர் பெயர் சேர்த்து அழைக்கிறார்கள்.

இதன் மூலம் ஆதி காலம் முதலாக நாளது வரையிலும் நாடார்களின் நாட்டாண்மை வகையறாவும் முத்துக்குடும்பர் வகையறாவும் பங்காளிகள் என்ற உறவு முறையில் வாழ்ந்து வருவதைக் காணலாம். மேலும் தங்களது குல தெய்வ வழிபாட்டின் போது இரு சமூகத் தலைவர்களும் முதல் மரியாதை முத்துக்குடும்பர் வகையார்க்கு வழங்கி வருவதையும் தெரியலாம்.

**ஸ்ரீமான் கீதாரி கருப்பணன் தேவேந்திரர்**

பண்பாட்டில் சிறந்த விளங்கி முதல் பாராட்டினைப் பெற்றுவந்த முத்துக்குடும்பரின் வழித்தோன்றல், ஸ்ரீமான் கிதாரி கருப்பணன் பூசாரிக் குடும்பர் ஆவார். கிதாரி என்றால் தலைவர் என்று பொருள்படும். தம் தெய்வீக சக்தியால் சிறுவயது பாலகனாக இருக்கும்

போதும் அனைவராலும் பாராட்டப்பட்டவர்.

கல்வி ஞானத்தை கேள்வி ஞானத்தால் வளர்ந்தவர். விபூதி மகிமை கண்ட சித்த வைத்தியர். நோய் கண்டவர்க்கு இவரது கை ஆசிர்வாதம் பட்டாலே நோய்கள் பறந்துபோய் விடுமாம். இவரது இல்லத்தில் எப்பொழுதும் மக்கள் கூட்டம் கலகலப்பாகவே இருக்குமாம். இவர்கள் வீட்டு அடுப்பில் என்றும் நெருப்பு அணையாது. அனைவருக்கும் இன்முகத்துடன் உபசரித்து உணவு வழங்கி வந்தார்களாம். இதனால் இவர்களின் வீட்டை நாடி வந்தால் எப்பொழுதும் உணவு கிடைக்கும் என்று மக்கள் கலகலப்பாக நாடி வருவார்களாம். இத்தன்மையால் 300க்கும் அதிகமான தம்முடைய வீட்டுக் கால்நடைச் செல்வம் பசுமாடு, காளைமாடு, வெள்ளை ஆடு, எருமை மாடுகளை வளர்க்கவும் பாதுகாக்கவும் தம் பெண் மக்கள் முத்தும்மாள், பத்ரகாளியம்மாள், பேச்சியம்மாள் ஆகியோர் உடன் தம் புஞ்சை நிலம் தோட்ட விவசாயப் பணிகளையும் கவனிக்க எட்டு பண்ணை ஆட்களை நியமித்திருந்தார். மாடக்குளம் செல்லாண்டிக்குடும்பர் - கருப்பாயின் மூத்தமகள் பெரு மள்ளத்தியார் அழகம்மாள் இவருக்கு இல்லத் துணைவியாக விளங்கினார். இவர்கள் வள்ளுவரும், வாசுகியுமாய் வாழ்ந்து பெருமை சேர்த்தவர்கள்.

வெள்ளையர் ஆட்சிகாலத்தில் இவரைப் பார்ந்து புகழ்ந்து அறம் பாடிய புலவர்கள் பலர் பரிசில் பெற்றுச் சென்று உள்ளனர். எ.கா. காமநாயக்கனூர் நத்தம்பட்டி புலவர், நான்மாடக்கூடல்நகர் புலவர், சாலிச்சந்தை கவிராயர் திருக்குறள் அட்டாவதானி புலவர், சேத்தூர் சிவகிரி புலவர் இன்னும் பலர் பரிசில் பெற்றுச் சென்று உள்ளார்கள் என்று அறிய முடிந்தது.

## ஆலயம் பல கண்ட அருள் வாக்குச் சித்தர்

பாண்டிய நாட்டில் வாழ்ந்த மன்னர் மரபுத் தாய்மார்கள் தாலாட்டும் போது "மதுரை சொக்கநாதரை உழவராக" வர்ணித்துப் பாடுவதுண்டு. மள்ளர் என்ற தேவேந்திரர் திருமண விழாவில் மணமக்களை வாழ்த்தும்போது பாண்டியரோடும், பஞ்சபாண்வர் அர்ச்சுனரோடும் தொடர்புப் படுத்தியும் வாழ்த்துவர். பாண்டியன் மகள் அல்லி அரசாணியைத் தொடர்பு படுத்தியும் வாழ்த்திப் பாடுவர். அர்ச்சுனனைக் கிருஷ்ணன் "குடும்பா நீ" என அழைப்பது நினைவு கூறத் தக்கதாகும். மேலும் வாழ்த்தும் போது "வெள்ளையானை மீது ஏறிவரும் விருது பெற்ற பாண்டியன், சொல்லுக்கு அரிச்சந்திரன். இவர் காலால் உழப்பியதெல்லாம் "செந்நெல்லாக" விளையும். அதனால் செகத்தினை அரசுபுரியும் மன்னர் செங்கோல் தேவேந்திரரின் உழவு கோலுக்கு ஈடாகாது. முப்பத்து முக்கோடி தேவர் நாற்பத்தொண்ணாயிரம் ரிசிகள் இவர்களுக்கெல்லாம் அதிபதியாய்

இருந்தவர் தேவேந்திரர் " என்றும் புகழ்ந்து வாழ்த்துவதுண்டு.

தெய்வாம்சம் பொருந்தி விளங்கியவர் கருப்பணக் குடும்பர். கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பதற்கேற்ப ஆலயம் பல கண்டவர். தாம் தலைவராக விளங்கிய தேவேந்திரகுல வேளாளர் உறவின்முறையாளர்களுடன் சேர்ந்து ஸ்ரீராமர் கோயில் , பதினெட்டாம்படிக் கருப்பசாமி கோயில், கோட்டமலை கருப்பசாமி கோயில், பால விநாயகர் கோயில், சந்தன மாரியம்மன் கோயில், வைரவசாமி கோயில், போன்ற பல கோயில்களை அமைத்து பிரதிஷ்டை செய்து வைத்தவர். இவர் திருமால் அழகரை க் குல தெய்வமாக வணங்குபவர். முத்தையா சுவாமியின் மறு அவதாரமாக காட்சி கொடுத்தவர். இக்கோயில் விழாக்களில் இருபத்தியோர் பந்தி அறுபத்தியோர் சேனைத்தளமும் என்ற அருள்வாக்கு பெற்று ஸ்ரீமுத்தையா சாமியாகவும் ஸ்ரீசந்தன மாரியம்மான் அருளாடியாகவும் விளங்கி மக்கள் கேட்ட வரம் கொடுக்கும் அருள்வாக்குச் சித்தராக விளங்கியவர் ஆவர். இவர் முத்துக்குறி வைத்து சோதிடம் சொல்வதில் வருங்காலத்தை முன்பே சொல்லும் வல்லவராக விளங்கினார். மகானின் வாக்குப் பலித்து வந்ததால் மக்கள் போற்றும் ஸ்ரீமானாக விளங்கினார். இதனால்தான் இவர்களைப் பெரியவீட்டுப் பண்ணையார் என்றும் பெரியவீட்டுப் பண்ணையாரம்மாள் என்றும் போற்றிப் பெரிய குடும்பனார் கிதாரி என்றே அழைத்து வந்தார்கள்.

## அம்மனின் அருள் வாக்கு

சானாபட்டியின் தாய்க்கிராமம் துள்ளுக்குட்டி நாயக்கனூரில் மூப்பர், தேவர் இன மக்கள் வாழ்ந்த வருகின்றார்கள். 80 ஆண்டுகளுக்கு முன்பு இதில் மூப்பர் என்ற முத்தரையர் வம்சத்தவர்களில் மட்டும் திடீர் என்று பல மக்கள் இறந்தார்களாம். காலரா நோயில் சாவது போன்று ஒருவர் பின் ஒருவராக தொடர்ந்து அனுதினமும் இறப்பதும் மக்கள் சுடுகாட்டில் அடக்கம் செய்வதும் தொடர்கதையாக நிகழ்ந்ததாம். இந்நிலையில் ஸ்ரீமான் கருப்பணக் குடும்பர் தங்கள் தோட்டத்தில் தமது பெற்றோர்கள் முத்தக்காள் முத்தணருடன் மூப்பர் இனமக்களும் சேர்ந்து இருக்கும்போது சிறு குழந்தை ரூபத்தில் அம்மனின் அருள்வாக்கு அசரீரி சத்தம் கேட்டது.

"நான்தான் இவ்வூர் காளியம்மன். எனக்கு அருகிலுள்ள முத்தக்காள் - முத்தக் குடும்பர் தோட்டத்தில் ஊர் அமைத்து அவ்வூர் மந்தையில் அம்மன் கோயில் அமைந்து எல்லை மால் கட்டி சக்தி பூசை நடத்தினால் மக்கள் சாவதை தடுத்து உங்கள் இனத்தை காக்கும் அம்மனாக விளங்குவேன்" என அருள் வாக்குக் கூறி மறைந்து விட்டதாம்.

அருள் வாக்கைக் கேட்ட மூப்பா இன மக்கள் சுவாமியின் மறு அவதாரமாக விளங்கிய ஸ்ரீமான் கருப்பணன் பூசாரியிடம் மக்களை காக்கும்படி வேண்டினார்களாம். வேண்டுதலின் படியே தங்கள் தோட்டத்தையே ஊர் அமைக்க வாக்குக் கொடுத்துவிட்டு எல்லைப் பொங்கல் வைத்து காளியம்மன் கோயில் அமைத்து அம்மனை பிரதிஷ்டை செய்தவுடன் திடீர்ச் சாவுக்கள் அன்றே நின்றது. மக்களின் மனக்கவலையை நீக்கி மகிழ்வான வாழ்வுக்கு வழி காட்டியுள்ளார்.

அம்மனின் வாக்குப்படி, சுடு கூழ் வழங்கும்போது வேகின்ற கூழ்கிண்ட மரத்துடுப்போ அகப்பையோ (கரண்டி) உபயோகிக்காமல் கருப்பணக் குடும்பர் தன் கையையே துடுப்பாகக் கிண்டியும், கரண்டியாகக் கொண்டு ஊர் மக்களுக்கு கூழ் முழுதும் வழங்கினாராம். அருள் வாக்குச் சித்தராக விளங்கிய அருளாடியின் மேனியில் அத்தரும் பன்னீரும், புணுகு ஜவ்வாது வாசனையும் மல்லிகை முல்லைபூ வாசனை மணங்கமழ்ந்து விளங்கியதாம். இத்தகைய அற்புதமான தெய்வ அருள் காட்சியைக் கண்ட மூப்பர் மக்கள் தெய்வ அருள் சக்தியாக விளங்கிய கருப்பணக் குடும்பரையே அன்றுமுதல் அக்காளியம்மனின் முதன்மைப் பூசாரியாக நியமித்து முதல் மரியாதை செய்து வருகின்றனர்.

## சித்தர் கோவில்

மக்கள் பிணி நீக்கும் அரிய பல சஞ்சீவி மூலிகை மலையாக விளங்கும் சதுரகிரி சுந்தர மகாலிங்கம் திருக்கோயில் மலையில் பதினெட்டு சித்தர்களும் தவம் இருந்து அருள் வழங்கி வருவதாக கூறுகின்றனர். இம்மலை மூலிகைகள் கடும் கொடுமையான நோய்களைக் கூட சுகப்படுத்திவிடும். பச்சிலை மூலிகை மூலம் பாம்பு கடித்த ஆயிரக்கணக்கான மனிதர்களை விஷம் முறித்துக் காப்பாற்றி வரும் பரம்பரை வைத்தியக் குடும்பமாக விளங்கி வரும் சித்த வைத்தியர் கருப்பணக் குடும்பரான கிதாரி கனவில், சிலமுத்தையா சுவாமி தோன்றி சில முத்தையா சித்தர் தர்மசாஸ்தா என்ற பெயரில் திருக்கோயில்கள் கட்டி வழிபாடு நடத்தக் கோரினாராம். சிறுமலை என்ற எத்தலா மலையின் வெவ்வேறு பகுதிகளில் சுவாமி வழிபாட்டுக்குரிய "பூசைமணி" "திருநீற்றுக்கப்பறை", "தூட ஆராதனை திவம்" இருப்பதாகவும் கூறி மறைந்தாராம்.

கிதாரி அவர்கள் பூசைப் பொருள்கள் தேடுவது பற்றி சில முத்தையாசாமி கனவில் தோன்றி இம்மலையில் முடங்கிக்காடு, வெக்காலிக்காடு, மெத்தாப்புக்காடு பகுதிகளில் பூசைப்பொருட்கள் இருப்பதாக அடையாளம் கூறி அதை எடுத்து இம்மலையின் வடபாகத்தில் திருக்கோயில் கட்டினால் என்றும் அருள்கடாட்சம் வழங்கும் திருத்தலமாக விளங்கும் என வாக்குக்கூறி மறைந்தாராம்.

இக்கனவுக் காட்சியை ஆட்டுக் கிடைக்காரர்களிடம் கூறினாராம். கிடையில் தேவேந்திரர். மூப்பர், தேவர், நாடார், யாதவர், கவுண்டர் போன்ற பல சமூக மக்கள் அனைவருக்கும் சேர்ந்து தலைவராக இருந்த ஸ்ரீமான் கருப்பணக் குடும்பர். சுவாமி கூறிய பூசைப் பொருள் அடையாளங்க்ளை பூசாரியே தேடி எடுத்து தன் முயற்சியால் திருக்கோயில் கட்டி செக்கானூரணி கொடுக்குளம் சிற்பி சின்னச்சாமி ஆசாரி மூலமாக கருங்கல் சிலைகள் அடித்து பிரதிஷ்டை செய்துள்ளார். இவரின் கனவுக் காட்சி வாக்குப் பலித்து விட்டதால் அருள்வாக்குச் சித்தரானார். இவரே சித்தர் திருக்கோயிலின் பரம்பரைப் பூசாரியாக இருந்தார். இவரின் வாரிசுகளான தர்மர், குடும்பர், முத்துக்குடும்பர், பெத்தணன் குடும்பர், ராஜையா குடும்பர், ஆகியோர் பரமசிவம் குடும்பர் தலைமையில் பூசாரிகளாகவும், பரம்பரை அறங்காவலர் குழுத் தலைவராகவும் இருந்து வருகின்றனர்.

## சீல முத்தையா சுவாமியின் மகிமை

சிலமுத்தையா ஒரு விசித்திர சக்தியாக அருள் வழங்கி மக்கள் வரமும், மழை வரமும் தருபவர்.இனிய புல்லாங்குழல் இசை ஓசையால் வெவ்வேறு பகுதிகளில் மேயும் ஆடு மாடுகளையும் ஓரிடத்தில் சேர்க்கும் சக்தி படைத்தவர்.

சோலை வளம் நிறைந்த சதுரகிரி சுந்தர மகாலிங்கம் மலையில் காராம் பசுக்களை மேய்த்துக்கொண்டு திரிந்தவர். காடுகளில் மாடு மேய்ந்திருப்பதை அறிந்த மக்கள் அதனைக் காண முயற்சிக்கும்போது காண முடியாதபடி மாற்றி விடுவார்.

மாடுகள் நடந்து செல்லும் திசையை விட்டுவிட்டு நேர் எதிர் திசையில் சென்றதாக மாடுகளின் பாதக்குளம்புகள் தடம்படியும்படி செய்துவிடுவர். இப்படி அபூர்வ சக்தியாக சில முத்தையா விளங்கி வருவதால் இப்பகுதி மக்கள் இதை சித்தர் திருவிளையாட்டு எனக் கருதுகின்றனர். சித்தர்களின் நினைவாக சித்தர் சிலையும், மேற்கில் சில முத்தையா சிலையும், கிழக்கில் தர்மசாஸ்தா சிலையும், முன்பாகத்தில் கருப்பணசாமிக்கும், வினைதீர்க்கும் பாலவிநாயகருக்கும் சிலைகள் அமைத்து வழிபாடு செய்கின்றனர்.

## இறுவாய்

ஆன்மீக சக்தியாக விளங்கிய அருள்வாக்குச் சித்தர் ஸ்ரீமான் கிதாரி கருப்பணன் பூசாரித் தேவேந்திரர் 30.11.1970 லும், இச்சத்தியவாக்கு விளங்கம் மகிமைக்கு உறுதுணையாக இருந்த இவரது இல்லத் துணைவியார் 7.1.1977 லும் சிவனடி சேர்ந்தார்கள். இவர்கள் மறைந்தாலும் இவர்களது புகழ் மறையவில்லை. அனைத்து மக்களாலும்

பெரியவர், கிதாரி, பூசாரிக் குடும்பனார், சித்த வைத்தியர், பெருந்தலைவர், அருள்வாக்கு சித்தர் என்றும் சிறப்பாக வாழ்த்திப் போற்றப்பட்ட தலைமகனாக விளங்கியவர் இப்பெருமள்ளர். அவர் புகழ் வாழ்க.

## பயன்பட்ட நூல்கள்


1. இரா. தேவ ஆசிர்வாதம் - மூவேந்தர் யார்? பள்ளரல்ல மள்ளர் ஆம் மன்னர்
2. டாக்டர் முத்தையா - ஊர் பெயர்களும் உன்னத பெருமைகளும், மதுரை மாவட்ட பள்ளர் மக்கட் பெயர்கள்
3. டாக்டர் செ. உலகநாதன் - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் - தெளிவுரை
4. முருகன் சேவகி - ச. மகாலட்சுமி தேவி, - தேவி மீனாட்சி திவ்வியப்பிரபந்தம்
5. டாக்டர் குருசாமி சித்தர் மள்ளர் மலர், ஏப்ரல் 2000
6. புலியூர் கேசிகன் - முக்கூடற் பள்ளு
7. குமரகுருபரர் - பாண்டிய மன்னர் - பிள்ளைத் தமிழ் பாடியவர்
8. தகவலர்கள் செ. அழகுமலை தேவேந்திரர் மாடக்குளம், சமையன் தேவேந்திரர் - வெள்ளையப்ப மூப்பர், சஞ்சீவி மூப்பர். துள்ளுக்குட்டி நாயக்கனூர், பட்டக்காரர் பெரியகோயிலான் மள்ளப்புரம், மு. நீலமேகம் தேவேந்திரர், குருசாமி நாடார், டி. சாணார்பட்டி.




நீலகிரி மாவட்டம் குன்னூர் ஸ்ரீ சற்குரு ராஜயோக ஆசிரம

## சுவாமிகள் தவத்திரு சற்குரு இராமலிங்க அடிகளார்

இன்ஜினியர் மாரியப்ப மன்னர் B.E.,
பொருளாளர், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்,
கோயமுத்தூர் 641 046.

சுவாமிகள் அருள் திரு சற்குரு இராமலிங்க அடிகளார் அவர்கள் சோழ வளநாட்டில் காவிரி-கொல்லிடம் ஆகிய இரு ஆறுகள் மத்தியில் உள்ள கல்லணையை உள்ளடக்கிய திருப்பேர் நகரம் என்ற கோவிலடியில் சிறப்பு மிக்க மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் இனத்தில் 1900-ஆம் ஆண்டு அவதரித்தார்கள். தந்தையார் அடைக்கன் மூப்பனார் அவர்கள். தாயார் அய்யம்மாள் அவர்கள்.

தந்தையார் அடைக்கன் தேவேந்திரர் அவர்கள் ஆன்மீக நெறிகளில் சிறந்து விளங்கியவர். இராமாயணம், மகாபாரதம், தேவாரம் முதலிய இதிகாசம் மற்றும் பக்தி நூல்களில் சிறந்த புலமை பெற்றவர். ஆன்மீக நெறிகளிலும் இதிகாசங்களிலும் சொற்பொழிவுகள் ஆற்றி இறைவன் அருள் பெற்று அருள்வாக்குக் கூறி வந்தார். தங்களுடைய சேவைக்காக காணிக்கை எதுவும் பெறுவது இல்லை. தாயார் அய்யம்மாள் அவர்களும் தந்தையுடன் சேர்ந்து தெய்வ பக்தியில் சிறந்து விளங்கினார். தங்களுடைய நிலத்தில் விவசாயம் செய்து வாழ்ந்து வந்தார்கள்.

ஆன்மீகத் துறையில் சிறந்து விளங்கிய பெற்றோரிடமிருந்து கற்று சிறு வயது முதலே சுவாமிகள் அருள்திரு சற்குரு இராமலிங்க அடிகளார் பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டுத் தெளிந்து தவ வாழ்க்கையை மேற்கொண்டார்கள். அறநெறி, அருள்நெறி, தவநெறி நூல்களைக் கற்றுத் தெளிந்து தவம் புரிந்து அருள் பெற்றார்கள். பிரம்மச்சரியம் கடைப்பிடித்தார்கள்.

ஸ்ரீ அகஸ்திய பரம்பரையில் தோன்றிய தவத்திரு குருவேல்சாமி அவர்களையும் ஸ்ரீ அகஸ்திய பரம்பரையில் ஒன்பதாவது முனிவராகத் தோன்றிய ஸ்ரீ சற்குருநாத முனிவரையும் (சற்குரு சுவாமிகள்) காரண குருக்களாகக் கொண்டுள்ளவர்கள். அருள்திரு சற்குருநாத சுவாமிகள் திருவானைக்கோயிலில் உள்ள ஸ்ரீ சற்குரு இராஜயோக திருமடத்தில் ஜெபம், தவம் முதலிய ஆற்றி மக்களுக்கு சேவை செய்து வந்தவர்கள். ஒடுக்கப்பட்ட மக்கள் வசிக்கின்ற ஊர்களில் குருபூஜையை நடத்தி சமபந்தி விருந்தளிக்கச் செய்துள்ளார்கள். 1913 ஆம் ஆண்டு தேவேந்திர குல

வேளாளர்களுடன் பாடல் பெற்ற தலமாகிய ஜம்புலிங்கேஸ்வரர் கோயில் வழிபாடு செய்யச் செய்தார்கள். சுவாமிகள் அருள்திரு சற்குரு இராமலிங்க அடிகளார்கள் ஸ்ரீசற்குருநாத மாமுனிவர் அவர்களிடம் ஆசியும் அருள்வாக்கும் பெற்று அவர்கள் உபதேசித்த பக்தி, கன்மம், யோகம், ஞானம் முதலிய சாதனைகளைப் பரப்பி நீலகிரி மலைப் பகுதிகளில் தவம் இயற்றி சாதி, சமயம், மொழி, இன வேறுபாடு இன்றி எல்லா மக்களுக்கும் அருள்வாக்கு அளித்து பக்தியோடு, சுத்தம், கல்வி, தொழில், விவசாயம், அறநெறி, அருள்நெறிகளைப் பல நிறுவனங்கள் மூலம் கற்பித்து வருகிறார்கள்.

சுவாமிகள் மலைவாழ் பழங்குடி மக்களும் மற்றும் ஒடுக்கப்பட்டு நலிவுற்ற மக்களுக்கும் கல்வி நிறுவனங்களையும், உணவு விடுதிகளையும் நீலகிரி, கோயமுத்தூர், மதுரை, திருச்சி, தஞ்சாவூர் ஆகிய மாவட்டங்களில் 1948 முதல் தொடங்கி நடத்தி வருகிறார்கள். இந்து சமய சமுதாயப் பணிகளை, குன்னூர் ஸ்ரீசற்குரு இராஜயோக ஆசிரமத்தை ஏற்படுத்தியும் ஸ்ரீசற்குரு சர்வ சமரச சங்கம் என்ற அமைப்பையும் உருவாக்கி அதன் மூலம் மக்களுக்குத் தொண்டு செய்து வருகிறார்.

### சுவாமிகளுடைய சமூகப்பணிகள்

1. மத்திய மாநில அரசுகள் ஆதரவுடன் நீலகிரியில் நான்கு மாவட்ட ஆதிவாசிகள் மகாநாட்டை மலைவாழ் மக்கள் நலனுக்காக நடத்தியுள்ளார்கள்.
2. தமிழ்நாடு அரசு ஆதரவுடன் ஒரு ஆதிவாசிகள் மாநாட்டை ஆதி சுஞ்சனகிரி பாலகங்காதர சுவாமிகள் (மைசூர்) தலைமையில் நடத்தியுள்ளார்கள்.
3. ஒரு அகில இந்திய ஆதிவாசிகள் மாநாட்டை இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர் டாக்டர் ராதாக்கிருஷ்ணன் தலைமையில் மத்திய மாநில அமைச்சர்கள், ஆளுநர் ஆகியோர் சிறப்பு உரைகளுடன் நடத்தியுள்ளார்கள். மக்களின் முன்னேற்றத்திற்கான தீர்மானங்கள் நிறைவேற்றி திட்டங்களை செயல்படுத்த உதவியுள்ளார்கள்.
4. ஆதிவாசி மக்கள் 4800 பேர்களை உயர்நிலைப் பள்ளி மற்றும் கல்லூரி வரை படிக்க வைத்து அவர்களில் 1780 பேர்களுக்கு பல்வேறு துறைகளில் வேலை வாய்ப்புப் பெற்றுத் தந்துள்ளார்கள்.
5. தீண்டாமை ஒழிப்புக்காக மத்திய மாநில அரசுகள் ஆதரவுடன் சமபந்தி விருந்தளிக்கும் பணியை பல மாவட்டங்களிலும் செய்து வந்துள்ளது.

6. நீலகிரியில் பல்வேறு பகுதிகளிலும் உள்ள ஒடுக்கப்பட்டு நலிவுற்ற மக்களில் 30 பேர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு ஆன்மீகம், பக்தி, அறநெறி ஆகியவற்றில் பயிற்சியளித்து வந்துள்ளார்கள். நீலகிரி மாவட்ட அன்றைய ஆட்சியர் திரு. லோபொ பிரபு ஐசிஎஸ் அவர்கள் தலைமையில் சுத்தி இயக்கம் மாநாட்டைக் கூட்டி பயிற்சி பெற்றவர்களுக்கு 'ஐயர்' என்ற பட்டம் வழங்கப்பட்டது.

7. மாநில செட்டியூல்டு இன நலக் குழுவிலும், ஆதிவாசிகள் நலக் குழுவிலும் பங்கு வகித்து செட்டியூல்டு இன மக்களுக்கு குடும்பம் ஒன்றுக்கு ஒரு ஏக்கரும், ஆதிவாசிகள் இன மக்களுக்கு குடும்பம் ஒன்றுக்கு ஐந்து ஏக்கர் நிலமும் என்றபடி பல நூறு குடும்பங்களுக்கு நிலப்பட்டா வாங்கிக் கொடுத்துள்ளார்கள்.

## சுவாமிகள் இலவசமாக நடத்தி வரும் சேவை நிறுவனங்கள்

1. ஸ்ரீசற்குரு ராஜயோக ஆசிரமம், குன்னூர், நீலகிரி
2. ஸ்ரீசற்குரு ஆதிவாசிகள் ஆண்கள் ஆரம்பப் பள்ளி, மற்றும் விடுதி, நீலகிரி
3. ஸ்ரீசற்குரு ஆதிவாசிகள் பெண்கள் ஆரம்பப் பள்ளி மற்றும் விடுதி, நீலகிரி
4. ஸ்ரீசற்குரு புண்ணிய விடுதி (அநாதை சிறுவர் சிறுமியருக்கு) நீலகிரி
5. ஸ்ரீசற்குரு மாணவர் விடுதி (அட்டவணைச் சாதிகள் மாணவர்களுக்கு)
6. ஸ்ரீசற்குரு மாணவர் விடுதி (பிற்படுத்தப்பட்ட சாதிகள் மாணவர்களுக்கு)
7. ஸ்ரீசற்குரு ஆதிவாசிகள் உயர்நிலைப்பள்ளி, குன்னூர், நீலகிரி
8. ஸ்ரீசற்குரு தச்சு, பிரம்பு வேலைப் பயிற்சி மற்றும் உற்பத்தி மையம், குன்னூர்
9. ஸ்ரீசற்குரு ஆதிவாசிகள் குருகுலம் பள்ளி, கல்லார், மேட்டுப்பாளையம், கோயமுத்தூர் மாவட்டம்.
10. ஸ்ரீசற்குரு இலவச மருத்துவமனை, கல்லார், மேட்டுப்பாளையம்
11. தேசிய வயது வந்தோர் கல்வி மையம், நீலகிரி
12. ஸ்ரீசற்குரு ராஜயோக திருமடம், திருவானைக்கோயில், திருச்சி மாவட்டம்

13. ஸ்ரீசற்குரு நடுநிலைப்பள்ளி, மணியேரிபட்டி, தஞ்சாவூர் மாவட்டம்

14. திருச்சி மாவட்டம், மணிகண்டம் ஒன்றியத்தில் சுயநிதி ஆரம்பப்பள்ளி

15. ஸ்ரீ அகஸ்திய ஐ.டி.ஐ. குன்னூர், நீலகிரி

16. கோயமுத்தூர் சிங்காநல்லூர் கிருஷ்ணாபுரத்தில் திரு. எஸ்.வி. பண்டாரம் அவர்கள் தொடங்கி சுவாமிகளிடம் ஒப்படைத்த நடுநிலைப்பள்ளி

17. ஸ்ரீசற்குரு சேவா ஆசிரமம், திருவேங்கடசாமி ரோடு, ஆர்.எஸ். புரம், கோயமுத்தூர். இது சுவாமி குரு பிரமானந்தா அவர்கள் தொடங்கி சுவாமிகள் அருள்திரு இராமலிங்க அடிகளாருடன் சேர்ந்து நடத்தி வந்து பிறகு அருதிரு இராமலிங்க அடிகளார் சுவாமிகளிடம் ஒப்படைக்கப்பட்டது. சுவாமிகளிடமிருந்து பிடுங்கி இதன் சொத்துக்களை அனுபவிக்க தற்போது சில விஷமிகள் வழக்குத் தொடர்ந்து வழக்கு சென்னை உயர்நீதி மன்றத்தில் உள்ளது.

**சுவாமிகள் உறுப்பினராக உள்ள அமைப்புகள்**

1. பாரதிய ஆதிம் சாதி சேவக் சங்கம் (தக்கர் பாபாவால் தொடங்கப்பட்டது)
2. பாரதிய ஆதிம் சேவக் சங்க தமிழ்நாடு மாநில கிளைச் செயலர்
3. குன்றக்குடி திருவண்ணாமலை ஆதின அறக்கட்டளைச் செயலர். இந்த அறக்கட்டளை 16 கல்வி நிறுவனங்களை நடத்தி வருகிறது
4. திருவள்ளுவர் கல்லூரி, பொதிகை, பாபநாசம் வட்டம் திருநெல்வேலி மாவட்டம் - தலைவர் (தாளாளர்)
5. களக்காடு மேல்நிலைப்பள்ளி - செயலர்.
6. திருச்செந்தூர் அருகில் திருமலையப்ப புரத்து உயர்நிலைப்பள்ளி செயலர்
7. திருநெல்வேலி, நாங்குனேரி அம்பேத்கார் தொடக்கப்பள்ளி - செயலர்
8. இந்து கிருத்துவம், முஸ்லீம் ஆகிய மும்மதத்திற்கும் உள்ள திருவருள் பேரவையில் மாநிலப் பொதுக்குழு உறுப்பினர்

சுவாமிகள் அருள்திர சற்குரு இராமலிங்க அடிகளார் அவர்கள் நீலகிரி, கோயமுத்தூர் மாவட்டங்களுக்கு திரு. கே. சிவா அவர்களை மக்கள் தொடர்பாளராகவும் தஞ்சாவூர், திருச்சி மாவட்டங்களுக்கு திரு.

அ. கணபதி அவர்களை மக்கள் தொடர்பாளராகவும் நியமித்து தொண்டாற்றி வருகிறார்கள்.

சுவாமிகளுக்கு பத்மஸ்ரீ, பத்மபூஷன், பாரத்ரத்னா போன்ற விருதுகள் பல ஆண்டுகளுக்கு முன்னரே வழங்கப்பட்டிருக்க வேண்டும். தமிழ் நாடு அரசும் மத்திய அரசும் உண்மையான மக்கள் தொண்டர்களைக் கண்டு கொள்ளாமல் இருக்கின்றன. சாதியும் பணமுமே அங்கிகாரம் பெறும் இக்காலத்தில் கல்வி வியாரராமோ, சேவை விளம்பரமோ இல்லாமல் ஆயுள் முழுதும் தொண்டாற்றி வரும் ஏழைத் தொண்டர்கள், தியாகிகள், பண்பாளர்கள் அரசு மற்றும் அதிகாரிகளின் கண்களில் படுவது அரிதுதான்.

தேவேந்திரர் சுவாமிகள் அருள்திரு சற்குரு இராமலிங்க அடிகளார் அவர்கள் தற்போது 100 ஆண்டு இளமையுடன் அருள் தொண்டாற்றி வருகிறார்கள். அவர்கள் அடி போற்றி வணங்குகிறோம்.



வணங்காமுடி சலியாப்புலி

# சின்னக் கருப்பக் குடும்பன் பாலகிருட்டிணன்

- ம. கனகராசு, M.A., M.Phil.

தேர்வு நிலை விரிவுரையாளர், ஆங்கிலத்துறை
அருள்மிகு கலை பண்பாட்டுக் கல்லூரி, பழனி 624 601.

ஆரம்பக் கல்வியிலேயே அருகிப் போன, கல்வியறிவையே அனுபவித்தறியா எம் தந்தை கண்டதற்கெல்லாம் பாட்டு, அதில் ஒன்று:-

திருப்பதி மிதியாப் பாதம்
சிவனடி வணங்காச் சென்னி
தாகத்தைத் தீராத் தீர்த்தம்
தரித்திரம் அறியாப் பெண்டிர்
கோபத்தை அடக்கா வேந்தன்
குருமொழி கொள்ளாச் சீடன்
பரம்பரம் பெருத்த தொந்தி

பயனில்லை ஏழும் தானே-' என்பது போல பழனி எனும் ஊரை அறியாத தமிழனும் பாலகிருஷ்ணன் என்கிற பெயரை அறிந்திராத மள்ளரும் இல்லை என்றே கொள்ளலாம்.

எவர் முன்னும் தன் தலையை எதர்க்காகவும் வளைக்காத மள்ளர், பழனி பாலகிருஷ்ணனென்றும், ஆயக்குடி பாலகிருஷ்ணனென்றும், சலியாப்புலி பாலகிருஷ்ணனென்றும், எம்.பி. பாலகிருஷ்ணனென்றும் இந்தியா முழுக்க அறிமுகமாகியிருந்த அமரர் தியாகி அய்யா சலியாப்புலி சின்னக்கருப்பக் குடும்பன் பாலகிருஷ்ணன் அவர்கள் ஆகும்.

முப்பதாண்டுகள் இந்திய அரசியலில் பெரும்பதவிகள் வகித்தும் எவரிடமும் யாசகமாய் ஒரு குவளை காப்பி கூட வாங்கிக் குடித்துப் பழக்கமில்லாத ஒரு அரசியல்வாதி, தலைவர், மக்கள் தொண்டர் என்றால் அது அய்யாவை மட்டுமே குறிக்கும்.

எனக்குப் பத்து வயதிலிருந்து அய்யா அவர்களின் மறைவு வரை, கல்வி தேடி வெளியில் ஓடிய கா்லந் தவிர்த்து, பழனியில் இருந்த காலங்களிலெல்லாம் உடனிருந்து உற்று நோக்கியதில் நான் கண்ட சிறப்பான அம்சமே அவரது மனிதாபிமானம். அவர் 'ஒடுக்கப்பட்ட மக்களின்' மீது காட்டிய பாசமும், பரிவும் காட்டுபவர். துன்பப்பட்டு வருகின்ற எந்த மனிதனுக்கும் அவர் விட்டு வாயிற் கதவுகள் எப்போதும் திறந்தே இருக்கும்.

## சமூகத்திற்கு ஆற்றிய பணிகள்

*1937*-ல் 'மாகாண சபை' உறுப்பினராகி, வெளியுலகத்தோடு தொடர்பு கொண்ட நாள் முதல் ஒவ்வொரு நாளும் ஒரு சாதனையாய்ப் பலவற்றைக் குறிக்கலாம். அது அவருடைய வரலாறு; இங்கே மற்றவர் பார்வைக்காக ஒன்றிரண்டு.

பெண்கள் ரவிக்கை போடக்கூடாது என்ற காலத்தில் ஒடுக்கப்பட்ட இனப் பெண்கள் உடம்பை முழுக்க மறைத்து "ரவிக்கை" அணிந்து நகர் வலம் வந்தது பெருமைக்குரிய ஐயா பாலகிருஷ்ணன் தலைமையில் ஆயக்குடி கிராமத்தில்தான்.

தமிழ்நாட்டிலேயே வெள்ளைக்காரர்களின் இந்தியாவில் தேவேந்திரர்களுக்காகவென்று ஒரு கூட்டுறவு பண்டகசாலை இருந்ததென்றால் அது மதுரை மாவட்டம், பழனி வட்டம் "பழைய ஆயக்குடி கூட்டுறவு பண்டகசாலை" தான். **13-1-1944** ல் அய்யா அவர்கள் ஒரு தொலை நோக்கோடு அதனை ஆரம்பித்து வைத்தார்கள். **1948** லிருந்த **50** வரை இந்தப் பகுதியில் நிலவிய கடுமையான "கொள்ளுப்புட்டுப் பஞ்சத்திலும்" - கொள்ளை மாவாக ஆட்டி அதை இட்லி போல் அவித்துத்தான் சாப்பாடே - இந்தக் கடுமையிலும் ஆயக்குடி தேவேந்திரர்கள் மட்டும் அரிசி சோறு சாப்பிட வழி வகுத்தது இந்த பண்டகசாலை.

*1971*க்குப் பின் வந்த எல்லா சட்டமன்ற பொதுத் தேர்தல்களிலும் ஆயக்குடியைச் சேர்ந்த, இன்னும் சொல்லப் போனால் கட்சிகள் வேறாக இருந்தாலும், ஐயா அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே இருந்து வருகிற பெருமைக்கு வித்திட்ட மிக உயர்ந்த மனிதர் ஐயா பாலகிருஷ்ணன் என்றால் மிகையாகாது.

*1971* - தி.மு.க. புலவர் திரு. சி. பழனிச்சாமி, ஐயா அவர்களின் உடன்பிறந்த சகோதரி மகன்.

*1977* - இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்ஸிஸ்ட்) திரு. ந. பழனிவேலு, ஐயா அவர்களின் உடன் பங்காளி

*1980* - திரு. ந. பழனிவேலு

*1984* - இந்திய தேசிய காங்கிரஸ் (இந்திரா) திருமதி ஏ.எஸ். பொன்னம்மாள் ஐயா அவர்களின் தனி நிறுவனமான "ராஜம் தேவி இல்லம்" என்ற மாணவியர் விடுதியின் காப்பாளராக இருந்து, **1957** லிலேயே ஐயா அவர்களின் பரிந்துரையின் பேரில் சோழவந்தான் இரட்டை உறுப்பினர் தொகுதியிலிருந்து சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட, ஐயா அவர்களின் வளர்ப்பு மகள்.

*1988* - திரு. ந. பழனிவேலு

*1991* - அ.இ.அ.தி.மு.க. திர ஏ. சுப்புரத்தினம் (திருமதி ஏ.எஸ். பொன்னம்மாள் அவர்களின் மூன்றாவது பெண்ணின் கணவர்)

*1996* - தி.மு.க. திர. த. பூவேந்தன் ஐயா அவர்களின் உடன் பங்காளி.

வர்ண வேறுபாடுகளை பிராமண வர்க்கம் தான் நிலை நிறுத்தியது என்பது எல்லோராலும் நம்பப்படும் உண்மை. அந்த பிராமண சமூகத்தைச் சேர்ந்த இராஜாஜி போன்ற பெரியவர்களின் ஆசியோடு மதுரையில் மீனாட்சி அம்மன் ஆலயத்திற்குள் வைத்தியநாத ஐயர் பட்டியல் வகுப்பினரை அழைத்துச் சென்றார்களே அதுபோல பழனியில் எந்த அய்யரும் இல்லை. அந்த வேலையை எங்கள் அய்யா பாலகிருஷ்ணன் தான் செய்தார்கள். பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் 20.10.39 ம் நாளன்று பட்டியல் வகுப்பினருக்காய் திறக்கப்பட எல்லா முயற்சியும் செய்து தானே முன் நின்று திறந்து விட்ட பெருமையும் உண்டு.

*1937* மற்றும் *1944* ம் ஆண்டுகளில் இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியின் பலமுனைப் போராட்டங்களைத் தாக்குப் பிடிக்க முடியாமலும், காந்தியடிகள் சத்தியாக்கிரஹப் போராட்டங்கள் வெற்றிபெற்று, அடித்த வெள்ளைக்கார காவல் துறையின் கைகளே ஓய்ந்து போன நிலையில் சுயாட்சித் தத்துவத்தின் ஆரம்பமாக "மாகாண சபைகள்" என்ற தன்னாட்சி அதிகார அமைப்புகளை நிறுவி தேர்தலையும் நடத்தியது. இந்த இரண்டு தேர்தல்களிலுமே அய்யா திரு. பாலகிருஷ்ணன் அவர்கள் இந்திய தேசிய காங்கிரஸ் கட்சி வேட்பாளராக "மஞ்சள் பெட்டியில்" வாக்குகளைப் பெற்று எதிர்த்து நின்ற "சிவப்புப் பெட்டி" வேட்பாளரைத் தோற்கடித்து மாகாண சபை உறுப்பினர் ஆனார்.

இந்தக் கால கட்டத்தில் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் "ஆலோசனைக்குழு" உறுப்பினரானார். ஒடுக்கப்பட்டவர்களிலும் பழனியாண்டவனுக்கு வேண்டப்பட்டவர்கள் இருப்பதையும் பக்தர்கள் பல இலட்சம் பேர் குவிந்து விடுவர் என்கின்ற உண்மையையும் பழனியாண்டவருக்கும் பக்தர்களுக்கும் மத்தியில் ஜாதிய மாச்சரியங்களை முன்னிறுத்தி எவரும் இனிமேல் குறுக்கே நிற்க முடியாதென்கிற உண்மையை ஊரறிய உணர்த்தியதால் 1939 ம் வருடம் பழனியாண்டவர் திருக்கோயில் கதவுகள் அனைத்து மக்களுக்காகவும் திறக்கப்பட்டது. சுதந்திர இந்தியாவில் அதே அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் அறங்காவலர் குழு உறுப்பினரானார்.

இன்றைக்கு தமிழ்நாட்டிலேயே முதன்மையான கல்வி

நிறுவனங்களில் ஒன்றாக வளர்ந்து நிற்கின்ற அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரியை நிறுவியதின் பெருமையில் அய்யா திரு. பாலகிருஷ்ணன் பங்கு மிகப் பெரியதென்பதை யாரும் மறுக்க இயலாது.

பழனியைப் பொறுத்தவரை தேவேந்திரருக்கென்று ஒரு தனி இடமுண்டு. பழனி ஆண்டவன் இன்றைக்கு மிகப்பெரிய வசதி படைத்தவரானது உண்மையே. அந்தக் காலத்தில், கட்டியிருந்த "கோவணத்தை மாற்றிக் கட்ட வழியில்லாமல் நைவேத்தியத்திற்கு ஒருபிடி அரிசியின்றியும் பட்டினி கிடந்த காலமும் உண்டு. அந்த நேரங்களில் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமிக்கு பூஜை செய்த பண்டாரங்கள் ஓடிய இடம் இரண்டே இரண்டுதான். ஒன்று இருளப்பக் குடும்பனார் வீடு, அடுத்தது மங்கள கவுண்டர் வீடுதான். ஆக செல்வச் செழிப்பில் பழனியைப் பொறுத்தவரை தேவேந்திரர் யாருக்கும் குறைந்தவரல்ல.

தமிழகத்தில் தமிழ் மொழியில் ஒடுக்கப்பட்டவர்களுக்கென்று 'பாட்டாளி' என்கிற வாரப் பத்திரிக்கையை நிறுவி தன்னுடைய கருத்துக்களால் ஒடுக்கப்பட்டோரைத் தட்டியெழுப்பிய பெருமை அய்யா அவர்களையே சாரும். நல்ல எழுத்தாளராக உருவாகிய அமரர் திரு. S.C.B. "சேற்றில் செந்தாமரை" என்கிற சமூக சீர் திருத்த நாடகத்தையும் எழுதி கதாநாயகனாயும், இயக்குனராகவும் செயல்பட்ட பெருமையைப் பெற்றவர்.

1950 லேயே சுதந்திர இந்தியாவில் ஹரிஜனங்கள் என்கிற நூலையும் எழுதி வெளியிட்டார். இரண்டாவது வட்ட மேஜை மாநாட்டில் அண்ணல் அம்பேத்கார் கேட்டுக் கொண்டாரே, "அடிமை இந்தியர்களே இன்னொரு சாரரான "பட்டியல் வகுப்பினரை" ஒடுக்கி அடிமைப்படுத்தி வைத்துள்ளனரே, அவர்களுக்கு முதலில் விடுதலை வேண்டுமென்று", அந்தக் கருத்தையே வலியுறுத்தி மிகக் காரமாக எழுதி இருந்தார். துரதிர்ஷ்டவசமாக தற்சமயம் அய்யாவும் உயிரோடு இல்லை; அவர் எழுதிய புத்தகமும் கிடைத்தற்கில்லை.

ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்ல முடியும். அய்யா திரு. பாலகிருஷ்ணன் அவர்கள் உண்மையிலேயே "கொள்கை மறவராய்" "குணக் குன்றாய்" "இரும்பு இதயத்துடன்" அஞ்சா செஞ்சராய் வாழ்ந்தார் என எப்படிச் சொன்னாலும் தகும். விளைவு அரசியலில் பெரும் பதவிகள் அடிவருடிகளுக்குப் போனதே தவிர, அய்யாவுக்குத் தரப்படவில்லை. அதைப் பற்றி அவர்கள் கவலை கொண்டதுமில்லை.

அவர்கள் பழனி வட்டாரத்திற்கே பழனியில் மட்டுமே உயர்நிலைப் பள்ளிகள் இருப்பதை உணர்ந்தும் போக்குவரத்து வசதி மற்றும் பொருளாதார சௌகரியங்களை மனதில் கொண்டு உயர்நிலைப்

பள்ளிக் கல்வியேனும் ஒடுக்கப்பட்டோர் பெற்றிட தன்னுடைய சொந்த இடத்தில் சொந்த செலவில் ஆண்களுக்கென்றும், பெண்களுக்கென்றுமாய் இரண்டு இலவச உணவு மற்றும் உறையுள் கிடைக்க வசதியான விடுதிகளை "ஆண்டவன் ஹாஸ்டல்" என்று ஆண்களுக்கும், "இராஜம் தேவி இல்லம்" என்று தன்னுடைய காலஞ்சென்ற ஒரே மகளின் நினைவாக பெண்களுக்கும் விடுதிகள் அமைத்தார்.

ஒடுக்கப்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்களோடு அந்தக் காலத்தில் "முற்பட்டோராய்", அதே சமயம் வசதி வாய்ப்பற்றோராய் இருந்த கம்மவார் நாய்க்கர்கள், கொங்குவேளாளக் கவுண்டர்கள் குடும்பங்களிலிருந்து மாணவ மாணவியர் இந்த விடுதிகளில் தங்கிப் பயின்றனர்.

பாலசமுத்திரம் ராஜா என்பவர் ஈசநாட்டுக் கள்ளர் இனத்தைச் சேர்ந்தவர். பழனிக்குத் தெற்கே ஆறு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள பாலசமுத்திரம் கிராமத்தைச் சேர்ந்தவர். தஞ்சை மாவட்ட வம்சா வழியினர். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு சில ஆண்கள் ஒடுக்கப்பட்ட சாதியினரை எந்தக் காரணத்திற்காகவேனும் தங்கள் வீட்டு மாட்டுக் கொட்டகையில் கட்டிவைத்து சவுக்கு மற்றும் சாட்டையால் அடித்துத் துன்புறுத்துவது வழக்கம். அதன் மூலம் கிராமத்தில் தங்களுக்கு உள்ள செல்வாக்கை, ஆளுமையை நிலைநிறுத்திக் கொள்வது மட்டும் நோக்கமல்ல பிறருக்கு எச்சரிக்கையாகவும் இந்த செயலை செய்து வந்தனர்.

இதுபோன்ற ஒரு சம்பவம்; பாலசமுத்திரம் இராஜா என்றழைக்கப்பட்ட பாலசுப்ரமணிய துரைராஜ நாடாள்வாரின் மைத்துனன் தங்கச்சாமி பறையர் ஒருவரை கட்டி வைத்து அடிக்கிறார். ஊரே கூடி வேடிக்கை பார்க்கிறது. பழனியில் அய்யா பாலகிருஷ்ணன் வீட்டில் இருக்கிறார். செய்தி கிடைத்ததும், பாலசமுத்திரம் ராஜா என்கிற பாலசுப்ரமணிய துரைராஜ நாடாள்வாரிடமே "காலம் மாறிவிட்டது, தங்களுடைய மைத்துனன் ஒடுக்கப்பட்டோரை கட்டிவைத்து அடிப்பதை உடனடியாக நிறுத்திவிட வேண்டும்; சாட்டை ஒடுக்கப்பட்டவரை மட்டுமல்ல தங்களுடைய ன்மத்துனைனையும் அடிக்கும்; இதை நினைவில் கொள்ளுங்கள்" என்று எச்சரித்தார் அந்த நிமிடம் சாட்டையைக் கீழே எறிந்தவர் மாடு ஒட்டக் கூடக் கையில் குச்சியை எடுக்கவில்லை. காரணம், பார்ப்பதற்கு சாதுவான திரு. பாலகிருஷ்ணன் காரியத்தில் எவ்வளவு தூரம் உறதியானவர் என்பது எல்லோரும் அறிந்திருந்த ஒன்று.

1962-63 வாக்கில் புது ஆயக்குடியில் பறையர்களக்கும் இஸ்லாமியர்களுக்கும் இடையில் மாபெரும் இனக் கலவரம். அய்யா திரு. பாலகிருஷ்ணன் அந்நாளைய திருநெல்வேலி மாவட்டம்

கோவில்பட்டி பாராளுமன்றத் தொகுதி உறுப்பினராக அப்பகுதியில் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருக்கிறார். பற்றி எரிந்து கொண்டிருக்கின்ற இனக்கலவரம் பற்றிய செய்தி சொல்லப்படுகிறது. பாதிக்கப்பட்ட பறையர்களுக்கு ஆதரவாக தேவேந்திரர் படை திரண்டு போருக்குத் தயாராகக் களத்தில் இருக்கிறது.

செய்தியறிந்த அய்யா உடனடியாக அப்போதைய திண்டுக்கல் பகுதிக்கு--இன்று காவல் துறையில் ஒரு துணைத் தலைவர் (D.I.G) பொறுப்பிலும், வருவாய்த் துறையில் மாவட்ட ஆட்சித் தலைவரின் பொறுப்பிலும் இருக்கும்--பொறுப்பான காவல் துறை துணைக் கண்காணிப்பாளர் மற்றும் துணை ஆட்சித் தலைவரையும் தொலைபேசியில் கூப்பிட்டு தான் வந்து கொண்டிருப்பதாகவும், வரும்வரை நிலைமையை சமாளித்து கட்டுப்படுத்தி வைக்குமாறும் கேட்டுக் கொள்கிறார்.

நேரில் நிலைமையை ஆராய்ந்த அய்யா, தவறு செய்தவர்கள், கலவரம் வரக் காரணமானவர்கள் இஸ்லாமியர்கள் என்பதை உணர்ந்ததும், நேரடியாகக் காரை இஸ்லாமியர்கள் தெருவுக்கே ஓட்டச் சொல்கிறார். பலரும் பலவகையில் பயந்தாலும் அதுபற்றி கவலை கொள்ளவில்லை.

நேரடியாக திரு. பாலகிருஷ்ணனே வந்ததும், அச்சமும் அதே சமயம் ஆறுதலும் கொண்ட இஸ்லாமியப் பெரியர்வகளை அய்யா சகட்டு மேனிக்குச் சாடுகிறார்கள். விடலைகளை அடக்கி வைக்காத பட்சத்தில் நிலைமை விபரீதமாகுமென்பதை உணர்த்தியபின், சற்றுத் தணிந்து என்ன செய்யலாமென யோசனையும் கேட்கிறார். இஸ்லாமியப் பெரியவர்கள் "சமாதானமாகப் போய் விடலாம்" என்கிறார்கள்.

காவல் துறை எவ்வளவோ முண்டியும் யார் மீதும் எந்த வழக்கும் பதிவு செய்யாமல் கலவரம் நிமிடங்களில் ஓய்ந்தது. இரு தரப்பாரும் கைகுலுக்கிக் கொண்டார்கள். யாரும் யார் வழிக்கும் போகக் கூடாதென்று சுய கட்டுப்பாடு விதித்துக் கொண்டார்கள். இன்று வரை அது கடைப்பிடிக்கப்படுகிறது. எந்தப் பிரச்சினையில் அய்யா பாலகிருஷ்ணன் தலையிடுகிறாரோ அதற்கு அது அவருடைய ராசியோ என்னவோ, நிரந்தரமான தீர்வுகள் காணப்பட்ட பெருமைக்குரியவர்.

1953-54. அப்போது அய்யா ஈரோடு தொகுதி பாராளுமன்ற உறுப்பினராக இருந்த காலம்; கரூர் நகரம் மற்றும் கரூரைச் சுற்றியுள்ள கிராமங்களில் வாழும் கொங்கு வேளாளக் கவுண்டர்களுக்கும் தேவேந்திரர்களுக்கும் மோதல் ஏற்பட்டுவிட்டது. கிராமங்களில் இருந்த தேவேந்திரர்கள் கொங்கு வேளாளர்களின் அடக்கு முறையைப் பொறுக்க முடியாமல் கையில் கிடைத்ததை மட்டும் எடுத்துக்கொண்டு கிராமங்களைவிட்டுக் காலி செய்து கரூர் மூலனூர் ரோட்டில் இருக்கும்

பள்ளபாளையம் என்கிற கிராமத்தில் ஒட்டு மொத்தமாக திரண்டு விடுகிறார்கள். அப்போது கரூர் சட்டமன்ற உறப்பினராக தோட்டக்குறிச்சி ஜமீன் நல்லசாமி தலைமையின் கீழ் செயல்படுவதாக ஒரு தோற்றம்.

காரணம் திரு. நல்லசாமி பெயரக்கேற்றாற்போல் நல்ல மனிதர். உதாரணத்திற்கு ஒன்று. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதுகளில் திரு நல்லசாமி கரூர் பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவராக இருந்த நேரம். நெரூர் திரு சந்தானம் என்கிற தேவேந்திரர் கரூர் வட்டாரத்தில் மிகப் பிரபல்யமான அரசியல் பிரமுகர் மட்டுமல்ல, செல்வந்தரும் கூட, அவர் யூனியன் துணைப் பெருந்தலைவராக இருக்கிறார்கள். யூனியன் கூட்டத்தில் தகராறு வந்துவிடவே நல்லசாமிக் கவுண்டர் அவர்களை திரு. சந்தானம் தேவேந்திரர் கடுமையாகத் தாக்கி விடுகிறார்கள். பதறிப்போன ஊராட்சி ஒன்றிய ஆணையர் காவல் துறைக்குப் புகார் செய்ய திரு. சந்தானம் தேவேந்திரர் கைது செய்யப்படுகிறார். அதிர்ச்சியுற்றுப் போன நல்லசாமிக் கவுண்டர் நேரடியாக வீட்டுக்குப் போய் விடுகிறார். திரு. சந்தானம் தேவேந்திரர் அவர்களை காவல் துறையினர் கூட்டிச் சென்ற செய்தியை அறிந்து அடுத்த நிமிடம் காவல் நிலையம் சென்று திரு. சந்தானத்தை தன் சொந்த பொறுப்பில் அழைத்து வந்தது மட்டுமல்ல, கொடுத்த புகாரையே வாபஸ் பெறவும் வைத்தார். அன்று நல்லசாமிக் கவுண்டர் சொன்ன சமாதானம்: "சந்தானம் என்னுடைய கோபக்காரத் தம்பி, அவர் அடித்தாலும் நான் பொறுத்துக் கொள்ளக் கடமைப் பட்டவன்; நானே இதை பெரிதுபடுத்தாதபோது, பிறர் கவலை கொள்ளத் தேவையில்லை என்று கூறிய பண்பாளர்.

கரூர் நகரத்தில் கூடிய கவுண்டர் இன மக்கள் பள்ளபாளையத்தில் தஞ்சம் புகுந்துள்ள தேவேந்திரர் அனைவரையும் சேர்த்து ஊரையே தீயிட்டுக் கொளுத்தி விட்டால் எந்தக் காலத்திற்கும் பிரச்சினையே இல்லையென்று பேசித் தீர்மானித்து நேரம் குறித்து ஆள் திரட்டும் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த விபரம் அந்நாளைய கல்லூரிக் காளையாய் பின்னாளில் அய்யா திரு. பாலகிருஷ்ணன் சிபாரிசில் "மாவட்ட முன்சிப்" பதவிபெற்று பின்னாளில் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதியாக இருந்த திரு. மருதமுத்து அவர்கள் மூலமாக அய்யா திரு. S.C.B. காதுகளுக்கு எட்டியது. உடனடியாகக் கரூரில் இறங்கிய அய்யா அவர்கள் தொலைபேசியில் நல்லசாமியைத் தொடர்பு கொண்டு, "என்ன கவுண்டரே! மறைமுகமாக தேவேந்திரர்களையெல்லாம் தீ வைத்துக் கொளுத்துவது வீரமுள்ள செயலல்ல; நீங்கள் ஜமீன்தார், உங்களுடைய பணம் படையெல்லாம் திரட்டிக் கொள்ளுங்கள், நானும் எனது பணத்தையும் படையையும் திரட்டிக் கொள்கிறேன். நேரங்குறித்துச் சொன்னால் அமராவதி ஆற்றில்

யுத்தம் நடத்திக் கொள்ளலாம்" என்று சொல்லி தொலைபேசியை வைத்து விடுகிறார்கள். செய்வதறியாது திகைத்த நல்லசாமி நேரடியாக அந்நாளைய தமிழக முதல்வர் காமராஜருடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு நடந்தவற்றை விளக்குகிறார்.

இப்போது காமராஜரும் அச்சப்படுகிறார். நல்லசாமியிடம் "அய்யய்யோ...பாலகிருஷ்ணன் சொல்வதைச் செய்கின்ற ஆளாச்சே; சாது மிரண்டால் காடு கொள்ளாதென்று தெரியாதா? அடிபட்ட புலியாகவல்லவா பாலகிருஷ்ணன் இருப்பார்; சரி எங்கே இருக்கிறார் என்பது தெரியுமா?" என்று வினவ தெரியாதென்றவுடன், "சரி நீங்கள் எங்கும் போகாதிர்கள் மீண்டும் உங்களைத் தொடர்பு கொள்கிறேனென்று" போனை துண்டித்த மறுவினாடி தமிழக முதல்வர், அப்போதைய திருச்சி மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளரைத் தொடர்பு கொண்டு "எப்படியேனும் பாராளுமன்ற உறுப்பினர் திரு. பாலகிருஷ்ணன்-இருக்கும் இடமறிந்து, நீங்களே நேரில் சென்று என் சார்பாக நாளை காலை வரை அமைதி காக்க வேண்டுமென்றும், நாளை காலை தானே கரூர் வருவதாகவும், நேரில் பேசித் தீர்த்துக் கொள்ளலாம் என்றம் உறுதி கூறி தொலைபேசியில் தொடர்பு செய்து என்னுடன் பேச வையுங்கள்" என்றும் ஆணையிடுகிறார்.

சூழ்நிலையின் விபரீதம் புரிந்துகொண்ட மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளர் மிகுந்த பிரயாசைக்குப் பின்னர் அய்யா அவர்கள் தங்கியிருந்த இடமறிந்து நேரில் சென்று முதலமைச்சர் கூறிய அனைத்தையும் கூறி முதல்வருடன் தொலைபேசி இணைப்பையும் பெற்றுத் தருகிறார். தமிழக முதல்வராக இருந்தாலும் தன்னுடைய நல்ல நண்பர்களை, சகாக்களை எப்போதுமே மதித்துப் போற்றும் காமராஜர் அவர்கள் அய்யா S.C.B. அவர்களுடன் கிட்டத்தட்ட இருபதாண்டு காலப் பழக்கமென்பதால் மிகச் சாதாரணமாக " என்னய்யா சலியாப்புலி என்ன சொன்னே, நல்லசாமி கலங்கிப் போய் விட்டார் எதுவாக இருந்தாலும் எனக்காக நாளை காலை வரை பொறுத்துக் கொள்ளுங்கள், இப்போது புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நாளை காலை நேரில் பேசுவோமென்று ஆற்றுப்படுத்துகிறார்.

மக்கள் தலைவரான காமராஜர் மக்கள் பிரச்சனை என்பதால் நேரடியாகக் களத்திற்கு, கரூருக்கு வருகிறார்கள். இரு தரப்பாரையும் அமர வைத்து அன்று ஏற்பட்ட எழுதாத உடன்படிக்கை இன்று வரை, இந்த இரு சமூகத்தாரிடையேயும் அமலில் இருக்கிறது. இந்த இரு சமூகத்தாரும் அவரவர் எல்லைக்குள், அவரவர் தொழிலைப் பார்த்துக் கொண்டு ஒருவரையொருவர் நம்பி, மதித்து சார்ந்து வாழ்ந்து வருகின்றனர். அங்கொன்றும் இங்கொன்றுமாய் சிறு சிறு சலசலப்புகள்

சமீக காலங்களில் நடந்ததென்றால் அது சில சில்லறை ஆதிக்கவாதிகளின் அடாவடித்தனமே.

குழந்தைப் பருவத்திலேயே தாயை இழந்து தந்தையின் அரவணைப்பில் வளர்ந்த அய்யா பாலகிருஷ்ணன் அவர்கள் இளமையில் தமது பாசத்திற்குரிய தந்தையையும் இழந்து கிட்டத்தட்ட ஒரு அனாதை போல் தனது பெரிய தகப்பனார் சந்தனக் கருப்பக் குடும்பனார் மேற்பார்வையில் வளர்ந்து வாலிபமான நாளிலேயே திரண்ட செல்வத்தைப் பூர்வீகமாக, பாட்டனார் தலைமுறை முதலே வழி வழியாக சுவீகரித்து வந்திருந்ததால் அசாத்தியமான தன்னம்பிக்கையும், தைரியமும் பெற்ற மனிதராக வாழ்ந்திருந்தார்.

உதாரணமாக பண்டிதர் நேருவின் நெடுநாளைய அந்தரங்க உதவியாளர் மத்தாய் அவர்கள் தன்னுடைய "நேருவின் நினைவுகள்" (My Memories of Nehru) என்ற புத்தகத்தில் குறிப்பிட்டுள்ள ஒரு செய்தியைச் சொல்லலாம்.

அப்போதைய காங்கிரஸ் பாராளுமன்றக் கட்சியின் தென்பிராந்தியக் கொறடாவாக அய்யா திரு. ச.சி. பாலகிருஷ்ணன் அவர்கள் பொறுப்பு வகித்த நேரம். முக்கிய தீர்மானமொன்றை பாராளுமன்றத்தின் மக்களவையில் வோட்டெடுப்பில் சந்திக்க வேண்டிய நிர்ப்பந்தம் பண்டிதர் நேரு அவர்களுக்கு. அது குறித்துப் பேசுவதற்காக பண்டிதர் நேரு அவர்கள் அய்யா பாலகிருஷ்ணன் அவர்களை தனது இல்லத்திற்கு அழைக்கிறார். அங்கே எப்போதும் போல் மிக எளிதாகவும், இலாவகமாகவும் கால் மேல் கால் போட்டுக் கொண்டு பண்டிதர் நேருவுடன் அய்யா பாலகிருஷ்ணன் உரையாடுவதைக் கண்ட மத்தாய் அவர்கள் பதறிப் போகிறார்கள். அய்யா பாலகிருஷ்ணன் வந்த பின்பு மத்தாய், பண்டிதரிடம் "ஐயா நீங்கள் எவ்வளவு பெரிய மனிதர், தலைவர் இந்தியாவின் பிரதமர். உங்கள் முன் சமமாக அமர்ந்து ஒரு சாதாரண ஹரிஜன எம்.பி. கால்மேல் கால் போட்டு ஆட்டிக் கொண்டு பேசுதல் ஆகுமோ? தென் மாநிலங்களில் இது மிகவும் மரியாதைக் குறைவான செயல்" என தனது மன ஆதங்கத்தை கொட்டித் தீர்க்கிறார்.

சிரித்துக் கொண்ட பண்டிதர் மெதுவாகப் பேசுங்கள். அவர் காதில் விழுந்து விடப் போகிறது. அவர் ஹரிஜன எம்.பி. அல்ல ஹரிஜன குபேரன்; காதில் விழுந்தசென்றால் உம்மை சும்மா விட மாட்டாரென்று எச்சரித்தாராம். நேரு பெருமகனாரின் பெருங் குணங்களை வியந்து போற்றி விவரித்து வந்த மத்தாய் "நேரு அவர்கள் தன்னுடைய சகாக்கள், நண்பர்கள், பாராளுமன்ற உறுப்பினர்களையெல்லாம் எவ்வளவு அந்தரங்கமாய் அறிந்து வைத்திருந்தார் என்பதற்கு உதாரணமாக மேற்படி செய்தியைக்

குறிப்பிட்டாலும், பாலகிருஷ்ணன் அவர்கள் எப்படி வணங்காமுடியாய் வாழ்ந்திருக்கிறார் என்பதை எண்ணினால் மெய் சிலிர்க்கும்.

1962 களில் வளர்ந்து வரும் சமூக மாற்றங்களுக்கேற்ப தன்னுடைய சொந்த கிராமத்திற்கு ஏதாவது வேண்டுமென்று அய்யா S.C.B. அவர்கள் தீவிரமாக எண்ணி வந்த நேரம். அச்சமயம் திண்டுக்கல் பாராளுமன்றத் தொகுதி உறப்பினராகப் பொறுப்பில் இருக்கிறார். பொதுத் தேர்தலுக்கு நாடு தயாராகிக் கொண்டிருந்த நேரம். அப்போதைய தமிழக அரசு சுகாதாரத்துறை அமைச்சர் மரியாதைக்குறிய திருமதி. ஜோதி வெங்கடாசலம் அவர்கள் அலுவல் சம்பந்தமாக திண்டுக்கல் வட்டாரத்தில் சுற்றுப் பயணம் மேற்கொள்கிறார். 11.5.62 அன்று தன்னுடைய சொந்த ஊரான ஆயக்குடியில் மிகப் பிரமாண்டமான வெகுஜன வரவேற்பொன்றை அம்மையார் அவர்களுக்கு அளித்த அய்யா பாலகிருஷ்ணன் தன்னுடைய பூர்வீக சொத்தில் தேவையான இடத்தையும், தேவையான தொகையையும் கொடுத்து ஒரு அரசு மருத்துவமனையை ஆயக்குடியிலேயே நிறுவிட ஏற்பாடு செய்தார். நான்கு கிலோ மீட்டர் தூரத்திலேயே ஒரு அரசு மருத்துவமனை, பழனிக்கு அடுத்து தமிழ் நாட்டிலேயே ஆயக்குடியில்தான் இருக்கிறதென்ற பெருமையையும் ஏற்படுத்தினார்கள்.

"சக்கிலியன் ஓடை" பழனித் தாலுக்காவில் இருந்ததை யாருமே இன்று நினைவில் கொள்ள முடியாது. 'வரதமாநதி' என்றால் எல்லோருக்கும் தெரியும். காரணம் அணைக்கட்டு வந்து விட்டது. ஆயக்குடி கிராமச் செழிப்புக்கு நிரந்தரத் திட்டங்களில் ஒன்று இது. அய்யா அவர்கள் செல்வாக்குள்ள ஆளுங்கட்சியைச் சேர்ந்த பாராளுமன்ற உறுப்பினராக இருந்ததால் அவரது கோரிக்கைககள் உடனடியாக அதிகாரிகளால் கவனிக்கப்பட்டன. அப்படி உடனடிக் கவனிப்பில் உருவானதே இன்றைய வரதமாநதி அணைக்கட்டுத் திட்டம். அந்நாளைய மதுரை மாவட்ட ஆட்சித் தலைவரான தி. ந. சேஷனுக்கு அய்யா பாலகிருஷ்ணன் எழுதிய கடிதம் தங்கு தடையின்றிப் பரிசிலிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

எப்போதும் தான் பிறந்த மண்ணையும், அதில் வாழும் தன் இனத்தவரின் கல்வி, கலாச்சார மற்றும் பொருளாதார வளர்ச்சியில் தனிக் கவனம் செலுத்தி வந்த ஐயா பாலகிருஷ்ணன் எந்தெந்தத் திட்டத்தால் இவர்களின் முன்னேற்றம் தடையின்றி இருக்கும் என்பதை ஆழ்ந்து சிந்தித்துச் செயல்பட்டார்கள்.

இது மட்டுமல்ல, தமிழ்நாட்டிலேயே, "கூட்டுக் குடிநீர்த் திட்டம்" என்பது இன்று மிகப் பிரபலமாகப் பேசப்படும் திட்டம். அத்திட்டம் இன்றைய வடிவம் பெற முதன் முதலில் பிள்ளையார் சுழி போட்ட பெருமை அய்யா பாலகிருஷ்ணன் 20.04.1966 ல் அன்றைய தமிழக

அரசு பொதுப்பணித்துறை அமைச்சருக்கு எழுதிய கடிதம்தான். அந்தக் கடிதத்தில் பழனி வட்டம் தொப்பம்பட்டி ஊராட்சி ஒன்றியத்தில் அடங்கிய பல கிராமங்களுக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கிட வேண்டுமென்றும் அது ஒரே திட்டமாய், ஒரே செலவாய், முழுவதும் அரசுச் செலவிலேயே இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள்.

அன்றைக்கே மேற்படி பாதுகாக்கப்பட்ட குடிநீர் சண்முக நதியிலிருந்தோ அல்லது அமராவதி ஆற்றிலிருந்தோ எடுத்துக் கொள்ளலாம் எனவும் யோசனை கூறப்பட்டிருந்தது. அது இன்றுவரை கொஞ்சங்கொஞ்சமாய் நிறைவேறி வருகிறது.

தமிழக அளவில் ஒடுக்கப்பட்டோர் வாழ்ந்த இடங்களிலெல்லாம் அவர் புகழ் பரவியிருந்தது. தமிழகத்தில் ஒடுக்கப்பட்டோரின் வாழ்க்கை நிலையறிய பண்டித நேரு அவர்களால் நியமிக்கப்பட்ட இளையபெருமாள் தமிழகத்தைப் பொறுத்தவரை பட்டியல் சாதிகள் என்றால் அது பறையர் தான், தேவேந்திரர்களுக்கு இந்தச் சலுகைகளும், செட்டியூல்டு சாதிகள் பட்டியலில் இடமும் தேவையில்லையென்றபோது, அதை ஆணித்தரமாய் எதிர்த்ததோடு, தேவேந்திரர்களின் இடத்தை செட்யூல்டு சாதிகள் பட்டியலில் தக்க வைத்த பெருமையும் அய்யா பாலகிருஷ்ணன் அவர்களையே சாரும்.

முதுகுளத்தூர் கலவரத்தையும், தியாகி இம்மானுவேல் இராஜசேகரனையும் அறியாத தேவேந்திரர் இருக்க முடியாது. இதில் யாரும் அறியாத ஒன்று, தியாகி இம்மானுவேல் இராஜசேகரனே ஐயா பாலகிருஷ்ணன் அவர்களின் ஒரு தளபதி.

தேசிய அளவிலும் சிறந்த தொண்டராகவே திரு. பாலகிருஷ்ணன் அவர்கள் விளங்கினார். கிட்டத்தட்ட பத்தாண்டு காலம் அகில இந்திய பட்டியல் வகுப்பினர் சேவா சங்கத்தின் பொதுச் செயலாளராய் இருந்து இந்தியா முழுக்க சுற்றி வந்து அன்றைய நாளில் சாத்தியமான அனைத்தையும் செய்தார்கள்.

"நிலவுடைமை" தொன்னூறு சதவிகித மக்களுக்கு இல்லாதிருந்த நிலையில் ஆயக்குடி ஜமீன் நிலங்களை எப்படியேனும் இந்த மக்களுக்குப் பெற்றுத் தர அய்யா பாலகிருஷ்ணன் சிந்தித்து ஆக்கபூர்வமாய் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருந்த நேரமது.

அந்த நிலையில் ஆயக்குடி ஜமீனுக்குச் சொந்தமான நூற்றுக் கணக்கான ஏக்கர் கரிசல் நிலங்களை ஜமீன்தார் ஒபளக் கொண்டம நாய்க்கர் ஆயக்குடி கிராமம் ஜனாப் சினி இராவுத்தர் அவர்களுக்கு கைமாற்றி விட்ட கதையும் தெரிகிறது. அப்போதும் நம்பிக்கை இழக்காத அய்யா பாலகிருஷ்ணன் அவர்கள் அதே ஜமீன்தார், இராவுத்தர் அவர்களிடம் பேசி தன் இன மக்கள் அனைவருக்கும் முதலில் "குத்தகை"

'ஒத்தி' என்று நிலம் பெற்று பின்னர் சரியானதொரு சூழ்நிலையில் அதே நிலங்களை கிரையமே பெற்று ஆயக்குடி தேவேந்திரரில் ஒரு குறிப்பிட்ட விழுக்காடு நிலச்சுவான்தார்களாக்கிய பெருமை அய்யா அவர்களைச் சேரும்.

ஒரு மகனாய் பிறந்த பாலகிருஷ்ணன் அவர்களுக்கு ஆறு மக்கள்

1. இராஜம் தேவி குடும்பினி
2. சண்முக சுந்தரம் தேவேந்திரர்
3. பன்னிருகைச் செல்வன் தேவேந்திரர்
4. இராஜா சின்னக் கருப்பணன் தேவேந்திரர்
5. மோகன்தாஸ் காந்தி தேவேந்திரர்
6. கண்ணன் தேவேந்திரர்

என ஒரு மகளும் ஐந்து மகன்களும். இதில் மூத்த மகள் இளமையிலேயே காலமாகிவிட்டார்கள். அடுத்த மகன் நடுவயதில் விவேகானந்தன் தேவேந்திரர், ஹரி கிருஷ்ணன் தேவேந்திரர் என்ற இரண்டு மக்களை விட்டுக் காலமானார்.

மூன்றாவது மகன் பன்னிருகைச் செல்வன் தேவேந்திரருக்கு இரண்டு பெண் குழந்தைகளும், ஒரு மகனும் உண்டு. அடுத்தவர் இராஜா சின்னக் கருப்பணன் தேவேந்திரர் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் பொறியியல் பட்டமும், சென்னை ஐஐடி யில் முதுபொறியியல் பட்டமும் பெற்று தற்சமயம் அருள்மிகு பழனியாண்டவர் தொழில் நுட்பக் கல்லூரியில் மெக்கானிகல் இஞ்ஜினியரிங் துறைத் தலைவராய் பணிபுரிந்து கொண்டு மனைவி மற்றும் இரண்டு மகன்களோடு வாழ்ந்து வருகிறார்.

ஏனைய இருவரில் திரு மோகன்தாஸ் காந்தி தேவேந்திரர், பி.எஸ்.ஸி., பி.எல்., பட்டம் பெற்றவர். திரு. கண்ணன் தேவேந்திரர் பி.ஏ. பட்டம் பெற்றவர். இவர்களுக்கு இன்னும் திருமணமாகவில்லை. சொந்தத் தொழில்களைக் கவனித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

ஐயா பாலகிருஷ்ணன் அவர்கள் தன் காலத்தில் எதற்காகவும், யார் முன்னும் தலை வணங்காது தன்னுடைய எல்லை எதுவென்று மிகத் துல்லியமாக உணர்ந்து அந்த எல்லைக்குள் நின்று தன்னால் முடிந்தவரை நன்மைகளை மட்டுமே பிறருக்குச் செய்து நேர் நோக்கிய பார்வையுடன் ஒருநாளும் நிலம் நோக்காது வாழ்ந்து மறைந்தார்கள்.



தென்னாட்டுத் தெரசா

# அன்னை வீரம்மாள்

- இ. குணசேகர் M.A., D.I.G. of Prisons (ஓய்வு)
துணைத் தலைவர், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்,
கோயமுத்தூர் -641 046.

தென்னாட்டுத் தெரசா என்று பெருமையுடன் அழைக்கப்படும் தியாகச் செம்மல் அன்னை வீரம்மாள் மள்ளத்தியார் அவர்கள் திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருப்பராய்த்துறையில் தேவேந்திர குல வேளாளர் என்கிற தமிழ் மூவேந்தர் குடியைச் சேர்ந்த வேம்பு மூப்பனார் - பெரியக்கா தம்பதியருக்கு கி.பி 1924-ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் மகளாய்ப் பிறந்தார். ஸ்ரீராமகிருஷ்ண தபோவனமும் இராமகிருஷ்ண குடிலும் அமைந்துள்ள ஆன்மீக ஊரில் தோன்றியுள்ளதால் அன்னை வீரம்மாள் சிறு வயது முதலே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், பகவான் புத்தர், பகவான் மகாவீரர், மகாத்மா காந்தியடிகள் முதலியோரின் உபதேசங்களான அன்பு, அஹிம்சை, மக்கள் சேவை என்ற கொள்கைகள் மனத்தில் ஆழப் பதிந்து அவரைப் பிற்காலத்தில் மக்கள் தொண்டிற்கு இட்டுச் சொன்றன எனலாம்.

திருமணமாகி நான்கு ஆண்டுகள் மட்டுமே இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டு இரண்டு குழந்தைகளுக்குத் தாயான இவர் கடந்த 50 ஆண்டுகளாக இல்லறத் துறவியாக வாழ்ந்து தனது உழைப்பையும் வருமானத்தையும் அநாதைக் குழந்தைகளின் கல்விக்காகவும், உணவிற்காகவும், நல்வாழ்விற்காகவும் நலிவுற்ற பெண்களின் முன்னேற்றத்திற்காகவும், முதியோர் மற்றும் ஊனமுற்றோர் நல்வாழ்விற்காகவும் அர்ப்பணித்து அவர்களுடனேயே வாழ்ந்து வருகிறார்.

அந்தக் காலத்தில் பதினோராண்டுக் கல்வித் திட்டத்தில் எஸ்.எஸ்.எல்.சி தேர்வில் தேர்ச்சி பெற்றார். ஆசிரியர் பயிற்சி பெற்று பள்ளி ஆசிரியர் ஆனார். பள்ளி ஆசிரியராகத் தொடராமல் 1945-இல் அகில இந்திய வானொலியில் "கலைஞராக"ச் சேர்ந்தார். தொடர்ந்து 40 ஆண்டுகள் வானொலியில் கலைஞராகப் பணிபுரிந்து 1984-இல் ஓய்வு பெற்றார். ஆயிரக்கணக்கான நாடகங்களையும் நிகழ்ச்சிகளையும் எழுதி நடித்து வானொலியில் ஒலி பரப்பியுள்ளார். இவரது நிகழ்ச்சிகள் பெண்கள், குழந்தைகள் மற்றும் சமூகத்தில் விழிப்புணர்வையும் முன்னேற்றத்திற்கான வழிமுறைகளையும் சொல்லவதாக அமைந்திருந்து மக்களிடம் பெரும் வரவேற்பைப் பெற்றிருந்தன.

அகில இந்திய வானொலியில் பணிபுரிந்து கொண்டே அதிலிருந்து வரும் வருமானத்தைத் தமது சமூக சேவைகளுக்காகத் தொடர்ந்து செலவழித்து வந்தார்.

1954-ஆம் ஆண்டு பெண்கள் நலச் சங்கத்தைத் தொடங்கினார். ஏழைக் குழந்தைகள், ஆதரவற்ற பெண்கள், அநாதைக் குழந்தைகள் மற்றும் பெண்கள் எல்லோரும் கல்வி கற்று வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற உயர்ந்த குறிக்கோளுடன் தனது முழு ஊதியத்தையும் உழைப்பையும் செலவிட்டார்.

திருச்சிராப்பள்ளி பீம நகரில் 'அன்னை வீரம்மாள் பாலர் பள்ளி' என்ற பெயரில் இரண்டரை வயது முதல் ஐந்து வயதுள்ள குழந்தைகளுக்குப் பள்ளிக்கு முன் கல்வியும், பயிற்சியும், விளையாட்டும், சத்துணவும் அளித்து நடத்தி வந்தார். அன்னை ஆசிரமம் என்ற சேவை நிறுவனத்தை ஏற்படுத்தி பெற்றோர் இல்லாத 150 பெண் குழந்தைகளுக்கு (5 வயது முதல் 18 வயத வரை) உணவு, உறையுள், மற்றும் பள்ளிக் கல்வி பயில வசதி செய்துள்ளார்.

அன்னை வீரம்மாள் அவர்களின் சேவையை அறிந்து பல சேவை உள்ளம் கொண்டவர்களும், நிறுவனங்களும் அவரது செயல்பாடுகளுக்கு உதவியாக நிதியும் மற்றும் பல உதவிகளையும் மனமுவந்து செய்து வருகின்றனர். திருச்சி பீமநகரிலும், திருச்சி விமான நிலையத்திற்கு அருகில் உள்ள வினோபா நகரிலும் 'அன்னை ஆசிரம வளாகம்' அமைத்து பல கட்டிடங்களையும் கட்டியுள்ளார்கள். இந்திய அரசும் தமிழ்நாடு அரசும் நெதர்லாந்து டெரேடால் ஹோம்ஸ் என்ற அமைப்பும் கட்டிட நிதியுதவிகள் செய்துள்ளன.

இந்த அன்னை ஆசிரம வளாகத்தில் அமைந்துள்ள சேவை அமைப்புகள்

1. பெண்கள் நலச் சங்கம்
2. அன்னை ஆசிரமம்
3. இலவச பாலர் பள்ளி
4. இலவச முதியோர் பள்ளி
5. இலவச நூல் நிலையம்
6. இலவச தையல், பூ வேலைக் கைத்தொழில் நிலையம்
7. இலவச குழந்தைகள் காப்பகம்
8. குடும்ப நலப் பணி மையம்
9. சத்துணவு மையம்

10. இலவச மருத்துவமனை

11. முதியோர் இல்லம்

12. ஊனமுற்றோர் மறுவாழ்வு இல்லம்

13. தொடக்கப் பள்ளி

14. மகளிர் மேல்நிலைப் பள்ளி

15. பெண்கள் விடுதி

16. தொழிற் பயிற்சிக் கூடங்கள் (அச்சகம், புத்தக பைண்டிங், அகர்பத்தி, அம்பர் சர்க்கா முதலியன)

இப்பெண்குலப் பெருந்தகையின் சேவையைப் பாராட்டும் வகையிலும் அவரது ஆற்றல்களையும், திறமைகளையும் அறிவுரைகளையும் தங்கள் அமைப்புகளுக்குப் பயன்படுத்தும் வகையிலும் பல அமைப்புகள் அன்னை வீரம்மாள் மன்னாத்தியார் அவர்களை அறிவுரைக் குழுக்களில் உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டுள்ளன. அவைகளில் சில வருமாறு. 1. கில்டு ஆப் சர்வீசஸ் இந்தியா, 2. செஞ்சிலுவைச் சங்கம், 3. பாரத் சேவக் சமாஜ், 4. சர்வோதய சங்கம், 5. காந்தி அமைதி காப்பு மையம், 6. குடிமக்களின் திட்டக் குழு, 7. நேரு வேலை வாய்ப்புத் திட்டக் குழு, 8. ஸ்பாஸ்டிக் சொசைட்டி, 9. மாவட்ட பாதுகாவல் குழு, 10. அரசு மருத்துவமனை, 11. அரசு பாதுகாப்பு இல்லம், 12. தமிழ்நாடு சமூக நல வாரியம், 13. மாநில சட்ட உதவிக் குழு, 14. அரசு மகளிர் விடுதி முதலிய 25 அமைப்புகளில் சேவை புரிந்துள்ளார்.

அன்னை வீரம்மாள் அவர்களுக்குப் பல அமைப்புகளும் நற்பணி நாயகி, சமூக சேவைச் சுடர், பிறர் நலப் பெருந்தகை, பெண்குலப் பெருந்தகை, தென் இந்திய அன்னை தெரசா முதலிய பல பட்டங்களைக் கொடுத்துள்ளன.

பல நிறுவனங்கள், அமைப்புகள் அன்னையின் சேவையைப் பாராட்டி விருதுகளும் வெகுமதிகளும் அளித்துள்ளன.

1. குழந்தைகள் நலம் காப்பதற்கான தேசிய விருது

2. பெண்கள் நலம் காப்பதற்கான சிறிராம் வாஷீரன் தேவி பாட்டியா விருது - 1993

3. பெண்கள் முன்னேற்றத்திற்கான செயல்பாடுகளுக்கு புதுதில்லி FICCI மகளிர் சங்க விருது - 1985

4. தமிழ்நாடு அரசு சமூக நலத்துறை மற்றும் சத்துணவுத் துறையின் "சிறந்த நிறுவன விருது" - 1996-1997

5. அன்னை தெரசாவின் ஆசிகள் - 1983

அன்னை வீரம்மாள் அவர்களின் சேவைகளைப் பாராட்டி கடந்த 40 ஆண்டுகளாக 1960-லிருந்து பல ஆங்கிலம் மற்றும் தமிழ் நாள், வார, மாத இதழ்களும் நூற்றுக்கணக்கான சிறப்புக் கட்டுரைகள், செய்திக்கட்டுரைகள் வெளியிட்டுச் சிறப்பித்துள்ளன. இவர்களது சேவைகளை விவரித்துப் பாராட்டி சிறப்பு மலர்களும் வெளியிடப்பட்டுள்ளன.

எழுபத்து ஐந்து வயது நிரம்பிய அன்னை அவர்களால் பயன் பெற்றோர் பல்லாயிரக் கணக்காவார்கள். அம்மையார் அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் தமது நற்பணிகளைத் தொடர இறைவன் அருள்புரிய வேண்டுகிறோம்.



# பழனி வட்டாரம் பழையூர் - மஞ்சநாயக்கன்பட்டி பூர்வீக வரலாறு

- மா. கிருஷ்ணசாமி I.R.S.
ஆயக்குடி, பழனி,
திண்டுக்கல் மாவட்டம்

பழனியிலிருந்து திண்டுக்கல் செல்லும் நெடுஞ்சாலையில் 10வது கிலோ மீட்டரில் மாட்டுப்பாதை பிரிவு உள்ளது. இந்த இடத்திலிருந்து வடதிசையில் 1.6 கி.மீ. தொலைவில் மஞ்சநாயக்கன்பட்டி என்ற கிராமம் உள்ளது. இந்த ஊரில் இருந்து கிழக்காக வேலூர் செல்லும் பாதையில் 1 கி.மீ. தொலைவில் பழையூர் விநாயகர் சிலை உள்ளது. இவ்விடம் பழனிப் பகுதியைச் சார்ந்த தேவேந்திரகுல வேளாளர்கள் வரலாற்றில் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

முற்காலத்தில் தேவேந்திரகுல வேளாளர்கள் இனத்தைச் சார்ந்த மஞ்சம்மாள் தனது இரண்டு மகன்களுடன் தெற்குச் சீமையிலிருந்து வந்து பழையூர்ப் பகுதியில் குடியேறினார். இவர்களைத் தொடர்ந்து அதே பகுதியில் தொட்டிய நாயக்கர் இனத்தைச் சார்ந்தவர்களும் குடியேறி வாழ்ந்து வந்தனர். மஞ்சநாயக்கன்பட்டி மக்களால் பழையூர் என்றழைக்கப்படும் அவ்விடத்தில் தற்பொழுது ஊர் எதும் இல்லை. விநாயகர் சிலை மட்டுமே உள்ளது. இதனருகில் சல்லூத்து ஓடை அல்லது இருளாயி ஓடை என்ற சிற்றாறு ஓடிக்கொண்டிருக்கிறது. தெற்கே மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகும் பெரியதுரை ஆற்றிலிருந்து வரும் தண்ணீர் இந்த சிற்றாறில் ஓடுகிறது. இருளாயி என்ற தேவேந்திரகுல வேளாளப் பெண்மணி இந்த ஓடை நீரினால் அடித்துச் செல்லப்பட்டதால் இருளாயி ஓடை எனப் பெயர் வரப்பெற்றது என அப்பகுதி வாழ் மக்கள் கூறுகின்றனர்.

பழையூர் பகுதி மிகவும் தாழ்வான பகுதியாக இருப்பதால் மழைக் காலங்களில் அங்கு குடியிருப்பது கடினமாகியது. எனவே, மஞ்சம்மாள் மற்றும் அவரது உறவினர்கள், தொட்டிய நாயக்கர்கள் அங்கிருந்து குடிபெயர்ந்து மேட்டுப்பாங்கான பகுதியை நோக்கி மேற்குப்புறம் நகர்ந்து 1 கி.மீ. தள்ளி தங்கள் இருப்பிடங்களை அமைத்து வாழ்ந்து வந்தனர். மக்கள் தொகை பெருக்கத்தினால் ஊர் பெரிதாகியது. இப்பகுதிக்கு பெயர் வைக்க விரும்பிய மஞ்சம்மாள் நாயக்கர் இனத்தைச் சார்ந்த ஒரு பெரியவருடன் ஆலோசனை கலந்தார். அப்பெரியவரும் இப்பெண்மணியின் பெயருடன் தன் இனத்தின் பெயரையும் சேர்த்து மஞ்சநாயக்கன்பட்டி எனப் பெயரிட்டார். அப்பகுதியில் உள்ள நிலங்கள்

பெரும்பாலும் தேவேந்திரகுல வேளாளர்களுக்கே சொந்தமாக இருந்தன. இவர்கள் வேளாண்மைத் தொழிலை முதன்மையாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

வேளாண்மைக்குத் தேவைப்படும் மாடு கன்றுகள் நிறைய பெருகின. அவைகளை தென்பகுதியில் உள்ள பெரியதுரை கோம்பைக்கு மேய்ச்சலுக்கு கொண்டு செல்வார்கள். மாடுகள் செல்லும் பாதையின் இருபுறங்களிலும் அகலமான கற்களை நட்டு வைத்தார்கள். மாடுகள் மேய்ச்சலுக்குச் செல்லும்போது அவற்றில் உராய்ந்து செல்வது வழக்கம். எனவே தான் இப்பாதைக்கு மாட்டுப் பாதை எனப் பெயர் வந்ததாகக் கூறுகிறார்கள். மாடுகளின் எண்ணிக்கை மிக அதிகமாகியதால் அவற்றைப் பராமரிக்க ஆட்கள் தேவைப்பட்டார்கள். எனவே, கொங்கு வேளாளக் கவுண்டர் இனத்தைச் சார்ந்த சிறுவர்கள் சிலரை வேறு ஊர்களிலிருந்து அழைத்து வந்தனர். அச்சிறுவர்கள் வளர்ந்து வாலிபப் பருவத்தை அடைந்தனர். அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பிய தேவேந்திரகுல வேளாளர்கள் அச்சிறுவர்களின் ஊர்களுக்குச் சென்று பெண் கேட்டனர். அதற்கு அந்த ஊர்க் கவுண்டர்கள் சொத்து சுகம் இல்லாதவர்களுக்குப் பெண் கொடுக்க இயலாது எனக் கூறிவிட்டனர். இயற்கையிலேயே தாராள குணம் படைத்த தேவேந்திர குல வேளாளர்கள் தங்கள் நிலங்களை கவுண்டர் இனத்து வாலிபர்களுக்கு கொடுத்து பின் திருமணம் செய்து வைத்து மீண்டும் மஞ்சநாயக்கன்பட்டிக்கே மாப்பிளை பெண்களை அழைத்து வந்தனர். படிப்படியாக கவுண்டர் இன மக்கள் தொகை பெருகியது. இதனால் தேவேந்திரகுல மக்கள் மீதமுள்ள நிலங்களையும் கவுண்டர்களுக்கே கொடுத்து விட்டு ஆயக்குடி போன்ற ஊர்களுக்கு இடம் பெயர்ந்து வந்துவிட்டனர்.

பழையூர் விநாயகர் சிலை அருகில் உள்ள தோட்டம் இன்றைக்கும் குடும்பன் தோட்டம் என்றே அழைக்கப்படுகிறது. தற்பொழுது ஒரு செட்டியார் வசம் அந்தத் தோட்டம் உள்ளது. இதற்கு அருகில் தொட்டியன் சுடுகாடு என்ற இடமும் இன்றைக்கும் உள்ளது. மஞ்சநாயக்கன்பட்டியில் மையப் பகுதியில் உள்ள காளியம்மன் கோயில் தேவேந்திரகுல வேளாளர்களுக்குச் சொந்தமானது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு வரை முதல் மரியாதை இம்மக்களுக்குத்தான் இருந்தது. தற்பொழுது அந்த ஊரில் தேவேந்திரர்கள் யாரும் இல்லை. கோயிலுக்கு உரிமையுள்ள மள்ளர்கள் சிந்திலவாடம்பட்டி, ஆயக்குடி, பச்சளநாயக்கன்பட்டி, ஏரமநாயக்கன்பட்டி போன்ற ஊர்களில் உள்ளனர். இவர்கள் எவரும் உரிமை கொண்டாடி கோயிலுக்குச் செல்வதில்லை. இன்றைக்கும் மஞ்சநாயக்கன்பட்டியின் மையப் பகுதியில் "பள்ளன் படைக்கால்" என்றழைக்கப்படும் பகுதி உள்ளது. ஊரின்

மேற்குப் பக்கம் மஞ்சம்மாள் வம்சவழியினரின் தோட்டம் உள்ளது. அதுவும் 'குடும்பன் தோட்டம்' என்றே தற்பொழுதும் அழைக்கப்படுகிறது. தோட்டத்தின் உரிமையாளர் சுப்பையகவுண்டர் மகன் முத்துக்குமார். இத்தோட்டத்தில் மிகப்பெரிய புளியமரம் ஒன்றிருந்ததாகக் கூறுகிறார்கள். தற்பொழுது அம்மரம் இல்லை. அவ்விடத்தில் யானைத் தொட்டி ஒன்று இப்பொழுதும் உள்ளது. இடையகோட்டை ஜமீன்தார் மஞ்சம்மாள் வம்சாவளியினரின் நண்பர். இவர்களைப் பார்க்க ஜமீன்தார் யானையில் வருவாராம். யானையின் தண்ணீர்த் தேவைக்கென்றே இந்தத் தொட்டியை பெரிய பாறையைக் குடைந்து செய்து உள்ளார்கள்.

மஞ்சநாயக்கன்பட்டியிலிருந்து வடக்கு நோக்கி ஒரு ரோடு காளிபட்டி என்ற ஊருக்குச் செல்கிறது. இந்த ரோட்டில் 2 கி.மீ. தொலைவில் செல்லாண்டியம்மன் கோவில் உள்ளது. செல்லாண்டியம்மன் சிலை பத்து கைகளையுடையதாகவும் அதனடியில் ஒரு குழந்தை படுத்து இருப்பது போலவும் அமைக்கப்பட்டுள்ளது. இந்தக் கோயிலுக்கு அருகில் வில்வ மரம் உள்ளது. அதனருகில் 'பசிவக் குடும்பன்' வகையறாவைச் சேர்ந்த முன்னோர்களின் உருவச்சிலைகள் நான்கு உள்ளன. இந்த கோயிலில் இருந்து கிழ்திசையில் 1/4கி.மீ. தொலைவில் செங்குளம் உள்ளது. குளத்தில் பரப்பு 180 ஏக்கர். குளக்கரையில் ஆலமரத்தடியில் பெருமாள் கோயில் ஒன்று உள்ளது. குளத்திற்குள் இரண்டு சிலைகள் உள்ளன. குளத்தில் நீர் நிறைந்து இருக்கும் காலங்களில் சிலைகள் வெளியில் தெரிவதில்லை. இப்பகுதியில் உள்ள நிலங்கள் யாவும் 'பசுவக் குடும்பன் வகையறாக்களுக்குச் சொந்தமாக இருந்தன. இரண்டு கோயில்களின் பராமரிப்புக்காக சுமார் 15-20 ஏக்கர் நிலங்களை மானியமாக "பசுவைக் குடும்புன்" கூட்டத்தினர் வழங்கியுள்ளனர். பத்ரகாளியப்பன் மற்றும் பழனிச்சாமி நாயக்கர் பரம்பரை பரம்பரையாக மானிய நிலங்களை அனுபவித்து வருகின்றனர். தற்பொழுது இப்பகுதியில் தேவேந்திரர்கள் யாரும் குடியிருக்கவில்லை. இன்றும் ஆயக்குடியிலிருக்கும் பசுவக் குடும்பன் கூட்டத்தினர் ஆண்டுக்கு ஒரு முறை கோயில்களுக்கு வந்து ஆட்டுக்கிடா வெட்டி பூசை செய்கின்றனர். இதுவும் அருகி வருகிறது. இவ்வாறு இயற்கையிலேயே தயாள சிந்தனை உள்ள மள்ளர்கள் சேர, சோழ, பாண்டிய மன்னர்களாக வாழ்ந்து சிற்றரசர்களாகத் தேய்ந்து நில உடமையாளர்களாக குறுகி தற்போது பள்ளர்களாக மாற்றப்பட்டு சொந்த மண்ணிலேயே இரண்டாந்தரக் குடிமக்களாக கருதப்பட்டு வருகின்றனர்.

இத்துடன் பழம்பெருமையும் பாரம்பரியமும் உள்ள தேவேந்திரகுல வேளாளர்கள் தங்களின் உயர்குடி பிறப்பின் பெருமையை அறியாமல்

தாழ்வு மனப்பான்மையில் உழன்று கொண்டிருக்கின்றனர். இந்நிலை மாறி தமிழகத்தில் ஐந்தில் ஒரு பங்கு உள்ள இவர்கள் ஆட்சிக் கட்டிலில் அமர வேண்டும்.

> குடி செய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
> மடிதற்றுத் தான்முந் துறும்
>
> குறள்... (1023) (குடி செயல்வகை)

**தகவல் அளித்தவர் :**

திரு சப்ளிக்குடும்பன் கூட்டத்தைச் சேர்ந்த திரு. பொன்னிமலைக் குடும்பன் (வயது 81), சிந்திலவாடம்பட்டி.

**தகவல் சேகரிப்பு :**

1. திரு. மா. கிருஷ்ணசாமி, ஐ.ஆர்.எஸ்.
2. திரு. பேராசிரியர் செ. கிருஷ்ணன், எம்.ஏ.,

**உதவி :**

1. திரு. தங்கவேலு வைத்தியர், சிந்திலவாடம்பட்டி.
2. திரு மு. சண்முகசுந்தரம், ஆசிரியர், ஆயக்குடி.



## மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் பற்றிய வரலாறு மற்றும் பண்பாட்டு ஆய்வு நூல்கள்


1. இரா. தேவஆசிர்வாதம், **மூவேந்தர் யார்?**, ஜுலை 1977, இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர் - 613 007.

2. இரா. தேவஆசிர்வாதம், **வேளாளர் யார்?**, ஜனவரி 1981, இராமதேவன் பதிப்பகம், 180 யாகப்பா நகர், தஞ்சாவூர்-613 007.

3. இரா. தேவஆசிர்வாதம், **பள்ளர் அல்ல, மள்ளர் ஆம் மன்னர்**, 1991, இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர் தஞ்சாவூர்-613 007.

4. இரா. தேவஆசிர்வாதம், **மூவேந்தர் யார் (திருந்திய பதிப்பு)**, 1992, இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர்-613 007.

5. இரா. தேவஆசிர்வாதம், **தமிழ் மூவேந்தர் மரபினரான தேவேந்திரர் வீழ்ச்சி**, 1998, இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர் - 613 007.

6. முனைவர் குருசாமி சித்தர், **தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்)**, 1993 தேவேந்திர மன்றம், 5/1 குருசாமி நகர், கோயமுத்தூர்-641 046.

7. முனைவர் குருசாமி சித்தர், முனைவர் தே. ஞானசேகரன், (ப.ஆ), **தமிழர் பண்பாட்டு வரலாறு - 1996**, தொகுதி I (33 அறிஞர்களின் கட்டுரைத் தொகுப்பு) 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

8. முனைவர் குருசாமி சித்தர், முனைவர் தே. ஞானசேகரன் (ப.ஆ) **தமிழர் பண்பாட்டு வரலாறு - 1998**, தொகுதி II (40 அறிஞர்களின் கட்டுரைத் தொகுப்பு), 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

9. முனைவர் தே. ஞானசேகரன், **தலித் சிந்தனை விவாதம்**,- 1999, மாமன்னர் பதிப்பகம், 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

10. முனைவர் சு.வேங்கடராமன், **பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள்**, 1998, தேவேந்திர மன்றம், 5/1 குருசாமி நகர், கோயமுத்தூர்-641 046.

11. முனைவர் குருசாமி சித்தர், (ஆ), **மள்ளர் மலர்**, தமிழ் திங்களிதழ், 1995 சனவரி முதல் தொடர்ந்து வெளிவருகிறது. தேவேந்திர குல வேளாளர் சங்கம், 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

12. முனைவர் அ. அறிவுநம்பி, **கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு**, 1999 தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

13. புலவர் கி.ஆ. குப்புராசு சரோஜினி, **மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்களின் குலப்பிரிவுகளும் கூட்டமுறைகளும்**, 2000, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2, நால்வர் நகர், கோயமுத்தூர் - 641 046.

14. முனைவர் தி. கமலி கஜேந்திரன், **சங்க இலக்கியத்தில் மள்ளர்தம் மாண்புகள்**, 2000, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2, நால்வர் நகர், கோயமுத்தூர் - 641 046.

15. முனைவர் சி. பரமேஸ்வரி, **தேவேந்திர குல வேளாளர் வரலாறும் சமூக அரசியல் எழுச்சியும்**, 2000, அறிவகம், சி-1, ஆசிரியர் குடியிருப்பு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயமுத்தூர் - 641 046.

16. முனைவர் சி. பரமேஸ்வரி, **மள்ளர் வாழ்வும் வழிபாடும்**, 2000, அறிவகம், சி-1, ஆசிரியர் குடியிருப்பு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயமுத்தூர் - 641 046.

17. **நட்பு** (மள்ளாரியச் சிறுகதைகள்), 2000, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2, நால்வர் நகர், கோயமுத்தூர் - 641 046.

18. முனைவர் குருசாமி சித்தர் & முனைவர் தே. ஞானசேகரன் (தொகுப்பாசிரியர்கள்), **தமிழர் பண்பாட்டு வரலாறு - 2000**, தொகுதி III, ஆகஸ்டு 2000 தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2, நால்வர் நகர், கோயமுத்தூர் - 641 046.

19. முனைவர் குருசாமி சித்தர், **பள்ளு இலக்கியங்களில் நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்தச் செந்நெல் முதுகுடியினர் வாழ்வியல்**, ஆகஸ்டு 2000, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2, நால்வர் நகர், கோயமுத்தூர் - 641 046.

# நாட்டுப்புறப் பாடல்கள் உணர்த்தும் தேவேந்திர குல வேளாளரின் சமூகப் பழக்க வழக்கங்கள்

## (சிவகாசி வட்டாரம்)

கா. அரசகுமார்
தமிழியற்புலம், மதுரை காமராசர்
பல்கலைக்கழகம், மதுரை 625 021

பண்பாட்டின் சின்னங்களாகத் திகழ்கின்ற கிராமங்கள் ஒரு சமூகத்தின் பண்பாட்டுப் பழமையைப் பேணிப் பாதுகாக்கின்றன. அந்த முறையில் தேவேந்திர குல வேளாளர் பற்றிப் பலர் ஆய்வு மேற்கொண்டு இருந்தாலும் சிவகாசி வட்டாரத்தில் வாழ்கின்ற இவ்வின மக்களின் பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும், வாழ்க்கை நிலையினையும் நாட்டுப்புறப் பாடல்கள் வழியாகச் சிறப்பாக விளக்கும் நோக்கிலேயே இவ்-ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. நாட்டுப்புறப் பாடல்களில் மிகுதியும் காணப்படுவதால் இவ்வினமக்கள் மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் படுகின்றனர். இவ்வினத்து மக்களின் பழக்க பழக்கங்களைக் காண்பதே நோக்கமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

### நாட்டுப் புறப் பாடல் - விளக்கம்

நம்நாட்டில் மேலைநாட்டின் நாகரிகம், பண்பாடு முதலியவை புழக்கத்தில் இருந்து வருகின்றன. அவை நம் பண்பாட்டை அழித்து விடாதபடிப் பாதுகாப்பது நமது கடமையாகும். நமது பழைய பண்பாட்டைக் காத்து வருவன கிராமங்களே. ஆனால் இன்று கிராமங்களையும் மேலைநாட்டு நாகரிகம் தாக்கத் தொடங்கிவிட்டது. கிராமங்களின் பண்பாடு, நாகரிகம், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றினை அவர்களுடைய வாய்மொழிப் பாடல்கள் மூலம் அறியலாம். இவ்வாய்மொழிப் பாடல்களே நாட்டுப்புறப் பாடல்கள் என அழைக்கப் படுகின்றன. இவை எந்த காலகட்டத்திலே உருவானவையென்று விளக்கமாகக் கூற முடியாது. வழிவழியாகக் குழந்தை முதல் பெரியவர் வரை பாடப்பட்டு வந்ததாகக் கருதப்படுகின்றது.

பழங்காலத்திலிருந்தே பாடப்பட்டுவரும் இந்நாட்டுப்புறப் பாடல், தொல்காப்பியர் கூறும் 'பண்ணத்தி' வகையினைக் குறிக்கும் என்று கருத இடமளிக்கிறது.

> பாட்டிடைக் கலந்த பொருளவாகிப்
> பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே

என்பது தொல்காப்பியம் ஆகும்.

இந்தியாவில் முதல் நாட்டுப்புறப் பாடல் தொகுப்பு சார்லஸ் இ.கோவர் என்ற ஆங்கிலேயரால் வெளியிடப்பட்ட "(The folk songs of

southern India) என்னும் ஆங்கில நூலே என்று கருதப் படுகிறது. பர்சிமாக்வீன் என்னும் மேலை நாட்டு அறிஞர் சேகரித்த நாட்டுப்புறப் பாடல் தொகுப்பு கி.வ.ஜ.கன்நாதன் அவர்களின் முயற்சியால் 1958-ல் மலையருவி என்னும் பெயரில் வெளிவந்துள்ளது. 1943-ல் மு. அருணாசலம் அவர்கள் தாம் தமிழர் என்ற நிலையில் முதலில் 'காற்றில் மிதந்த கவிதை' என்ற நூலை வெளியிட்டார் எனலாம்.

## நாட்டுப்புறப் பாடல்கள் உணர்த்தும் நம்பிக்கைகள்

ஒருவரை ஒருவர் நம்புவதாலேயே நாட்டு வாழ்வும் வீட்டு வாழ்வும் சிறக்கின்றன. ஆனால் 21-ஆம் நூற்றாண்டைத் தொட்டுள்ள நாம் நம்பிக்கைகளை முழுதும் நம்ப மறுக்கின்றோம். ஏனெனில், இன்றைய நிலையில் பல்வேறு சூழ்நிலைகளில் அவநம்பிக்கை உண்டாக வாய்ப்புள்ளது. ஆகவேதான் அவநம்பிக்கையை விடுத்து அவற்றைப் போக்கும் ஆண்டவனிடம் முழுதும் நம்பிக்கை வைக்கின்றோம்.

"நம்பினார் கெடுவதில்லை - நாலு மறைத் தீர்ப்பு
அம்பிகையைச் சரணடைந்தால் - அனைத்து வரம் பெறலாம்"

என்று பாரதி இறை நம்பிக்கையினைப் பற்றி தெளிவுபடுத்துகின்றான்.

அக்கால மக்கள் தெய்வ நம்பிக்கை, சடங்குகளின் நம்பிக்கை, கண்ணேறு கழித்தல் போன்றவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆனால் தற்பொழுது படித்தவர்களிடம் இவ்வித நம்பிக்கைகள் காணப்படுவது அரிதே.

## நாட்டுப்புறப் பாடல்கள் வழி அறியலாகும் பழக்க வழக்கங்கள்

தேவேந்திர குல வேளாளரின் சமூகப் பழக்க வழக்கங்களாக அறிப்படுவது யாதெனில்:

1. சமுதாய நிலை மற்றும் நம்பிக்கைகள்
2. தெய்வ வழிபாடு
3. தொழில்கள்

என்பனவாகும்.

### 1. சமுதாய நிலை மற்றும் நம்பிக்கைகள்

முன்னைய தேவேந்திரகுல வேளாளர் நிலையினை விட இப்பொழுது அவ்வினம் பெரிதும் முன்னேற்றம் கண்டிருக்கின்றது. அன்றும், இன்றும் பொருளாதாரத்தில் பின்தங்கியுள்ள இவ்வினத்தார் தற்சமயம் சமூகத்தில் ஒரு தனி இடத்தைப் பெரும் அளவிற்கு உயர்ந்து வந்துள்ளனர். முக்கியமாகக் கல்வித்துறையினில் பெரிதும் வளர்ச்சி அடைந்து வருகின்றனர்.

தொன்மையிலிருந்தே இவ்வினத்தினர் பெரும்பாலும் தம்